அவள் அழகுதான் என்ன—சமூகத்தில் அவள் மதிப்புதான் என்ன!

அவள் உபயோகிப்பது டாடாவின்

# ஜேய்




மனங்கவரும் மணமுள்ள சௌம்யமான டாய்லெட் சோப்பு!

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

TJ. 5026

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17 | இதழ் 30

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

ஹேவிளம்பி மாசிமீ 12உ

# பெங்களூர் மகாநாடு

தென் ராஜ்யங்களைச் சேர்ந்த நில உடைமையாளர்கள் பெங்களூரில் கூடி, பாரத சர்க்காருக்கும் ராஜ்ய சர்க்காருக்கும் மிகவும் கவனிக்க வேண்டிய எச்சரிக்கை விடுத்திருக்கின்றனர்.

இதுவரை செய்யப்பட்ட சட்ட மாறுதல்கள் நிலச் சொந்தக்காரர்களை வேண்டியளவு பீதி கொள்ளச் செய்திருக்கின்றன. இன்னும் தொடர்ந்து சீர்திருத்தம் என்ற பெயரால் ஏதாவது செய்தால் உணவு உற்பத்தியைப் பெருமளவு குறைப்பதாகத்தான் முடியும். உணவு உற்பத்திப் பெருக்கத்துக்குப் பதிலாக வேலையில்லாமல் திண்டாட ஒரு புது சமூகத்தை உற்பத்தி செய்ததாகும் என்று தக்க சமயத்தில் எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்!

எல்லா நிலச் சொந்தக்காரர்களையும் பிற்போக்குவாதிகள் என்று சொல்லி அலட்சியப்படுத்துவதற்கில்லை. பாரத நாட்டுச் சுதந்திரப் போராட்ட காலத்தில் கிராமங்களிலுள்ள இந்தச் சமூகத்தினரே தேசத்தின் விடுதலைப் போராட்டத்தில் முன்னணியில் நின்றார்கள். மகத்தான தியாகங்கள் புரிந்தார்கள். தைரியமாகப் பல சாகசச் செயல்களைச் செய்தார்கள்.

இவர்களில் பலர் படிப்பும், சிந்தனைத் தெளிவும், விவசாயத்தில் புது முறைகளைக் கையாள வேண்டும் என்ற ஊக்கமும் உடையவர்கள். அவர்களுக்குப் புது நம்பிக்கையும் உற்சாகமும் மூட்டினால்தான் நாடு உணவு விஷயத்தில் சுயதேவை காணமுடியும்.

சோஷலிஸம் என்பது வறுமையைப் பகிர்ந்து கொடுத்தல் அல்ல. நிலத்தில் விளைவை அதிகப்படுத்த வேண்டிய பணி மிக முக்கியமான பணி.

பெங்களூரில் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த திரு லால் சர்தார் சிங் என்பவர் திட்டக் கமிஷன் அங்கத்தினர்களில் ஒருவர். நிலச் சீர்திருத்தக் கமிட்டியில், மாறுபட்ட கருத்தை வெளியிட்டவர். பஞ்சாப் விவசாய டைரக்டராகப் பணியாற்றியவர். தமிழ்நாட்டு விவசாயத்தில் ஈடுபட்டவர்களின் நிலைக்கும் பஞ்சாப் விவசாயிகளின் நிலைக்கும் வெகு நெருங்கிய தொடர்புண்டு. ஜமீன்கள் நிறைந்த பிரதேசங்களில் அனுபவம் பெற்ற தலைவர்களுக்குப் பஞ்சாப் விவசாய நிலைமையும் தமிழ்நாட்டு விவசாய நிலைமையும் எளிதில் புரியாது. திரு லால் சர்தார் சிங் விவசாயம் நாட்டில் அடைந்துள்ள சீர்குலைவை உணர்ந்து ஜாக்கிரதையாகப் புதிய நிலச் சீர்திருத்தங்கள் செய்ய வேண்டும் என்கிறார்.

நிலம் ஆலைத் தொழிலைப் போல் கருதப்பட வேண்டும். ஆலைகளில் எல்லாருடைய லட்சியமும் உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்பதுதான். அதுபோல் நிலத்திலிருந்து உணவு தான்யத்தைப் பெருக்க வேண்டும். அதற்கான வழிவகைகளைத்தான் முதலில் யோசிக்க வேண்டும். அதற்குப் பிறகுதான் நிலத்தின் உரிமை சொந்தக்காரர்களுக்கா, உழுபவர்களுக்கா ? நில உடைமைக்கு எவ்வளவு உச்ச வரம்பு கட்டவேண்டும் என்பன போன்ற ஆகாசப் பிரச்னைகளைச் சிந்திக்க வேண்டும்.

உணவு உற்பத்திக்கு இடையூறாக எந்தத் திட்டம் வந்தாலும், எந்தச் சீர்திருத்தம் வந்தாலும் அதை நிறுத்தி வைக்கவேண்டும்.

உலகத்திலேயே நிலத்தைப் பொது உடைமையாக்க வேண்டும் என்று பாடுபட்ட சர்க்கார் கம்யூனிஸ்ட் சர்க்கார். அதைக் காரியத்தில் நிறைவேற்ற வேண்டும் என்று

உண்மை யுணர்ச்சியுடன் பாடுபட்ட சர்க்கார். அதில் அவர்கள் எவ்வளவு தூரம் வெற்றிபெற்றிருக்கிறார்கள் என்பதைப் பார்த்தால் நிலச் சீர்திருத்தம் எவ்வளவு நிதானமாகச் செய்யவேண்டிய காரியம் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

போலந்து, கம்யூனிஸ்ட் சார்புள்ள நாடு. அங்கு 10,000 கூட்டுப்பண்ணைகள் இருந்தன. அந்தப் பண்ணைகள் திருப்திகரமாக வேலை செய்யாததால் கலைத்து விட்டார்கள்.

கம்யூனிஸ்ட் சார்புள்ள தேசங்களிலும் கூட்டுப் பண்ணை முறை தோல்வியடைந்து வருகிறது என்பதற்கு இதைவிட வேறு அத்தாட்சி வேண்டியதில்லை.

நமது நாட்டில் மத்தியப் பிரதேசத்தில் காட்டுப் பிரதேசத்தை அழித்து, கூட்டுப் பண்ணை விவசாயத்தில் ஐந்து லட்சம் ரூபாய் வரையில் பாரத சர்க்கார் செலவழித்துக் கொண்டு வந்தார்கள். அந்தக் கூட்டுப் பண்ணையிலும் ஒரு பயனும் விளையவில்லை.

அடுத்துச் செய்யவிருக்கும் நிலச் சீர்திருத்த மசோதாக்களுக்கு இவையெல்லாம் ஓர் எச்சரிக்கையாகு மல்லவா?

இந்த மாநாட்டில் மாஜி மைசூர் முதன் மந்திரி திரு கே. ஹனுமந்தய்யா அவர்கள் ஓர் அரிய பிரசங்கம் செய்திருக்கிறார். பலப் பல உண்மைகளை அவர் எடுத்துக் கூறியிருக்கிறார். அந்த யோசனைகள் பொறுப்பான பதவிகளிலிருப்பவர்கள் சிந்தித்துப் பார்க்கக் கூடியவைகளாகும்.

நிலச் சீர்திருத்தத்துக்காக முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 2500 கோடி செலவழித்திருக்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இரண்டு ஆண்டுகளில் 1500 கோடி ரூபாய் செலவழித்திருப்பார்கள். இவ்வளவு கோடிக் கணக்கில் செலவழித்தும் மேனாடுகளிலிருந்துதான் நமது உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. அடுத்த ஐந்தாண்டு காலத்துக்கு, ஒரு கோடி டன் உணவுப் பொருள்களை ஐந்நூறு கோடி ரூபாய்ச் செலவில் இறக்குமதி செய்ய வேண்டியிருக்குமாம்!

அந்நியச் செலவாணிக்காக, இரண்டாவது திட்டங்களுக்குரிய யந்திரங்களை வாங்குவதற்காக 'நாம் யாரிடம் கடன் கேட்பது' என்று ஆலாய்ப் பறந்து கொண்டிருக்கும் இவ்வேளையில் அரிசியும் கோதுமையும் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய ஐந்நூறு கோடி ரூபாய் செலவழிக்க வேண்டும் என்றால் அது எவ்வளவு பரிதாபகரமான நிலைமை!

நாட்டின் முதற் பிரச்னை உணவு உற்பத்திப் பிரச்னை. அதில் நாம் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொண்டேயாக வேண்டும். இவ்விஷயத்தில் நமக்குப் பிரியமான கொள்கைகளை தள்ளி விட்டு, சற்றுப் பழையமாதிரி சிந்திக்க வேண்டியிருந்தாலும் கூச்சப்படாமல் சிந்திக்கத்தான் வேண்டும். முற்போக்கு நாடுகள் என்று சொல்லிக் கொள்ளும் கம்யூனிஸ்ட் நாடுகளிலேயே தங்கள் புதிய கருத்துக்களை ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடாமல் துறந்து விட்டு, பழைய முறைக்கு மகிழ்ச்சியுடன் திரும்புகிறார்கள். இதைப் பார்த்தாவது ஓரளவு பின் திரும்ப நாம் கொஞ்சங் கூடத் தயங்க வேண்டியதில்லை.

மொத்தத்தில் நிலச் சொந்தக்காரர்களுக்கும் உழுபவர்களுக்கும் ஒரே லட்சியம் இருக்கும்படியான சூழ்நிலையை வளர்க்க வேண்டும்; அதாவது, 'நல்ல வெள்ளாமை எடுக்க வேண்டும்; உற்பத்தியைப் பெருக்க வேண்டும்' என்று உணர்ந்து இருவருமே அக்கறை கொள்ளச் செய்ய வேண்டும். இருபாலாருக்குமிடையே கட்சிப் பூசல்களை வளரவிடாமல் அன்யோன்யமாக வேலை செய்ய அவர்களை ஊக்குவிக்க வேண்டும்.

சென்னை, மைசூர், கேரளம் ஆகிய ராஜ்யங்களைச் சேர்ந்த விவசாயிகள் ஒருமுகமாகச் சொல்லும் இந்த யோசனைகளைச் சர்க்கார் கேட்க வேண்டும். ஜனநாயகம் என்பது பெருவாரியான மக்கள், சிறுபான்மையோரின் உணர்ச்சிகளுக்கும் எண்ணங்களுக்கும் மதிப்புக் கொடுத்து நடந்து கொள்ளுவதுதான். நில உடைமையாளர்கள் தேர்தல் கணக்கில் சிறுபான்மையோராக இருந்தாலும் அவர்களைச் சர்க்கார் மதித்து அவர்கள் குரலுக்குச் செவி கொடுத்துக் கேட்க வேண்டும். விவசாயிகளுக்காகப் பல தொண்டுகள் புரிந்துள்ள 'புரொபஸர்' ரங்கா போன்றவர்கள் இக்குழுவில் சேர்ந்திருக்கின்றனர்.

'நீர்ப்பாசன வசதிகளை பெருக்குகிறோம்' என்று புதிய புதிய அணைகளைக் கட்டுகிறோம். அதற்காகக் கோடிக் கணக்கான ரூபாய் செலவு செய்த பின் "அந்தப் பாசனத்திற்கு அருகில் உள்ள குடியானவர்கள் நீர்ப் பாசனத்தை பயன் படுத்திக் கொள்ளவில்லை. அந்த மூர்க்கர்களுக்குப் புத்தி சொல்ல வேண்டும். வரி கொடுக்கப் பயந்து தண்ணீர் வேண்டாம் என்கிறார்கள்" என்றெல்லாம் பேசப்படுகிறது. குடியானவர்கள் ஒன்றும் அறியாதவர்கள் அல்ல. அவர்களுடைய தொழில் அவர்களுக்குத் தெரியும். அரசாங்கத்தில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களை விடவும் மந்திரிகளை விடவும் விவசாய ரகசியங்களைப் பற்றிய வரையில் குடியானவர்களுக்கு அதிகமாகத் தெரியும். கரிசல் நிலத்தில் ஏரி நீர்ப்பாசனத்தைச் செலுத்தினால் அடியில் இருக்கும் உவர்ப்பு மேலே கிளம்பி, நல்ல வெள்ளாமை தரும் பண்ணைகளை யெல்லாம் பாழாக்கி விடும். உவர் நிலமாகப் போகும். கரிசல் நிலத்தில் பாசனம் இல்லாமல் மழையைக் கொண்டு சாகுபடி செய்ய வேண்டும். நீர்ப்பாசனத்தால் அதிக வெள்ளாமை தரும்படியான நிலத்துக்குத் தண்ணீர் தந்தால் எந்தக் குடியானவரும் அதை வேண்டாம் என்று சொல்ல மாட்டார்.

ஒவ்வொரு பிரதேசத்திலும் பல நூற்றாண்டுகளாக இருந்து வந்த நிலைமையை ஒட்டி விவசாய முறையும் குடியானவர்கள் பழக்க வழக்கங்களும் அமைந்திருக்கின்றன. இடையே திடீரென்று குடியானவர்களையும் அவர்கள் கைக்கொள்ளும் முறைகளையும் மாற்றி விட இயலாது. இவற்றையெல்லாம் மனத்தில் கொள்ளாமல் தற்போதைய விவசாய இலாகாக்கள் வேலை செய்கின்றன.

பாரதம் போன்ற பெரிய விவசாய நாடு, பிற நாட்டை உணவுக்காக, சுதந்திரம் பெற்ற பின்பும் எதிர்பார்க்கும்படியான நிலையில் விட்டு வைப்பது அறிவுடைமை யாகாது.

# ஆட்சி மொழி!




நேரு:—அந்த 'ஜீப்' நமக்கு ஒரு உயிர் வாகனமாகுமா? இந்த ஒட்டகமல்லவா சரியான வாகனம்!

# ராஜஸ்தான் அன்பரின் கடிதம்

நாளுக்கு நாள் மொழிப் பிரச்னை சம்பந்தமாக நாட்டில் சர்ச்சைகள் வளர்ந்து வருகின்றன. வடநாட்டில் இந்தி திணிப்பதில் எவ்வளவு தீவிரமாக இருக்கிறார்கள் என்பது, மக்கள் சபையில் சில வட நாட்டு அங்கத்தினர்கள் பண்பாடு இழந்து பேசும் முறையிலிருந்தே ஊகித்துக் கொள்ளலாம்.

எனினும் வட நாட்டிலும் நியாய உணர்ச்சி உள்ளவர்கள் இல்லாமற் போகவில்லை. ராஜஸ்தானத்திலிருந்து ஓர் அன்பர் எழுதியிருக்கிறதைப் பாருங்கள்:

''நான் பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக உத்தரப் பிரதேசத்தில் கிராம மக்களுடன் நெருங்கிப் பழகியிருக்கிறேன். அந்த அனுபவத்திலிருந்து சில உண்மைகள் கூற விரும்புகிறேன். சர்க்கார் சொல்லும் ஹிந்தி உத்தரப் பிரதேசத்தில் நகர்ப் புறங்களில்தான் வழங்குகிறது. நகர்ப்புற மக்கள் பேசும் இந்தி கிராம மக்களுக்குக் கொஞ்சமும் புரிவதில்லை.

''அடுத்தாற்போல், 52 சதவிகித பாரத மக்கள் இந்தி பேசவாவது புரிந்து கொள்ளவாவது முடிகிறது என்று சொல்லுகிறார்கள். இதைப்போன்ற தவறான வாதம் வேறு கிடையாது. பாரத நாட்டில் கிராமங்களிலும் நகரங்களிலும் சற்றுக் கூர்ந்து கவனித்துச் சுற்றுப் பிரயாணம் செய்திருந்தால் மேற்கூறிய வாதம் எவ்வளவு தவறானது என்பதை உணர்ந்திருப்பார்கள். பஞ்சாபில் ஒரு பகுதி, உத்தரப்பிரதேசம், பீகாரில் ஒரு பகுதி, மத்தியப் பிரதேசத்தில் பெரும் பகுதி, ராஜஸ்தான் ஆகிய இடங்களிலுள்ள நகரங்களில்தான் இந்தி பேசப்படுகிறது. அந்தப் பகுதிகளிலுள்ள லட்சக்கணக்கான கிராமங்களைப் பொறுத்தவரை இந்தி பாஷை சம்ஸ்கிருதத்தைப் போலும் லத்தீனைப் போலும் பேசாத மொழிதான். எழுத்தில்தான் இந்த மொழியின் உயிர். சரியாகக் கணித்தால் பாரதமக்களில் 15 சதவிகிதம் பேர்கள்தான் இந்தியைப் பேசுகிறார்கள், புரிந்து கொள்ளுகிறார்கள் என்று சொல்ல வேண்டும். (இதைப் பற்றி இன்னும் புள்ளி விவரங்களுடனும், ஆதாரங்களுடனும் சொல்ல முடியும் என்கிறார் அந்த நண்பர்.)

'' இவை தவிர உச்சரிப்பு விஷயம் வேறு இருக்கிறது. இந்தி பேசப்படும் பகுதிகளிலேயே இந்தி வார்த்தைகள் எல்லாரும் ஒரேமாதிரி உச்சரிக்கிறார்கள் என்றில்லை. ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொருமாதிரி உச்சரிக்கிறார்கள். இதனால் ஒருவர் பேசுவது மற்றவருக்குப் புரிவதில்லை.

பாரத மக்கள் அனைவரையும் உணர்ச்சியினால் ஒன்றுபடுத்த வேண்டும். அந்த உணர்ச்சி இணைப்பைச் சாதிக்க வல்லது மொழிதான் என்று சொல்லுகிறார்கள். இதைப் போன்ற அர்த்தமற்ற பேச்சு வேறில்லை! பல மொழிகள் இருப்பினும் பாரத மக்களைப் பன்னெடுங்காலமாக இணைத்து வைத்திருப்பது சமய உணர்ச்சியும் பக்தியுந்தான்!''

இந்த நண்பரைப் போல் இன்னும் எத்தனையோ நண்பர்கள் வடக்கில் இருக்கிறார்கள். இந்தியைத் தாய்மொழியாகக் கொண்ட வட இந்தியர்கள் பாரதம் முழுவதும் தங்கள் மொழியையே ஆட்சி மொழியாக்க முயன்று வருகிறார்கள். தென்னக மக்கள் தங்கள் ஒற்றுமையின் பலத்தினால் இந்த வெறியைத் திருத்தி, பாரத நாட்டைக் காப்பாற்றுவதற்குப் பாடுபட வேண்டும்.

# நிதி மந்திரியின் ராஜினாமா!

நம்முடைய ராஜ்யத்தைச் சேர்ந்த ஒருவர் மிக முக்கியமான பதவியிலிருந்து இடைக்காலத்தில் விலக வேண்டியதாயிற்றே என்று நாம் எல்லாரும் வருத்தப்பட வேண்டியதுதான்.

இலாக்காவின் செயல்களுக்கும் பிழைகளுக்கும் இலாக்கா மந்திரிக்கு முழுப் பொறுப்பு உரியதாகும். அதை திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் என்றும் மறுத்திருக்க இயலாது. மக்கள் சபையில் இந்த விஷயங்களைப்பற்றிப் பேச்சு எழுந்தபொழுதே தாமாகவே இலாக்காவின் பிழைக்குப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, இலாக்காவில் பிழைக்கு எந்த உத்தியோகஸ்தர் உத்தரவாதம் என்பதை அவரே விசாரணைக்கு எடுத்துக் கொண்டிருக்க வேண்டும்.

இலாக்காவின் பொறுப்பை மந்திரியார் ஐயமற எடுத்துக் கொள்ளாத படியினால் பலவித சிக்கல்கள் ஏற்பட்டன. அந்தச் சிக்கல்கள் இன்னும் தீர்ந்தபாடில்லை.

பிரதமர் நேரு அவர்களுடைய கூற்றுக்களும் ஒன்றுக்கொன்று முரணாகக் காணப்படுகின்றன. மந்திரியார் மீது தவறு ஏதுமில்லாவிடில் அவருடைய ராஜினாமாவை ஒப்புக் கொள்ள வேண்டியதே இல்லை. பிழைக்கு அவர் பொறுப்பு நிச்சயமாயின் பதவியிலிருந்து விலகியதும் சரியேயாகும். விசாரணை செய்த நீதிபதியைப் பற்றிக் குறை சொல்ல வேண்டியதில்லை.

உண்மையில் வேறு சில மந்திரிகள் இந்த ஊழல்களுக்குக் காரணமாக இருப்பதாக வதந்தி உலவுகிறது. இது உண்மையாயின் சகாக்களான மந்திரிகளை டி. டி. கே அவர்கள் விட்டுக் கொடுக்காமல் இருப்பது சகஜமே. ஆனால் பிரதமர் இதைப் பற்றித் தீர விசாரிக்க வேண்டியது நியாயமாகும். சத்தியத்துக்கு மேலான நீதியோ, உசிதமோ ஒன்றுமில்லை. அனுசிதம் என்று பயந்து உண்மையைக் கைவிடலாகாது. இந்த வதந்தி பொய்யாயின் அதை உறுதியாக வெளிப்படுத்திவிட வேண்டும்.

விசாரணை முடிந்தபின் தென்னாட்டிலிருந்து தந்திகள் திரட்டியது மிகவும் அனுசிதம். இதைப் பற்றி மிகவும் வருந்துகிறோம். இதற்கு யார் பொறுப்பாளியோ தெரியவில்லை.

அமெரிக்க உதவியைச் சம்பாதித்தது டி. டி. கே. அவர்களுடைய சாமர்த்தியம்




பாகிஸ்தானிலுள்ள இரண்டு லட்சம் இந்தியர்கள் கைதிகளாகக் கொடுமைப் படுத்தப் படுவார்கள் என்று திரு பெரோஸ்கான் நூன் கூறியதற்கு, 'இந்தியாவில் ஐந்து லட்சம் பாகிஸ்தானியர் இருக்கிறார்கள் என்பது நினைவிருக்கட்டும்' என்றார் திரு வி. கே. கே. மேனன்.

---

என்று சொல்லப்படுவது நியாயமே. ஆனால் அதற்காக நாம் அடையும் திருப்தியை விட இந்த உதவி தருவதினாலும், அதை நாம் பெறுவதினாலும் அமெரிக்க சர்க்காருக்கே ராஜதந்திர வகையில் லாபம் அதிகம். இந்தியாவுக்கு உதவ வேண்டும் என்பது அமெரிக்க சர்க்காரின் ராஜதந்திரம். நாம் வாங்கிய கடனை வட்டியுடன் திருப்பித்தான் தர வேண்டும். அந்த ராஜ தந்திரத்தினால் அமெரிக்கர் பெறும் லாபம் முழு லாபமாகும்.

# கிளியானேன் இல்லையே!

கிளியின் பாக்கியமே பாக்கியம். அவளுடைய கொஞ்சுமொழிகளைக் கேட்கும் பேறு அந்தக் கிளியல்லவா பெற்றிருக்கிறது.

அவளுடைய அந்தரங்க உணர்ச்சிகளையெல்லாம் அறியும் வாய்ப்பல்லவா அந்தக் கிளிக்குக் கிட்டியிருக்கிறது!

அதுமட்டுமா? அந்த வளர்ப்புக் கிளிக்கு இன்னும் என்னவெல்லாம் அதிர்ஷ்டங்கள் வாய்த்திருக்கின்றன, தெரியுமா?

சில சமயங்களில் அவள் தோள்மேல் மிக உரிமையோடு உட்கார்ந்து என்னவென்ன ரகசியங்கள் எல்லாமோ கேட்கிறது அந்த அதிர்ஷ்டக்காரக் கிளி!

கிளிக்கு வந்த இந்த அதிர்ஷ்டங்களை யெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது, அவளைப் பிரிந்துள்ள அவளுடைய காதலனுக்கு நாம் ஏன் மனிதனாகப் பிறந்தோம் என்றே தோன்றுகிறது.

"துள்ளிமடி மேலிருந்து,
தோளின்மேல் ஏறியவள்
இன்னமொழி கேட்கவொரு
இன்னையானே னில்லையே"

"நாம் ஏன் கிளியாகப் பிறக்காமற் போனோம்!" என்ற ஏக்கமே காதலனுக்கு வந்துவிடுகிறது. காதலில் பிறந்த ஏக்கம் இது.

தமிழ்மொழியில் தமிழ்க் கவிஞர்கள் காதல் உணர்ச்சியைப் பல்வேறு கோணங்களிலிருந்து அனுபவித்திருக்கிறார்கள். இவ்வளவு அழகிய நுட்பமான பாவங்கள் வேறு எந்த இலக்கியத்திலும் இருக்க முடியாது என்று தோன்றுகிறது! அப்போது 'நாம் தமிழராகப் பிறந்ததாலன்றோ இந்தக் கவிதை இன்பத்தை அனுபவிக்க முடிகிறது!' என்று உள்ளத்தில் உவகை உணர்ச்சி பெருகுகிறது.

இந்தக் கவிதைக்கேற்ற அழகிய வர்ணச் சித்திரத்தை ஓவியர் லதா இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார்.

# அருள்வாக்கு

ஒவ்வொன்றிலுமுள்ள நல்லனவற்றை எடுத்துக் கொண்டு தீயவற்றைத் தவிர்க்க வேண்டும். கெடுதல்கள் சில தோன்றினாலும், மூலத்தையே அழிக்கும் தொழிலை ஒழித்து விட்டு ஆக்க வேலையில் ஈடுபட வேண்டும்.

ராஜாங்கங்கள் பொதுஜன நன்மைக்காக ஏற்பட்டவை. பலஹீனர்களுக்கும் வசதியற்றவர்களுக்கும் நியாயம் வழங்குவது அதன் செய்கைகளில் ஒன்றாகும். தற்சமயம் நாடுகளைப் பரிபாலனம் பண்ணும் முறையைக் குறித்தும் கொள்கைகளைக் குறித்தும் சண்டை போடப் படுகிறது. ரஷியா ஒரு பாதையைப் பற்றியிருக்கிறது. அமெரிக்கா மற்றொரு முறையைக் கையாளுகிறது. இவ்விரு ஆட்சி முறையும் சண்டைக்குக் காரணமாயிருப்பதால் அரசாங்கங்களையே அழித்துவிட வேண்டுமென்று சொன்னால் பின்பு எல்லோரும் மிருகங்களாக இருக்க வேண்டியதுதான். பாஷை, ராஜாங்கம், மதம் யாவும் அவசியம். அவை நல்லதற்காகவே ஏற்பட்டுள்ளன. அவைகளால் பிரயோசனம் உண்டு. இதனை எல்லோரும் உணர்ந்து மேம்பாடுகளைக் கிரகித்து, சத்துக்களை அனுபவித்து, சமூகத்தில் சந்தோஷம் நிலவச் செய்ய முயல வேண்டும். சற்றுக் கெட்ட அம்சங்கள் இவைகளில் தென்படலாம். அதற்காக அவைகளையே, (அதாவது மதம், ராஜ்யம், ஜாதி, பாஷை) அடியோடு அழிப்பது அர்த்தமற்ற காரியம்.

மதம் ஆத்ம க்ஷேமத்துக்கு ஏற்பட்டது. அகங்காரப் பிரவேசத்தினால் 'என் மதம் உன் மதத்தைவிட மேலானது' என்ற பேச்சு கிளம்புகிறது. சண்டை, சங்கடம், கிளர்ச்சி உண்டாகிறது. மதம் நம் அகங்காரத்தைப் போக்கடிக்கவும் கஷ்டங்களைத் தவிர்க்கவும் ஏற்பட்டுள்ளது. இதை மறந்து விட்டு, 'தான், தன் மதம்' என்ற மமதையை வளர்ப்போமானால் மதத்தின் உண்மைகளை மறந்தவர்களாவோம்.

ஜாதியும், ஆசார நியமங்களும் ஆசிரம ரீதியும் சமூகக் காரியங்கள் திறம்பட நடைபெற ஏற்பட்ட சாதனங்கள். ஒவ்வொருவரும் அவரவர்களுடைய நிலையில் தம் தம் கடமைகளைச் சரிவரச் செய்து வருவாரேயானால் கஷ்டங்களுக்கும் வேறுபாடுகளுக்கும் இடமேது?

உதாரணமாக ஜாதிகளுக்குள் சைவ-வைஷ்ணவச் சண்டையை நாம் பார்க்கிறோம். இவ்விரண்டு பிரிவுகளில் உட்பிரிவுகளுக்குள் சண்டை ஏற்படுவதையும் காண்கிறோம். உற்று நோக்கினால் சண்டை போடுபவர்களில் பலருக்கு, சைவம் வைணவம் என்றால் என்ன அர்த்தம் என்றே தெரியாது. முதலில் அவரவர்களின் சொந்தத் தப்பு; தவறு என்ன என்பதை உணர வேண்டும். உணர்ந்தபின் தீர்த்துக் கொள்ள வேண்டும்.

—ஸ்ரீசங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்

# ஜனாதிபதி ஹோசிமின்

எம். எஸ். சிவஸ்வாமி

சென்ற வாரம் இந்தியாவுக்கு விஜயம் செய்த அயல் நாட்டுப் பிரமுகர் டாக்டர் ஹோ சி மின் வடக்கு வியட்நாம் ராஜ்யத்தின் ஜனாதிபதி. இந்தியாவுடன் நட்பு கொண்டவர். தீவிர தேசியவாதி. புரட்சி வீரர். அடிமை நாடாகப் பல காலம் இருந்த வியட்நாம் பிரதேசத்துக்குச் சுதந்திரம் தேடித் தந்து விடுதலையளித்த தலைவர். மக்களின் அன்பை முற்றிலும் கவர்ந்தவர்.

வியட்நாம் என்பது முன்னாட்களில் இந்தோ-சைனா என்று வழங்கி வந்த பிரதேசத்தின் ஒரு பகுதி.

இந்தப் பிராந்தியம் முதலில் பல மாகாணங்களாக வகுக்கப்பட்டிருந்தது. அவற்றுள் அன்னாம், டோங்கிங், கொச்சின் இந்தோ-சைனா என்னும் மூன்று பகுதிகளும் சேர்ந்து போ தாய் அரசரின் ஆளுகைக்குட்பட்டு ஒரு தனிப் பகுதியாக இருந்தது. இப்பகுதிக்குத்தான் வியட்நாம் என்று பெயர். அன்னாம் மாகாணத்தை மையமாகக் கொண்டு அன்னாமியர்கள் வாழ்ந்த நாடு. அன்னாமியர்கள் என்பதுதான் வியட்-நாமியர்கள் என்று திரிந்து விட்டது.

ஐரோப்பிய நாடுகளின் கிழக்கத்திய சாம்ராஜ்யங்களில் பிரஞ்சுக்காரர் ஆதிக்கத்தில் இருந்த பகுதி இது. இரண்டாவது யுத்தத்தில் பிரான்ஸ் ஹிட்லர் படைக்குச் சரணாகதியடைந்தபோது பிரஞ்சு இந்தோ — சைனா என்ற இப்பகுதி அந்தரத்தில் விடப்பட்டது; தளபதி பெடெய்னின் விச்சி சர்க்கார் கொஞ்ச காலத்துக்குப் பெயரளவில் ஆதிக்கம் செலுத்தியது. ஜப்பான் யுத்தத்தில் ஈடுபட்ட பின் மற்ற ஆசியப் பகுதிகளைப்போல் இந்தோ சீனாவும் ஜப்பானியர் ஆதிக்கத்துக்கு உட்பட்டது. இதை எதிர்த்துத்தான் விடுதலை இயக்கம் மக்களின் ஆதரவைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டது. 1945-க்குப் பின் யுத்தம் முடிந்த பிறகு பிரஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்து இயக்கம் வலுப்பெற்றது.

இவ்விடுதலைப் போரின் முன்னணி இந்தோ-சீனா கம்யூனிஸக் கட்சி. இதைத் துவக்கி, வளர்த்து, உருவாக்கி வலுப்படுத்தி அமைத்த பெருமை டாக்டர் ஹோ சி மின்னுக்குரியது. பிரான்சிலும், இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் சுற்றுப்பிரயாணம் செய்து அனுபவம் பெற்றவர். 1941-ஆம் ஆண்டில் இக்கட்சி மற்றத் தேசியக் கட்சிகளுடனும் ஸ்தாபனங்களுடனும் ஒன்றாக இணைக்கப்பட்டு, ஜனநாயக முன்னணி என்ற பெயருடன் மாற்றியமைக்கப்பட்டது. வியட்-நாமுக்கு விடுதலையளிப்பதையே நோக்கமாகக் கொண்டது. இதைத்தான் சுருக்கமாக வியட்-மின் என்று குறிப்பிடுகிறார்கள். விளக்கினால் "வியட் - நாம் டாக்-லாப் டாங்-மின்" என்று விரிவடையும். இதன் பொருள் வியட்நாமின் சுதந்திரக் கூட்டணி. இதற்குத் தலைவர் டாக்டர் ஹோ சி மின்.

அவர் ஆரம்பித்து வைத்த விடுதலை சைன்யம்தான் 1944-45ல் 'கொரில்லா' படையாகப் பிரஞ்சு சர்க்காரின் துருப்புகளை எதிர்த்து வெற்றி கொண்டது. அரசர் போ தாய்கூட அரசைத் துறந்து ஜனநாயக முறையை அங்கீகரித்து வழிகாட்டினார். வட வியட்-நாம் பகுதியில் 'வியட் பாக்' என்னும் மலைப் பிராந்தியத்தை சுதந்திர வியட் நாமின் முதல் இட்டாகத் துவக்கித் தாற்காலிக அரசாங்கத்தையும் அமைத்தது. இதிலிருந்து விரிவடைந்து 1945 செப்டம்பரில் வியட்-நாம் குடியரசுப் பிரகடனம் அறிவிக்கப்பட்டது. 1946 மார்ச்சில் வியட் நாமின் முதல் தேசிய சபை கூடி, டாக்டர் ஹோ சி மின்னை முதல் ஜனாதிபதியாகவும் பிரதம மந்திரியாகவும் நியமித்தது. 1946-செப்டம்பரில் இந்த அரசாங்கம் பிரஞ்சு அரசாங்கத்துடன் சமரசம் பேசி இரண்டு ஒப்பந்தங்களைப் பெற்றது. இவற்றை விடுதலை சாசனம் என்றே கொள்ளலாம். இதன்படி வியட்-நாம் ஒரு ஜனநாயக சுதந்திர நாடு என்பதைப் பிரஞ்சு அரசாங்கம் அங்கீகரித்தது. ஆனால் பிரான்சை விட்டுப் பிரிந்து செல்லாமல் அத்துடன் இணைந்தே இருக்க ஒப்புக் கொண்டது. நாடு அப்போதைக்கு விடுதலை பெற்றுவிட்டது. டாக்டர் ஹோசிமின் துவக்கி வைத்த பணி வெற்றியடைந்து விட்டது போல் தோன்றியது.

ஆனால் முற்றிலும் அடைந்து விடவில்லை. ஆதிக்க சுகத்தை நீண்டகாலம் அனுபவித்த பிரஞ்சுக்காரர்களால் மாறுபட்ட நிலைமையை ஏற்றுக்கொள்ள மனம் இடங் கொடுக்கவில்லை. பிற்போக்காளர்கள் சிலர் ஒப்பந்த ஷரத்துக்களை மீறித் தங்கள் சாம்ராஜ்யத்தை மறுபடியும் நிலைக்கச் செய்ய முற்பட்டனர். பதவியைத் துறந்த போ தாய் அரசரும் இதில் பங்கு கொண்டார். 16-வது அக்ஷரேகை வரையில் பிரஞ்சு ராணுவம் தன் ஆதிக்கத்தை நிலைநிறுத்தி விட்டது. அதற்கு வடக்கே கம்யூனிஸ்டுகளின் வலிமை ஓங்கியிருந்ததால் முன்னேற முடியவில்லை. எனவே 16 அக்ஷரேகையை எல்லையாகக் கொண்டு நாடு தென்பகுதி என்றும் வடபகுதியென்றும் இரண்டாகப் பிளவு பட்டது. பிளவை எதிர்த்து நாட்டை ஒன்றாக இணைக்கும் வேலையை மேற்கொள்ளும் பொறுப்பு டாக்டர் ஹோசிமின்னையே அடைந்தது. 1951-ம் ஆண்டில் மறுபடியும் நாட்டின் இரு பெரும் கட்சி ஸ்தாபனங்களை ஒன்றாக இணைத்து லின்-வியட் அல்லது வியட் நாம் தேசியக் கூட்டு முன்னணி என்ற ஸ்தாபனத்தை உருவாக்கி, அதற்குத் தாமே தலைமை தாங்கி, தேசிய ஒற்றுமையை நிலை நாட்டச் செயலில் இறங்கினார்.

சுமார் எட்டு வருஷ காலம் ஆயுதம் கொண்டு போராட்டம் நடத்திய பின்னரே அவரால் ஓரளவுக்கேனும் வெற்றி காண முடிந்தது. 1954-ல் ஜினீவா ஒப்பந்தம் என்று ஒரு இறுதி ஒப்பந்தம் பெறப்பட்டது. போராட்டத்தை நிறுத்தவும், வடக்கு தெற்கு இரு பகுதியிலும் சமாதான நிலை ஏற்பட்டதும் பொதுத் தேர்தல்கள் நடத்தி அவரவர்கள் பிரதிநிதிகள் மூலம் இரு பகுதி



வட - வியட்நாம் ஜனாதிபதி ஹோசிமின் அவர்களுக்குப் பாரதப் பிரதமரும் தில்லி நகரக் குழந்தைகளும் விமான நிலையத்தில் குதூகலமான வரவேற்பளித்தனர்.

களும் ஒன்றாக இணைத்துக் கொள்ளவும் ஒப்பந்தத்தில் ஷரத்துக்கள் அங்கீகரிக்கப்பட்டன. போராட்ட நிறுத்தும் சர்வதேசக் கமிஷனின் மேற்பார்வையில் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இக்கமிஷனில் இந்தியா முக்கிய பங்கு கொண்டது.

அமைதி நிலவியது. ஆனால் கூட்டு இணைப்புக்கான பொதுத் தேர்தல்கள் இன்னமும் நடைபெறவில்லை. வடபகுதியில் நிலைமை முற்றிலும் சாதகமாக இருக்கிறது. ஆனால் தென் பகுதியில் நிர்வாகம் நடத்தும் அரசாங்கம் பிரான்ஸின் பிடியிலிருந்து முற்றிலும் விடுபட்டதாகத் தெரியவில்லை. வல்லரசுகளும் தலையிடத் தொடங்கி விட்டன. தென் வியட் நாம் 'ஸீட்டோ' என்னும் ராணுவ ஒப்பந்த நாடுகளில் ஒன்றாகும். எனவே அதற்குத் தேவைப்பட்ட யுத்த தளவாடங்களும் சலுகைகளும் போதிய அளவில் பெறும் வசதி அதற்கு ஏற்பட்டுள்ளது. வட பகுதிக்கும் செஞ்சீனாவிலிருந்து போர்க்கருவிகள் கணிசமான அளவில் கிடைத்துக் கொண்டிருக்கின்றன. அவ்வுதவியின்றி வியட்மின் என்னும் கட்சி தன் நீண்ட காலப் போராட்டத்தை வெற்றிகரமாக நடத்தியிருக்க முடியாது.

தேசத்தின் நிலைமை அமைதியடையவில்லை என்ற காரணத்தால் பொதுத் தேர்தல் நடத்தப் போதிய சூழ்நிலை ஏற்படவில்லை என்று இதை ஒத்திப் போட்டு வருகிறது தென்பகுதி. மேலும் டாக்டர் ஹோசிமின் இந்தோ — சைனா கம்யூனிசக் கட்சித் தலைவரென்ற முறையில் வட வியட்-நாம் பகுதிக்கு ஸோவியத் அரசாங்கத்தினிட மிருந்தும் செஞ்சீனாவிலிருந்தும் உதவி கிடைத்துக் கொண்டிருக்கின்றன வென்றும் தென்பகுதி வடபகுதி மீது குறைகூறி வருகிறது. எனவே உலகின் இதர பாகங்களிலுள்ள வல்லரசுப் போராட்டம் இப் பகுதியிலும் பிரவேசித்திருக்கிறது. இதை எதிர்த்துப் பிரிவுபட்ட இரு பகுதிகளையும் ஒன்றாக இணைப்பது டாக்டர் ஹோசி மின்னின் முக்கிய வேலை. இதற்கு மற்ற நாடுகளின் ஆதரவு தேடும் வகையில்தான் நல்லுறவு நாடான இந்தியாவுக்கு அவர் வந்திருக்கிறார்.

வடபகுதியில் நிலச் சீர்திருத்தங்களும், அரசாங்க நிர்வாகமும் செஞ்சீனாவின் பாணியையே ஒட்டி நடக்கின்றன என்பதைப் பொதுவாக எல்லோரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். டாக்டர் ஹோசிமின் தலைமையில் கம்யூனிஸ்ட் கருத்துகளுக்குச் சற்று அதிகப்படியான செல்வாக்கும் அதற்கு எதிரிடையான கருத்துக்களுக்கும் ஸ்தாபனங்களுக்கும் கௌரவக் குறைவும் தென்படுகின்றன. அதே போல் தென்பகுதியில் கம்யூனிஸ்ட் கட்சியினரும் அதையொத்த கருத்துக் கொண்டவர்களும் ஒடுக்கப்பட்டே வருகின்றனர். தென் பகுதித் தலைவர் டாக்டர் டியம் என்பவரும் (Diem) வடபகுதித் தலைவர் டாக்டர் ஹோசிமினும் இவ்விரண்டு மாறுபட்ட கருத்துக்களுக்கு உருவகம் போல் பிரகாசிக்கின்றனர். ஆனால் டாக்டர் ஹோசிமின் சற்று விட்டுக் கொடுக்கும் பண்புள்ளவர். அரசியல் விஷயங்களில் தேசத்தின் ஒற்றுமையைப் பாதுகாக்கவும் நிலைநிறுத்தவும் மாறுபட்ட கருத்துக்களுக்கும் ஓரளவு சலுகை காட்ட வேண்டும் என்னும் உண்மையை அவர் அறியாதவரல்ல. இதன் மூலம்தான் வியட்நாமின் முன்னேற்றம் ஏற்படவேண்டும்.

# இந்தியர்களுக்குப் புதிய சலுகை

கொழும்பு, பிப்ரவரி 12உ

இவ்வாரம் அரசாங்கம் பார்லிமெண்டு சபையில் சமர்ப்பித்திருக்கும் தேசிய பிராவிடண்ட் நிதி மசோதாவின்படி தோட்டப் பகுதிகளிலிருக்கும் சுமார் ஆறு லட்சம் இந்தியத் தொழிலாளர்கள் பயன் அடைவார்கள். இலங்கை சுதந்திரமடைந்த சென்ற பத்து ஆண்டுகளுக்கிடையில் இந்திய வம்சாவளியினர்களுக்குச் சாதகமான ஒரு சட்டத்தை அரசாங்கம் இயற்றுவது இதுவே முதன் முறையாகும். சகல தொழிலாளர்களுக்கும் அவர்களுடைய வயோதிக காலத்தில் உதவுவதற்காகத் தேசிய பிராவிடண்ட் நிதி ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென்று பல வருடங்களாகத் திட்டங்கள் வகுக்கப்பட்டு வந்த பொழுதிலும், அந்தச் சமூக நலத்திட்டத்தில் இந்திய வம்சாவளியினர்களைச் சேர்த்துக் கொள்ளுவதா வேண்டாமா? சேர்த்துக் கொள்ளுவதாயின் என்ன நிபந்தனைகளின் மீது சேர்த்துக் கொள்ளுவது என்பதைப் பற்றி ஓயாமல் சர்ச்சை நடந்து வந்தது. இலங்கைத் தொழிலாளர் தொகையில் சரி பாதிக்கு மேற்பட்ட இந்திய வம்சாவளியினர்களை ஒதுக்குவதாயின் தேசிய பிராவிடண்ட் நிதிக்கு அர்த்தமில்லாமற் போவதுடன் நிர்மாண வேலைகளுக்காக இந்த நிதியில் எதிர்பார்க்கும் தொகையும் வரவாக வழியிருக்காது. தொழிலாளரின் பகையைஅரசாங்கம் பகிரங்கமாகச் சம்பாதித்துக் கொள்ள வேண்டியிருக்கும். இதை உத்தேசித்து வகுப்பு வேற்றுமையில்லாமல் சகல தொழிலாளர், ஒப்பந்திகள், உத்தியோகஸ்தர்கள் ஆகியவர்களையெல்லாம் பிராவிடண்ட் நிதியில் சேர்த்துக் கொள்ளுவதென்று அரசாங்கம் தீர்மானித்தது.

தோட்டத்தொழிலாளரில் பெரும்பாலோர் இலங்கைப் பிரஜாவுரிமை மனு நிராகரிக்கப்பட்டு நாடற்ற நிலைமையில் இருப்பவர்கள். இவர்கள் இந்தியப் பிரஜாவுரிமையை ஏற்று இந்தியாவுக்குத் திரும்பிவிடச் சம்மதித்தால் மட்டுமே பிராவிடண்ட் நிதியில் இவர்களுக்காக முதலாளிமார் செலுத்தியதொகையைக் கொடுக்க வேண்டுமென்றும் இந்திய வம்சாவளியினர்களை இந்தியாவுக்கு விரட்ட இதை ஒரு சாதனமாக உபயோகிக்க வேண்டுமென்றும் சிலர் வற்புறுத்தி வந்தனர். நல்ல வேளையாக இந்த விபரீத யோசனையையும் அரசாங்கம் ஏற்கவில்லை. எவ்வித நிபந்தனையுமில்லாமல் இந்திய வம்சாவளியினர்களுக்குப் பிராவிடண்ட் நிதிச் சலுகைகளை வழங்குவதென்று முடிவுசெய்து, முற்போக்கான ஒரு மசோதாவைத் தயாரித்துப் பார்லிமெண்டுக்குக் கொண்டு வந்திருக்கிறது.

இந்திய அரசாங்கம் பிரதி வருடமும் ஆறு இலங்கை மாணவர்களுக்கு இந்தியாவில் உயர்தரக் கல்வி பயில உபகாரச் சம்பளம் வழங்கி வருகிறது. இந்த உபகாரச் சம்பளத்துக்கு இலங்கை அரசாங்கம் மாணவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதில் இதுவரை பாஷை வகுப்புப் பாகுபாடு காட்டியது கிடையாது. இவ்வருடம் மாத்திரம் உபகாரச் சம்பளம் பெற மனுப்போடுகிறவர்கள் ஓரளவு சிங்களம் தெரிந்தவர்களாயிருக்க வேண்டுமென்று ஒரு நிபந்தனை போட்டிருக்கிறார்கள். இந்த நிபந்தனையின்படி தமிழர்களில் யாருக்கும் உபகாரச் சம்பளம் கிடைக்க முடியாது. ஒரு அன்னிய நாடு மனம் உவந்து அளிக்கும் உபகாரச் சம்பளம் சிங்களவர்களின் ஏகபோக உரிமையாக்கிக் கொள்ளப்படுவது தமிழ் மக்களுக்கு மிகுந்த மனக்கசப்பையும் அதிருப்தியையும் உண்டுபண்ணியிருக்கிறது.

— ரஜனி



தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு கே. ராஜாராம் நாயுடு அவர்களின் செல்வப் புதல்வி சரோஜினிக்கும், காரைக்கேணி திரு கே. என். அழகர்சாமி நாயுடு அவர்கள் குமாரன் செல்வன் ஏ. சங்கரய்யாவுக்கும், சென்ற இரண்டாம் தேதி திருப்பரங்குன்றத்தில் மிகச் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்குச் சென்னை மந்திரிகளும், தமிழ்நாடெங்கும் உள்ள பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் திரளாக விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினார்கள்.

# வட்டமேசை

## பி. ஸி. ஜியின் கொடுமை

நான் ஒரு சலவைத் தொழிலாளி. எனது சொந்த ஊர் சேலத்தையடுத்த ஓமலூர் தாலூக்காவைச் சேர்ந்த பாகல்பட்டி என்ற ஊர். எனது பெயர் அங்கமுத்து. என் வயது முப்பத்தாறு. எனக்கு மனைவியும் நான்கு குழந்தைகளும் இருந்தனர். மனைவியின் பெயர் சின்னப் பெண். வயது இருபத்தொன்பது. நான் தொழில் செய்து எனது மனைவியையும் நான்கு குழந்தைகளையும் காப்பாற்றி வந்தேன். இப்படியிருக்க, நான்கு மாதங்களுக்கு முன்பு காருண்ய சர்க்காரால் அங்கீகாரம் பெற்ற பி. ஸி. ஜி ஊசி போடுபவர் வந்து நான் ஊரில் இல்லாத சமயம் என் மனைவிக்கு ஊசி போட்டு விட்டுப் போய் விட்டார். ஊசி போட்டதும், அன்றைக்கே என் மனைவிக்குக் காய்ச்சல், வயிற்றோட்டம் ஏற்பட்டு, வாந்தி ஏற்பட்டது. இரண்டு தினங்கள் கஷ்டப்பட்டு, சேலம் அழைத்துச் சென்று பல டாக்டர்களிடமும் காண்பித்துச் சிகிச்சை செய்தேன். பலன் அளிக்கவில்லை. பிறகு பித்துப் பிடித்த மாதிரி திருதிரு வென்று விழித்துக் கொண்டு நாம் ஒன்று கேட்டால் அவள் ஒன்று பதில் சொல்லிக் கொண்டு படுத்த படுக்கையாகக் கிடந்தாள். பிறகு அவள் தாய் வீட்டுக்கு அழைத்துச்சென்றேன். தாய்வீடாகிய சேலத்துக்கு அடுத்த காளிப்பட்டி- மின்னாம்பள்ளியில் பத்து தினங்கள் கழித்து அதாவது 24-1-58 தேதி இறந்து விட்டாள். என் மனைவி இறக்கக் காரணம் இந்த பி. ஸி. ஜி ஊசிதான் என்று திட்டவட்டமாகச் சொல்லுவேன். தயவுசெய்து இனி மேலாவது இந்த ஊசியைப் போட்டு ஜனங்களைத் துன்புறுத்தாதிருக்கும்படி அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சேலம்
4-2-58 — அங்கமுத்து

## கைத்தறி விற்பனையும் இறக்குமதியும்

நம் பாரதத்தில் உள்ள ஆலைத் துணிகளுடன் போட்டி போட முடியாத நிலையில் கைத்தறித் துணி தற்போது அரசாங்க ஆதரவுடன் ஓரளவு விற்பனையாகி வருகிறது. இதனால் அநேகக் கைத்தறி நெசவாளிகள் சற்று நிம்மதியுடன் காலம் கழித்து வருகிறார்கள்.

ஆலைத் துணி நம் நாட்டில் பெரும் அளவு உற்பத்தியாகி ஏற்றுமதி செய்யப்பட்டபோதிலும், உள் நாட்டில் விற்பனை அதிகரிக்காமல் தேங்கிக் கிடக்கிறது. இந்நிலையில் ஜப்பானிலிருந்து ஆலைத் துணி இறக்குமதி செய்யப் பாரதம் முயற்சி செய்வதா செய்தித் தாள்களின் வாயிலாகத் தெரிய வருகிறது. இந்த விஷப் பரீட்சை ஏன் என்று தான் ஒருவருக்கும் புரியவில்லை!

எனவே அரசியலார் மறுபடியும் முன்பு ஒரு முறை கைத்தறித் துணி நசித்துப் போகும் நிலையில் இருந்ததை எண்ணிப் பார்த்து, அவசியம் ஜப்பானிலிருந்து ஆலைத் துணி இறக்குமதி செய்யும் எண்ணத்தை அடியோடு கைவிடுவார்களாக! இதனால் அநேக ஏழைக் கைத்தறி நெசவாளர்களின் எதிர்கால அல்லல்கள் நீங்கும்.

அதிராம்பட்டினம்
12-2-58 — அ. உலகநாதன்

## தபால் அதிகாரிகள் கவனிப்பார்களா?

வளர்ந்து வரும் நெய்வேலியிலே அஞ்சல் நிலையம் ஒன்று உண்டு, பெயருக்கு! ஆனால் அங்கு கார்டும், கவரும் சரிவரக் கிடைப்பதில்லை. தபால் பில்லைகளை வாங்கி வெற்று உறை வாங்கி ஒட்டி அனுப்பலாம். என்றாலும், அவைகளும் கிடைப்பதில்லை. காரணம் சில சுயநலக்காரர்கள் கட்டுக்கட்டாக கார்டு, கவர்களை வாங்கிச் சென்று கவர் மூன்றணாவாகவும், கார்டு ஓரணாவாகவும் விற்பதுதான். இந்தக் கடிதமே அவ்வாறு ஓரணா கொடுத்து வாங்கி எழுதப்பட்டதுதான். இவ்வூரில் உள்ள அஞ்சல் நிலையத்தார் சிறிது யோசனை செய்தால், 'இங்கு எவருக்கும் கட்டுக் கட்டாகக் கார்டும் கவரும் தேவைப்படாது' என்பதை உணர்ந்து அவ்வாறு விற்காமல் இருக்கலாம். இதைச் சம்பந்தமுள்ளவர்கள் கவனிப்பார்களா?

நெய்வேலி
11-2-58 — க. அ. இராமசாமி

## தண்ணீர் இருந்தும் பஞ்சம்]

திருச்சியிலே தற்பொழுது இருக்கும் மிகப் பெரிய பிரச்னை 'தண்ணீர்ப் பிரச்னை' தான். எங்கும் நீர் பற்றாக்குறை. மக்கள் நாள் முழுவதும் தண்ணீர் வராமையினால் கண்ணீர் வடிக்கிறார்கள். இத்தனைக்கும் காவிரி நதி நிறைய நீர் இருக்கிறது. நதி இல்லா ஊர்களில் தண்ணீர்ப் பஞ்சத்தைப் பற்றிய பேச்சே இல்லை. ஆனால் நதி நிறையத் தண்ணீர் ஓடும்பொழுது, தண்ணீர்ப் பஞ்சம் இருப்பது விந்தையிலும் விந்தை! மலைக்கோட்டையில் வசிக்கும் மக்கள் தண்ணீர் வராமையினால் வெகுதூரம் சென்று ஒரு குடம் தண்ணீருக்காகப் படும் பாட்டை என்னவென்று சொல்வது? இந்த நீர்ப் பஞ்சம் பல மாதங்களாகவேதொடர்ந்து இருக்கிறது. இவ்வாறு தண்ணீர் இல்லாமலிருந்தால் மக்கள் எப்படி ஆரோக்கியமாக இருக்க முடியும்? தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்க நகராட்சி அதிகாரிகள் ஏதேனும் வழி பண்ணியே தீர வேண்டும்.

திருச்சி
11-2-58 — எஸ். ஜெயராமன்

## லட்சிய கண்டக்டர்

பஸ் கண்டக்டர்கள் பணி மிகவும் பொறுப்புள்ளது மட்டுமல்ல, மக்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புள்ளதும்கூட. இப் பணியில் இருப்பவர்கள் எல்லோரும் சிறந்தவர், நல்லவராக இருப்பதில்லை. நல்லவராக இருக்கின்ற



சென்ற எட்டாந் தேதி முதல் பதினைந்தாம் தேதி வரை சென்னை எழும்பூரில் அகில இந்திய கைத்தறி வாரக் கொண்டாட்டமும், கைத்தறிக் கண்காட்சியும் சிறப்பாக நடைபெற்றன. ஒவ்வொரு நாளும் நடைபெற்ற கலை நிகழ்ச்சியிலும், பொதுக் கூட்டத்திலும் ஆயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர். நவநவமான கைத்தறி ஆடைகள் கண்காட்சியில் காட்சி அளித்தன. இந்த விழாவைப் பிரதம நீதிபதி திரு பி. ராஜகோபாலன் துவக்கி வைத்தார். டாக்டர் சி. பி. ராமசுவாமி ஐயர் அவர்கள் கண்காட்சியைத் திறந்து வைத்தார். சென்னை ராஜ்யக் கைத்தறிக் கூட்டுறவுச் சங்கத் தலைவர் திரு எம். நாச்சிமுத்து வரவேற்புரை நிகழ்த்தினார். மேலே படத்தில் டாக்டர் சி. பி. ராமசுவாமி ஐயர் கண்காட்சியைத் திறந்து வைப்பதையும் அன்று மாலை நடைபெற்ற கூட்டத்தில் பிரஸிடென்ஸி பெண்கள் கல்லூரித் தலைமை ஆசிரியை திருமதி ஆர். சாந்திமதி அம்மாள் பேசுவதையும் காணலாம்.

வரை நம்மால் மறக்க முடிவதும் இல்லை. பஸ் புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கையில், நான் என் மனைவி மக்களுடன் பஸ்ஸை நோக்கி ஓடிக் கொண்டிருந்தேன். கண்டக்டர் பஸ்ஸை நிறுத்தி, எங்களை பஸ்ஸில் உட்கார வைத்தார். பத்து ரூபாய் நோட்டுக்குச் சில்லறை இல்லை என்று கூறாமல், முகம் சுளிக்காமல் பாக்கியைத் தந்தார்.

பஸ் பிரயாணம் ஒத்துக் கொள்ளாமல் வழியெல்லாம் தவித்த என் மனைவிக்குத் தண்ணீர் கொண்டுவந்து உதவினார் டிரைவர். பத்து ரூபாய் நோட்டுக்குள் மற்றொரு பத்து ரூபாய் நோட்டை வைத்து மறந்து கொடுத்து விட்டேன். அதையும் நான் இருக்குமிடம் தேடி வந்து கொடுத்தார் அந்தக் கண்டக்டர். அந்நபருக்கும் என்னை அவர் இதுவரை பார்த்தவரோ தெரிந்தவரோ அல்ல! இத்தகைய குணமுள்ள பஸ் கண்டக்டர், டிரைவர்களைப் போல் எல்லா கண்டக்டர்களும் டிரைவர்களும் நடந்துகொண்டால் பொது மக்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும். நாட்டுக்கு எவ்வளவு பெருமையாக இருக்கும்!

பாபநாசம்
4—2—58

ஏ. சுப்பையா

## மோப்ப நாய்கள்

சென்ற சில மாதங்களாகச் சென்னையில் வளர்க்கும் போலீஸ் துப்பறியும் நாய்கள் துப்பறியும் வேலையை வெற்றிகரமாகச்செய்து வருவதாயும், மர்மமான கொலை, களவு போன்ற கேசைக் கண்டு பிடித்துக் கொடுக்கின்றன என்றும் செய்திகள் வெளியாகின்றன. இதுபோன்ற திறமை வாய்ந்த போலீஸ் மோப்ப நாய்கள் போலீஸ் இலாகாவுக்கும் நாட்டுக்கும் மிகவும் அவசியமானவை. ஏன் என்றால் நாட்டில் இப்பொழுது எல்லாப் பாகங்களிலும், கொலை, கொள்ளைகள் அன்றாடம் நிகழ்ந்த வண்ணம் இருப்பதாகச் செய்திகள் மூலம் அறிகிறோம். ஆகையால் நம் நாட்டில் உள்ள ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனிலும் மோப்ப நாய்களை வளர்த்து, குற்றவாளிகளைத் தவறாமல் பிடித்துத் தண்டித்தால் உண்மையிலேயே திருட முயல்பவர்கள் எல்லாம் போலீஸ் மோப்ப நாய்களுக்கு அஞ்சுவார்கள். கொலை, களவும் இதனால் குறையும்.

தாவணகிரி சிட்டி.
1—2—58

வி. துரைசாமி

## மெட்ரிக் பரீட்சை

சென்னை ராஜ்ய அரசாங்க உத்தியோகங்களுக்கு இனி வருபவர் தமிழும் படித்துத் தேற வேண்டுமென்ற செய்தியைப் பத்திரிகைகளில் பார்த்தேன். முறைப்படி பள்ளிக்கூடம் சென்று படிக்கும் வாய்ப்பை இழந்த பலருக்கு மெட்ரிகுலேஷன் பரீட்சை ஓரளவு முன்னேற வழிகோலுவது யாவரும் அறிந்ததே. ஆனால் அத்தேர்வுக்கு எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்திலேயே படித்து விடை எழுத வேண்டியிருப்பதால், அறிவும் ஆற்றலும் இருந்தும் அம்மொழியில் தேர்ச்சியில்லாததால் பலரும் தேற முடிவதில்லை.

இனிவரும் 1959 மார்ச் மாதத்திலிருந்தாவது தமிழில் படிக்கவும் எழுதவும் உரிமையளித்தால் அறிவுத் தாகம் கொண்ட அநேகர் அக மகிழ்வர்.

பொன்னேரி
11-2-58

எம். இலட்சுமி

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி



## 18

உதவியைப் பெறுகிறவன் அந்த உதவியைப் பெற்று மகிழ்வான். ஆனால் அந்தப் பொருளைப் பெற்றதற்காக உண்டாகும் மகிழ்ச்சியைக் காட்டிலும், தரும் போது உண்மையன்போடு பேசும் மொழியும், முகத்தில் காணப்படும் பரிவும், வறுமையினால் உதவி பெற வேண்டிய நிலையில் நின்றவனுக்கு அதிக மகிழ்ச்சி தரும். உதவி பெற வேண்டிய நிலை ஒரு துன்ப நிலை. அந்தத் துன்பம் பொருள் பெற்றதனால் மட்டும் நீங்காது. பொருள் தருவதோடு கொடுப்பவன் முகத்தில் அவன் காணும் பரிவும் இன்சொல்லுமே அந்தத் துன்பத்தைத் துடைக்கும்.

அகன் அமர்ந்து ஈதலின்
நன்றே முகன் அமர்ந்து
இன் சொலன் ஆகப் பெறின்.

'அகன் அமர்ந்து' என்பதில் கொடுக்கும் போது வருத்தமின்றி மகிழ்ச்சியுடன் தருவது குறிக்கப் படுகிறது. கொடுப்பவனுடைய உள்ளம் முகத்தில் துலங்கும். முகம் சுளிக்காது கொடுப்பதில் அவன் அடையும் இன்பம் முகத்துக்கு ஒளி தரும்.

பேசும் சொல்லும் அந்த மகிழ்ச்சியை வெளிப்படுத்த வேண்டும். அப்படியின்றி மாறுபட்டால், உதவி பெறுகிறவனுடைய மனம் இதை வாங்க வேண்டியாயிற்றே என்று வருந்தும். ஆகவே கொடுக்கும் பொருளைக் காட்டிலும் கொடுக்கும் முறையே முக்கியமானது.

இத்தகைய மனப்பான்மையும் பேச்சும் செல்வம் ஒருவன் அடைந்திருப்பதனால் வராது. அது ஒரு தனி பாக்கியமாகும். ஆனபடியால் 'முகனமர்ந்து இன்சொலனாகப் பெறின்' என்றார்.

* * *

மறுபடியும் சொல்லுகிறார். உறுதியாகச் சொல்கிறார். இனிய முகமும் இனிய சொல்லும் கலவாத ஈகை அறம் ஆகாது என்கிறார்.

முகத்தான் அமர்ந்து இனிது
நோக்கி அகத்தான் ஆம்
இன்சொ லினதே
அறம்.

அறம், அதாவது, ஈகை உண்மையறம் ஆக வேண்டுமானால் பார்வையிலும் பேச்சிலும் அன்பு கலந்ததாக இருக்க வேண்டும்.

இந்தவிதமான பேச்சும் பார்வையும் இல்லாமல் "எடுத்துக் கொண்டு போ!" என்று எறியப்பட்ட பிச்சை உதவி செய்யாது. துன்பம் தரும்.

இந்த அதிகாரம் ஈகையைப் பற்றியதல்ல. இன்சொல்லைப் பற்றியது: ஈகையைப் பற்றிப் பின்னால் இருபத்து மூன்றாவது அதிகாரம் வரும்.






# உத்தமபுத்திரன்

உலகத்தில் நல்லவர்கள் மட்டும் இருந்து கெட்டவர்களே இல்லையென்றால் நல்லவர்களைப் பற்றி யாரும் எதுவும் பேச மாட்டார்கள். இரவு என்பது ஒன்று இல்லையானால் பகலைப் பற்றிப் பாராட்ட யார் இருப்பார்கள்? காய் இல்லையென்றால் கனி ஏது? பிரிவு என்னும் பெருந்துயர் ஒன்று ஏற்படுவதனால்தான், காதலர்களின் சந்திப்புக்கு அத்தனை மகத்துவம் இருக்கிறது.

"உத்தமபுத்திரன்" படத்தில், இரட்டைப் பிள்ளைகளில் ஒருவன் கெட்டவனாக இல்லை யென்றால், உத்தமபுத்திரன் என்ற பெயரை மற்றப் புதல்வன் வாங்கி யிருக்கவே முடியாது; இன்னும் சொல்லப் போனால் கதையே கிடையாது.

முன்பு ஒரு "உத்தமபுத்திரன்" வெள்ளித் திரையில் வெளிவந்தது. அதில் காலஞ்சென்ற பி. யு. சின்னப்பா இரண்டு பாகங்களில் தோன்றி அபாரமாகப் பாடி, நடித்தார்.

"வந்த படங்களே மீண்டும் வருவதைப் பற்றிக் கண்டித்து எழுதினீர்களே? உங்கள் எழுத்து செவிடன் காதில் ஊதிய சங்காகி விட்டதே!" என்றார் என் நண்பர்.

"என் எழுத்து ஒருகாலும் வீணாகாது. செவிடன் காதில் ஊதிய சங்கு அவன் காதுக்குக் கேட்கா விட்டாலும், மற்றவர்களுக்குக் கேட்குமல்லவா? அதுபோல, ஒரு முறை வந்த படம் மறுமுறையும் வருவதை நான் கண்டித்து எழுதியது படாதிபதிகள் கண்களில் படாவிட்டாலும், உங்களைப் போன்ற ரசிகர்களின் கண்களில் பட்டு விட்டது. அது போதும்" என்றேன்.

ஒரு ராணிக்குப் பிறந்த குழந்தையை இறந்து விட்டதாக நம்ப வைக்கிறான் அந் நாட்டுத் தளபதி. அந்தக் குழந்தையைக் கொன்றுவிடவும் ஏற்பாடு செய்கிறான். ஆனால் அந்தக் குழந்தையைக் கொலை செய்யச் சென்றவன் கொல்லாமல் குழந்தைக்குப் பார்த்திபன் என்று பெயரிட்டு, வாள்போரில் பயிற்சி அளித்து வளர்த்து வருகிறான். ஆனால் ராணிக்குப் பிறந்த இன்னொரு குழந்தை (விக்கிரமன்) ஒரு பிரச்னையாகிறான். தளபதி ஒரு சூழ்ச்சி செய்து குழந்தை விக்கிரமனைக் கோழையாக வளர்க்கச் சதி செய்கிறான்.

இந்த இரட்டைப் பிள்ளைகளின் இருவேறு இயல்புகள்தான் திரைக் கதையின் ஜீவன்.

அந்த ஜீவனை நன்கு உணர்ந்து "உத்தம புத்திரன்" பாகத்தை ஏற்று, நாளுக்கு நாள் மெருகேறி வரும் சிறந்த நடிகர் சிவாஜி கணேசன் மிகவும் திறமையாக நடித்திருக்கிறார். இரட்டையர்களின் குண விசேஷங்களைச் சற்று யோசித்துப் பார்த்தால், ஒரே நடிகர் அவ்விரண்டு பாகங்களையும் ஏற்று வெற்றி பெறுவது எவ்வளவு சிரம சாத்தியமான செயல் என்பது எளிதில் புலனாகும்.

விக்கிரமன், அரண்மனை அந்தப்புரத்தில் ஆடல் அழகிகளுக்கு இடையில் வளர்ந்த அசடன்; பார்த்திபன், சிறுமை கண்டு பொங்கும் சிங்கம்; பெருமைப்படும் குணங்களுள்ள தங்கம். ஒன்றுக்கு ஒன்று சம்பந்தமில்லை. அத்தகைய மாறுபட்ட பாத்திரங்களின் இயல்புகளை வகித்து, சிவாஜி கணேசன் தம் நடிப்புத் திறமையை வெளிப்படுத்துகிறார். அவரது நடிப்பைப் போலவே, அவருக்குப் புகழைத் தந்து வருவது உணர்ச்சிப் பிரவாகமான சொற்போர். "மனோகரா" வில் அவர் நடிப்பைப் பாராட்டினவர்கள், உயிர்த் துடிப்புள்ள அவரது வாசகங்களையும் பாராட்டினர். இந்தப் படத்தில் ஒரு புதுமை-சிவாஜி கணேசன் அதிகம் பேசவில்லை. ஆனால் அவர் நடிப்பு பேசுகிறது.

விக்கிரமனாக வந்தபோது, பேச்சு, சிரிப்பு, நடை எல்லாம் அந்தப் பாத்திரத்துக்கு ஏற்ற வண்ணம் இருந்தன; பார்த்திபன் வேடத்தில் பெருந்தன்மை, வீரம், அன்பு முதலிய அருங் குணங்கள் சிறப்பாக வெளிப்பட்டன.

இந்தக் கதையில் மந்திரி குமாரி அமுதா ஒரு முக்கிய பாத்திரம். பார்த்திபனின் பண்புக்கு உகந்த பாவை அவள். அந்தப் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் பத்மினி; மிகவும் கவர்ச்சியாகத் தோன்றியிருப்பதும் அல்லாமல், கச்சிதமாகவும் நடித்திருக்கிறார். காதலன் சந்திப்பு, சஞ்சலம், பிரிவு, ஏக்கம்—கடைசியில் கல்யாணம். இப்படி அந்தப் பாகம் படத்தின் நல்ல அம்சங்களுக்கு உறுதுணையாக நின்று பத்மினிக்கு வெற்றி

யைத் தந்து விட்டது. ''முல்லை மலர் மேலே மொய்க்கும் வண்டு போலே'' என்ற பாட்டுக்கு, பத்மினியின் அபிநயம் அற்புதமாயிருக்கிறது. திரு மருதகாசி இயற்றிய அந்தப் பாட்டுக்குச் சுசீலாவும் சௌந்தரராஜனும் குரல் கொடுத்துச் சிறப்பித்திருக்கின்றனர். ராணியின் எதிரில் பத்மினியும் ராகினியும் சேர்ந்து ராதா-கிருஷ்ண நடனம் ஆடுகின்றனர். ராதையின் உள்ளத்தில் பொங்கிய பிரேம வெள்ளம், பத்மினியின் வதனத்தில் பொங்கிய அதிசயம் இன்னும் என் உள்ளத்தை விட்டு அகலவில்லை. கிருஷ்ணவேஷம் தாங்கிய ராகினி தத்ரூபம் கிருஷ்ணனாகவே தோன்றினார்.

அமுதாவின் தோழி ராஜாத்தி இந்தப் படத்தில் முக்கியமான பாத்திரம். அவள் இல்லையென்றால் அமுதாவின் காதல் அதோ கதியாகி யிருக்கும்.

அடுத்த முக்கிய பாத்திரம் பார்த்திபனின் தோழன் பொன்னன். சிறையிலிருந்த பார்த்திபனைப் பொன்னனும் ராஜாத்தியும்தான் தங்களுடைய சாமர்த்திய சாகசங்களினால் விடுவிக்கிறார்கள். பார்த்திபனையும் அமுதாவையும் சேர்த்து வைத்ததோடு நின்றுவிடாமல், தோழி ராஜாத்தியும், தோழன் பொன்னனும் ஒன்றுபடுகிறார்கள்.

ராகினி, ராஜாத்தியாக நடிக்கிறாள். இதுவரையில் ராகினி பல படங்களில் நடனம் ஆடிப் பார்த்திருக்கிறேன். நல்லபடியாக நடித்துப் பார்த்ததில்லை. ஆனால் ''உத்தம புத்திர''வில் ராகினியின் நடிப்பு நன்றாயிருக்கிறது. அமுதாவைப் பார்த்திபனிடம் சேர்க்கச் சூழ்ச்சி செய்து அதை அமுதாவிடம் சூசகமான அபிநயத்தின் மூலம் தெரிவிக்கிறாள், ராஜாத்தி. ''கொண்டாட்டம் மனகக் குள்ளே கொண்டாட்டம், திண்டாட்டம் மாட்டிக்கிட்டா திண்டாட்டம்'' என்ற பாட்டுக்கு ராகினி மிகவும் அழகாக அபிநயம் பிடிக்கிறார். அவரது பாவமும், நடிப்பும், பேச்சும் நன்றாயிருக்கின்றன.

பொன்னனாக நடிக்கும் தங்கவேலுவின் நடிப்பு இந்தப் படத்தில் நன்கு சோபிக்கிறது. ஓடுகிற வெள்ளத்தில், சுற்றும் பரிசலில் ராஜாத்தியைக் கல்யாணத்துக்கு இணங்க வைக்கும் கட்டம் யாரையும் 'சபாஷ்' போடச் சொல்லுகிறது. சிறைக் காவலாளிக்கு மயக்க மருந்து கலந்த பானகம் கொடுத்து மயக்கும் கட்டத்தில் தங்கவேலு, ராகினி சக்கைப்போடு போட்டிருக்கின்றனர்.

ஆனால் இந்தமாதிரி சிறைக் காவலர்கள் அசட்டுத்தனமாக ஏமாந்துபோனது நம் படவுலகத்தில் புதிதல்ல. (சிறைக் காவலர்கள் தமிழ்ப்படமே பார்த்ததில்லை போலும்!)

தளபதி நாகநாதனாக வரும் எம். என். நம்பியார் தாம் திரைக் கதையின் வில்லன் என்பதை ஆரம்பத்திலேயே காட்டி விடுகிறார். அழுத்தமான நடையும், குரூரமான பார்வையும், கடுமையான வசனங்களும்தானே வில்லனுக்கு முக்கியமான யோக்கியதாம்சங்கள்! அவைகளுக்கு அவரிடம் என்றும் பஞ்சமில்லை.

வீரத் தாயாக நடித்து, வீரச் சொற்பொழிவுகளை ஆற்றி நம் பட உலகின் வீராங்கனையாக விளங்கும் கண்ணாம்பாள், விக்கிரமன்—பார்த்திபன் இருவருக்கும் தாயாராக (ராணியாக) வருகிறார். ''கண்ணகி'' ''மனோகரா'', ''மக்களைப் பெற்ற மகராசி'', ''எங்கள்வீட்டு மகாலட்சுமி'' முதலிய படங்களை நினைவூட்டுகிறது. அவரது அருமையான நடிப்பு!

நள்ளிரவில் கள்ளத்தனமாக வந்த பார்த்திபனுக்கு அமுதா இளவரசனின் உடையைக் கொடுத்துத் தப்புவிக்கிறாள். இளவரசனுடைய உடை அங்கே எப்படி வந்தது என்பது ஒரு பிரச்னை. ஒருவேளை அது தந்திரக் காட்சியோ, அல்லது மந்திரக் காட்சியோ! டைரக்டரின் கண்ணுக்குத் தப்பிவிட்டது.

இரட்டைப் புதல்வர்களின் தந்தையாகப் படத்தின் சில காட்சிகளில் மட்டுமே வந்து மறைந்து விடும் எம். கே. ராதா அதிர்ஷ்டசாலி—படத்தின் ஆயிரக்கணக்கான அடிகளிலிருந்து தப்பி விட்டாரல்லவா!

பிருந்தாவனக் காட்சிகள் அற்புதமாகப் படமாக்கப்பட்டிருக்கின்றன. இப்படத்தின் சண்டைக் காட்சிகளைப் பிரமாதமாகச் சொல்லுவதற்கில்லை. ஜெமினியின் ''அபூர்வ சகோதரர்கள்'' படத்தில் எம். கே. ராதா இரு வேடங்களைத் தாங்கிச் சண்டையிட்ட காட்சி மெய்சிலிர்க்க வைத்தது.

திரைக்கதையின் வசனத்தை ஸ்ரீதர் மிகவும் திறமையாகத் தீட்டியிருக்கிறார். சில இடங்களில் வாய் விட்டுப் பேசாமலே நடிகர்கள் முக பாவங்களினாலேயே பேசுகின்றனர். மேற்படி காட்சிகள் மிகவும் பிரமாதமாயிருக்கின்றன.

பிரசித்தி பெற்ற பிரஞ்சு ஆசிரியரான டூமாவின் கதையை ஆதாரமாகக் கொண்ட இப்படம் எத்தகைய மாறுதல்களிலும் நன்றாய்த்தான் இருக்கும்.



# நௌஷேர்வானே ஆதில்

நம் தமிழகத்தில் மனு நீதிகண்ட சோழன் மக்கள் மனத்தில் மறையாமல் நின்று விட்டவன். அவனது நீதியும் நேர்மையும் கொண்ட ஆட்சி, வாயில்லாத ஜீவனுடைய குறையையும் தீர்க்கும் அளவுக்கு வளர்ந்திருந்தது. கன்றையிழந்த பசுவின் தீனக்குரலுக்கும் அத் தமிழ் மன்னன் நீதி வழங்கினான் என்னும் பெருமை, குமரி முனையும் கொல்லி மலையும் உள்ளவரையில் அழியாப் புகழுடன் நிற்கும்.

ஆறுவது நூற்றாண்டில், இரான் நாட்டை ஆண்டு வந்த நௌஷேர்வான் நீதியைத் தன் வழிபடு தெய்வமாகவும், நேர்மையைத் தன் மூச்சாகவும் கொண்டு அரசு செலுத்தி வந்தான். மன்னுயிரைத் தன்னுயிராக எண்ணிய அம் மாபெரும் மன்னர்ப் பெருந்தகையின் வாழ்க்கை வரலாறு வெள்ளித் திரையில், உருது மொழியில் வெளிவந்திருக்கிறது.

"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு."

என்னும் பொய்யா மொழி அவன் வாழ்வில் மெய்யாக நின்றது.

"யாரும் யாருக்கும் தீங்கு இழைக்கக் கூடாது. தீங்கிழைத்தவன் யாராயிருந்தாலும் கடுந் தண்டனைக்கு உள்ளாவான். நீதியின் முன்னால், பணக்காரன்—ஏழை, பாட்டாளி—முதலாளி, எளியவன் — வலியவன் என்ற வேற்றுமைக்குச் சிறிதும் இடமில்லை" என்ற ஒரு சட்டத்தை மக்கள் மன்றத்தில் நிறைவேற்றி வைத்தான் அம்மன்னன்.

அதுதான் திரைக் கதையின் ஆதார கருத்து.

இரான் தேசத்துப் பாதுஷாவாக, பிரசித்தி பெற்ற குணசித்திர நடிகரான ஷோராப் மோடி தோன்றுகிறார். அவர் நடிப்பு எல்லோரையும் பாதுஷாவின் ஆட்சிக் காலத்துக்கே அழைத்துச் சென்று விடுகிறது.

ராணியும் பாதுஷாவும் நடத்தும் வாதங்கள் நன்று யிருக்கின்றன. இளவரசனைக் காண அரசன் என்ற முறையில் அந்தப்புரத்தில் நுழைய அனுமதிக்க மறுத்த ராணி, கணவன் என்ற முறையில் அனுமதி கேட்டதும், பணிவோடு அனுமதி தருகிறாள். அந்தக் கட்டம் நன்று யிருக்கிறது.

நீதியும் நேர்மையும் மாத்திரம் இருந்து விட்டால் திரைக்கதை சுவாரஸ்யப்படுமா? ஆகவே இப்படத்தில் ஒரு நல்ல காதல் சம்பவம் வருகிறது: மன்னன் மகனுக்கும், ஏழைக் கிறிஸ்தவ மத குருவின் மகளுக்கும் எதிர்பாராத விதமாகக் காதல் ஏற்படுகிறது. (எதிர்பாராத காதல், எதிர்பார்த்த விதமாகப் பூர்த்தி பெறுமல் போவதுதானே காதல் காவியங்களின் உயிர் நிலை!)

வெள்ளத்தில் சிக்கிய கட்டழகி மன்னன் மகனின் தூண்டிலில் சிக்கி, பிறகு அவன் உள்ளத்திலும் சிக்கி விடுகிறாள். மன்னன் மகன் உண்மையை மறைத்து அநாதையென்று கூறிக் கொள்கிறான். மயக்கமுற்ற மங்கைக்கு உயிர் கொடுத்த கிறிஸ்தவப் பாதிரியார்தான் அவளுடைய தந்தையென்று தெரிய வந்ததும், அவன் தன் பெயர் ஜோசப் என்று கூறிவிடுகிறான். இவர்களுடைய காதல், நாளொரு படகும், பொழுதொரு பாட்டுமாக ஆற்று வெள்ளத்தில் வளர்கிறது.

வெள்ளத்தில் வந்த மங்கையின் பாகம் ஏற்றிருப்பவர் கவர்ச்சியும் குறுகுறுப்பும் கொண்ட மாலா சின்ஹா. அவர் பல உடைகளில் தோன்றி, நடனம் ஆடி, காதலனுடன் கொஞ்சு மொழிகள் பேசி, கண்ணீர் விட்டுப் படத்துக்குப் புத்துயிர் அளிக்கிறார்.

மல்லிகை மலரை எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் அதன் மணம் மாறுதல்லவா? தேனின் இனிமை எந்த மொழியின் பெயரால் அதைக் குறித்தாலும் சுவையில் குன்றுதல்லவா? அதைப்போல் ஒன்றுபட்ட இரு இதயங்களின் காதல் துடிப்பு உருதுவாயிருந்தாலும் அல்லது மிருதுவான தமிழாயிருந்தாலும் நமக்குப் பொருள் தெரிந்துவிடுகிறது.

மாறு வேடத்தில், மன்னன் தனது மகனின் காதல் விளையாட்டுகளைக் கண்டதும் மகனை இளவரசாக்குகிறான்; பிறகு சிறிதும் மனந் தளராமல் மகனையும் விசாரணைப் பீடத்தில் ஏற்ற உத்தரவிடுகிறான்.

இந்தக் கட்டத்தில் ஷோராப் மோடியின் நடிப்பு பிரமாதமாயிருக்கிறது. பிரதம மந்திரி, இரான் தேசத்து ராணி, மற்றுமுள்ள பிரமுகர்கள் யாவரும் இளவரசன் மீது சாட்டப்பட்டிருக்கும் குற்றம் பொய்யென்று வாதாடுகிறார்கள். கிறிஸ்தவப்பாதிரி வழக்கை எடுத்துச் சொல்லி நியாயம் கோருகிறார்.

அரச பீடமா, அல்லது இதய ராணியின் இதய பீடமா? எது வேண்டும் என்ற நிலைமை ஏற்படுகிறது.

இரான் நாட்டு ராணி, விவாகமாவதற்கு முன்பு தான் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவளாதலால், தன் புதல்வனும் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவன்தான் என்று அரசவையில் வாதாடுகிறாள். இதுகாறும் இவ்வுண்மையைத் தெரிவியாமல் இருந்த குற்றத்துக்காக ராணி சிறைத்தண்டனை அடைகிறாள்.

இறுதியில் ஆட்சி பீடத்துக்கு எதிராக அமர் புரிந்து அமரத்துவம் அடைகிறான், அரசிளங்குமரன். அவன் இதயராணியும் அவனுடைய இறுதி யாத்திரையில் இதய நிறைவுடன் பங்கு கொள்கிறாள். நீதி தவறாத மன்னன் முடி துறக்கிறான்.

பதினாலாயிரம் அடிகள் கொண்ட இப்படத்தில் இரக்கம் இல்லாமல் சுமார் மூவாயிரம் அடிகளைக் கத்திரித்து விட்டால், படம் சித்திரித்துக் காட்டும் கதையம்சம் சுவையில் சிறிதும் குன்றி விடாது. இளவரசன் மர்ஜியாவைக் காணச் செல்லும் காட்சிகளைக் குறைத்து, விறுவிறுப்பை அதிகரிக்கலாம்.

ராஜ தர்பார் காட்சிகள், நாட்டு மக்கள் வரும் காட்சிகள், அந்த நாளைய ஆடை ஆபரணங்கள் யாவும் கவனம் செலுத்தித் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. இரண்டு பாடல்கள் மனத்தில் நின்று ருசியைத் தருகின்றன.





சென்னை செயின்ட்மேரி மண்டபத்தில் கோடக் ஸ்தாபனத்தார் ஒரு அருமையான கண் காட்சியை நடத்தினர். பிப்ரவரி முதல் தேதி ஆரம்பமான இந்தக் கண்காட்சியில் புகழ் வாய்ந்த நாற்பது பிரிட்டிஷ் புகைப்படக் காரர்கள் எடுத்த மிகச் சிறந்த புகைப்படங்கள் வைக்கப் பட்டிருந்தன. நூற்றுக்கணக்கான மக்கள் நாள்தோறும் இந்தக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தனர். இந்தக் கண் காட்சியை ஆரம்பித்து வைத்த பிரிட்டிஷ் ஹைகமிஷனர் திரு ஆர். ஜி. ஸெல்ஹோம் அவர்களுக்கு கோடக் ஸ்தாபனத்தின் சென்னைக் கிளை மானேஜர் திரு ராமமூர்த்தி அவர்கள் கண் காட்சியில் உள்ள புகைப் படங்களைக் காண்பிப் பதையும், காட்சியில் இருந்த சில பேசும் போற் சித்திரங்களையும் இங்கு காணலாம்.



# பாவை விளக்கு

அகிலன்

## அத்தியாயம் 18

## கற்பனைத் தெய்வத்தின் காலடியில்...

சௌந்தரத்தம்மாளின் தலையிடாக் கொள்கை உமாவைப் பொறுத்தமட்டில் தவிடுபொடியாகி விட்டது. சிலருக்குப் பிறர் விவகாரங்களில் தலையிடுவது தொழில்; இன்னும் சிலருக்குப் பொழுதுபோக்கு; இன்னும் சிலருக்கு விளையாட்டு. சௌந்தரத்தம்மாள் இந்த மூன்று சாராரிலும் சேராதவளாகத்தான் அதுவரையில் இருந்து வந்தாள். ஆனால், பலர், தங்களுடைய சுயநலத்துக்குப் பங்கம் வந்து விடுமோ என்ற பயம் பிடித்து ஆட்டும்போது, தற்காப்பு உணர்ச்சியால் மற்றவர்கள் போக்கில் தலையிடுகிறார்கள். சௌந்தரத்தம்மாளும் இப்படித்தான் திடீரென்று உமாவுக்கு எதிராகத் திரும்பினாள்.



"அரும் பாடு பட்டு ருக்மிணிக்குத் தேடிக் கொண்டு வந்த மாப்பிள்ளையை இவள் மயக்கி விட்டாளே!" என்று தணிகாசலத்தின் எதிரிலேயே உமாவைத் தூற்றினாள் அவள். அவளுடைய தூற்றுதல் அடுக்களைக்குள்ளேயும் சென்றது. கல்யாணி அம்மாளையும் கௌரியையும் வைத்துக் கொண்டு உமாவின் மீது எண்ணற்ற குற்றங்களைச் சுமத்தினாள் சௌந்தரம். அவர்களால் காது கொடுத்துக் கேட்க முடியவில்லை. "அவள் இங்கே வந்து சாயங்காலம் வீட்டு வாசற்படியை மிதிக்கட்டும்; அப்புறம் நான் அவளை என்ன செய்கிறேன், பாருங்கள்!" என்று சத்தம் போட்டு விட்டு, வேகமாகத் தன்னுடைய வீட்டுக்கு இறங்கிச் சென்றாள்.

உமாவிடம் அன்பு கொண்டிருந்த தணிகாசலத்தின் குடும்பம் இந்தப் போக்கைக் கண்டு திகைத்தது. உமாவுக்குக் கிடைக்கப் போகும் வசவுகளையும் திட்டுக்களையும் எண்ணி நடுங்கியது.

"உமா ஒரு தொட்டாற் சுருங்கி ஆயிற்றே! இந்த அம்மாள் அவளை உயிருடன் வைத்துச் சித்திரவதை செய்துவிடுவாள் போலிருக்கிறதே!" என்று தன் கவலையைத் தெரிவித்தாள் கல்யாணி அம்மாள்.

"உமாவை நாம் எப்படியாவது இந்தச் சமயத்தில் கைகொடுத்துக் காப்பாற்றத்தான் வேண்டும்" என்று யோசனை கூறினாள் கௌரி.

பிறகு அந்த மாடியில் ஒரு ரகசியக்கூட்டம் நடைபெற்றது. கல்யாணி அம்மாளின் தலைமையில் கணவனும் மனைவியும் கூடி ஒரு முக்கூட்டுத் தீர்மானம் நிறைவேற்றினார்கள். அந்தத் தீர்மானத்தை உடனடியாகச் செயலாக்கும் பொறுப்பு தணிகாசலத்தின் கையில் விடப்பட்டது. அந்தத் தீர்மானத்தின்படி தணிகாசலம் அன்று மாலை உமாவைக் கல்லூரிக்குச் சென்று சந்திக்க வேண்டும். வீட்டு நடப்பைச் சொல்லி அவளுக்கு விழிப்பூட்ட வேண்டும். சௌந்தரத்தம்மாளின் ஆத்திரத்தை அவள் சட்டைசெய்யக்கூடாது. சௌந்தரத்தம்மாளை எதிர்த்துப் பேசவோ, அவள் பேச்சால் மனத்தை வாட்டிக் கொள்ளவோ கூடாது. மாடி வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் இனிமேல் உமாவின் கட்சி. உமாவுக்குத் துன்பம் வராமல் அவர்கள் துணை நிற்பார்கள். ருக்மிணிக்குக் கல்யாணம் நடக்கும் வரையில் சௌந்தரத்தம்மாள் உமாவைக் கொடுமைப்படுத்த முயற்சிக்கலாம். அந்தக் கொடுமைகளை உமா தாங்கிக் கொள்ள வேண்டும்.

பிற்பகலில் தணிகாசலம் வீட்டை விட்டுப் புறப்பட்டான்.

புறப்படும் வேளையில் அவனுக்கு மற்றொரு யோசனையும் தோன்றியது. அதைக் கௌரியிடம் கூறினான். "ஏன் கௌரி, ஒரே கல்லில் நாம் இரண்டு மாங்காய் அடித்தால் என்ன?"

"எனக்குக் கொஞ்சம் விளங்கும்படி சொல்லுங்கள்" என்றாள் கௌரி.

"ஒன்று, அவளைத் தைரியமாய் இருக்கச் சொல்வது. இரண்டு, அந்த உதவிக் கலெக்டரையே அவளுக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுவது."

"முதல் காரியத்தை இப்போது கவனியுங்கள், போதும். நீங்கள் அவளுக்குக் கல்யாணம் செய்து வைக்கக் கிளம்பினால் சௌந்தரத்தம்மாள் உங்களை

இந்த வீட்டை விட்டே கிளப்பி விட்டுத் தான் மறு வேலே பார்ப்பார்கள்.''

''விரோதத்தைப் பார்த்தால் யாருக்கும் நன்மை செய்ய முடியாது. ருக்மிணியை அந்த மாப்பிள்ளைக்குப் பிடிக்கவில்லே. உமாவைச் செய்து வைத்தால் என்ன ?'' என்முன் தணிகாசலம்.

''தர்ம நியாய மெல்லாம் அந்த அம்மாளிடம் நடக்கவே நடக்காது. உமாவையும் உங்களேயும் சேர்த்து வைத்துப் பேசுவார்கள்.''

''பேசட்டுமே! நான் இந்தக் கல்யாணத்தை எப்படியாவது முடித்து வைக்கிறேன், பார்!''

''பிறகு உங்கள் சாமர்த்தியம்'' என்று விட்டுக் கொடுத்தாள் கௌரி.

''வருகிமுயா, நாம் இருவருமே அவ னிடம் போய்ப் பேசுவோம். பையனைத் தூக்கிக் கொண்டு வா. கடற்கரைக்குப் போகிற சாக்கில் உமாவைப் போய்க் கூப்பிடுவோம்.''

''நான் வந்தால் சௌந்தரத்தம்மாளுக்குத் தெரிந்துவிடும். சந்தேகப் படுவார்கள்; நீங்கள் போய் வாருங்கள்.''

கல்லூரி வாசலுக்குப் போய் உமாவுக்காகக் காத்து நின்முன் தணிகாசலம். கல்லூரி கலைந்தவுடன் வண்ண-வண்ண மலர்ச் செண்டுகள் போல் பெருந்திரளாய் மாணவிகள் வெளியேவந்தார்கள். புத்தகச் சுமையைத் தூக்க முடியாமல் தூக்கி வருவோரும், ஒடிந்து விழுவது போல் நடப்போரும், தலை நிமிர்ந்து கை வீசிச் செல்வோரும், அலங்காரமாக உடை உடுத்தோரும், அலங்கோலமாக உடை உடுத்த சிலரும் அந்தக் கூட்டத்தில் காணப்பட்டார்கள். பெரும்பாலான பெண்களின் இராணியற்ற உருவங்களைக் கண்டு, 'மூளை வளர்க்கும் கலையோடு உடல் வளர்க்கும் கலையையும் இங்கே கற்றுக் கொடுப்பதில்லை போலிருக்கிறது' என்று இரக்கப்பட்டான் தணிகாசலம்.

கடைசி கடைசியாக உமா சோர்ந்து போய் நடந்து வந்தாள். தோழிகள் எல்லோரும் அவளுக்கு முந்திக் கொண்டனர். ஏதோ விசாரம் பிடித்தவள் போல், வேறு எங்கோ நினைவாக, தணிகாசலத்தைத் தாண்டிச் சென்முள்.

''உமா!''

நின்று திரும்பிப் பார்த்தவுடன் அவளுடைய சோர்வும், விசாரமும் அவளிடமிருந்து விடைபெற்றுக் கொண்டன. எத்தனை ஆனந்தம் அவள் முகத்தில்! ''அதிசயமாக இருக்கிறதே, உங்கள் வரவு?'' என்று மிகுந்த குதூகலத்துடன் கேட்டாள்.

''உன்னை அழைத்துக் கொண்டு கடற்கரைக்குப் போகலாமென்று வந்தேன்.''

''பொய்யைப் பாருங்கள், பொய்யை! அப்படியென்முல் கௌரியுடன் சேர்ந்து வந்திருப்பீர்களே?''

''வா, போய்க் கொண்டே பேசுவோம்; கௌரிக்கு வீட்டில் வேலே இருக்கிறது. நான் மட்டும் வந்தேன்.''

நடைபாதை ஓரமாகவே அவர்கள் வெகு தூரம் நடந்தார்கள். நடக்கும் போது ஒருவருடன் ஒருவர் பேசிக் கொள்ளவில்லே. உமாவும் அமைதியாக வந்தாள்; தணிகாசலம் அவளிடம் பேச வேண்டிய விஷயங்களைத் தன் மனத்துக்குள் ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தான். சிக்கலே நாசூக்கான முறையில் அணுக வேண்டியிருந்தது. முதலில் அவளுக்குத் தெம்பு கொடுக்க வேண்டும்; அடுத்தாற்போல் ரவியைக் கல்யாணம் செய்து கொள்ள தூண்ட வேண்டும்.

மயிலாப்பூர் மூலேயில், தெரு தொடங்கும் இடத்துக்கு முன்னுல் உள்ள கடற்கரைக்கு அவளே அழைத்துக் கொண்டு போனுன் தணிகாசலம். நீரும் நிலமும் சேருகிற விளிம்பின் அருகே நான்கைந்து கட்டு மரங்கள் கிடந்தன. அவற்றில் ஒன்றில் முதுகைச் சாய்த்துக் கொண்டு கால்களை நீட்டி விட்டான். எதிரில் கால்களை மடித்துக் கொண்டு அமர்ந்தாள் உமா.



எப்படித் தொடங்குவது என்று அவன் நினைத்த வேளையில், அவளே தொடங்கினுள்: ''மாமா! இப்படி மணலில் உட்காருவதற்குப் பதிலாக, நுங்கும் நுரையுமாய்க் கொப்பளிக்கும் அலைகளின் வெள்ளைத் திவலைகளுக்குமேல் உட்கார்ந்தால் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்!''

'ஐயோ, பெண்ணே' என்று மனத்துக்குள்ளேயே அநுதாபப் பட்டுக்கொண்டு, ''பொங்கி வரும் அலைகளுக்கு மேலே உட்கார்ந்தால் விலே மதிப்பில்லாத உயிர் பறி போய் விடும்'' என்முன்.

''அப்படி உயிர் போவதே ஒரு தனி இன்பமில்லையா!''

''வாழ்வைப் பற்றிப் பேசவந்த இடத்தில் சாவைப்பற்றிப் பேசாதே!'' என்று கண்டித்தான் தணிகாசலம். ''பேசினால் உன் பல்லைப் பிடுங்கி விடுவேன்.''

''எங்கே, பிடுங்குங்கள்!'' அலை முத்துக்கள்போல் பளிச்சிட்ட அவள் பல் வரிசை வெளியே தெரிந்தது.

''உமா! இன்றைக்கு உன் வாழ்வில் ஒரு திருப்பம் ஏற்படுத்த வந்திருக்கிறேன். இது உனக்கு முக்கியமான நாள். நான் பேசுவதை நன்றாகக் கேட்டு விட்டு, நன்றாக அலசி ஆராய்ந்து பார்த்து, இந்த இடத்தை விட்டுப் புறப்படுவதற்குள் எனக்கொரு நல்ல முடிவு சொல்ல வேண்டும்.''

''முக்கியமான நாள்தான்'' என்று நகைத்தாள் உமா. ''நீங்கள் பெரிய மனம் வைத்து என்னைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறீர்கள்; பெரிய மனத்தோடு என்னிடம் மனம் விட்டுப் பேசப் போகிறீர்கள்; பெரிய மனம் பண்ணி, என்னையும் ஒரு பொருட்டாய் மதிக்கிறீர்கள். — முக்கியமான நாள் இல்லையா, இது?''

அவள் சொல்லிக்கொண்டு அவனையே மடக்கப் பார்த்த உமாவை அவன் தடுத்து நிறுத்தி, மாப்பிள்ளை வீட்டாரின் கடிதத்தையும், அதனால் சௌந்தரத்தம்மாளுக்கு ஏற்பட்ட கோபத்தையும் விளக்கிக் கூறினான். அவனுடைய முதல் கோரிக்கையின் முடிவுரை இது: ''தொட்டாற் சுருங்கிகள் இந்த உலகத்தில் துன்பமில்லாமல் வாழ முடியாது. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சௌந்தரத்தம்மாள் கொடுக்கும் தொல்லைகளைப் பொறுத்துக் கொள். நானும் கௌரியும் உன்னை எந்தச் சமயத்திலும் விட்டு விடமாட்டோம்.''

''நீங்கள் எல்லோரும் என்னிடம் அன்பாயிருந்தால், நீங்கள் என்னை அன்னியமாக நினைக்காமல் இருந்தால், சௌந்தரத்தம்மாள் எனக்கு விஷம் கொடுத்தால் கூட நான் அதை வாங்கிச் சாப்பிடுகிறேன், மாமா!''

இலவம் பஞ்சுபோன்ற மிருதுவான மனம் படைத்த உமா இவ்வளவு துணிவுடன் பேசியது அவனுக்கு அளவற்ற வியப்பைத் தந்தது.

''எனக்கு ஆயிரம் கவலைகள். உலகத்தின் கவலைகளையெல்லாம் என் கவலைகளாக இழுத்துப் போட்டுக் கொண்டு நான் சிரமப் படுகிறவன். அதனால் என்னை ஒரு பிடிப்பாய் நீ நினைக்க வேண்டாம். கௌரியும் அம்மாளும் எப்போதும் உனக்கு உதவி செய்வார்கள்.''

''ஆயிரம் கவலைகளுடன் என்னுடைய கவலையும் ஆயிரத்து ஒன்றாய் உங்களிடம் இருக்கட்டுமே!''

தணிகாசலம் சற்று நேரம் தன் பேச்சை நிறுத்தினான். 'அவளிடம் கவலையில்லாமலா நான் இங்கு வந்திருக்கிறேன்?' என்று தன்னையே கேட்டுக் கொண்டான். ''சரி உமா, அப்படியே ஆகட்டும்'' என்று ஒப்புக் கொண்டு, அடுத்தாற்போல் உள்ள கல்யாணச் செய்தியைக் கூறினான்.

ரவியை அவள் மணக்கச் சம்மதிக்க வேண்டும். நல்ல வாய்ப்புக்கள் எல்லாப் பெண்களுக்கும் கிடைப்பதில்லை. கிடைக்கும்போது அதை நழுவ விடக்கூடாது. உதவிக் கலெக்டர் நாளைக்கே கலெக்டராகி, அடுத்தாற்போல் இன்னும் பல உயர்ந்த பதவிகளைப் பெறலாம். ரவியோ அழகான இளைஞர்; அவரே உமாவை விரும்புகிறார்.

இவ்வளவையும் கேட்டு விட்டு, ''என்ன மாமா! 'போனால் வராது; பொழுது பட்டால் கிட்டாது' என்பது



போல் அவருக்காகக் கடை விரிக்கிறீர்களே?'' என்றாள். ''அவர் உங்களுக்கு ஏதும் கடிதம் எழுதியிருக்கிறாரா?—லஞ்சம் கொடுத்துக் கல்யாணம் செய்து கொள்வார் போலிருக்கிறதே!''

''அப்பப்பா! உனக்கு யாராவது உதவி செய்வதற்கே நீ இடம் கொடுக்க மாட்டேன் என்கிறாய்.''

''இது உதவியில்லை; இந்தப் பேச்சை இத்தோடு நிறுத்திக் கொள்ளுங்கள்.''

பிறகு அவள் தன் நோட்டுப் புத்தகத்தைத் திறந்து, அதிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து அவனிடம் நீட்டினாள். இன்றைக்கு எனக்கு வந்த கடிதம் இது: ரவி எழுதியிருக்கிறார்; உங்களிடம் காண்பிக்க வேண்டுமென்று வைத்திருந்தேன்.''

ரவியின் கடிதச் சுருக்கம் இது:—

உமாவின் முகத்தில் கவிந்திருந்த சோகம் நிறைந்த அழகை வர்ணிப்பதற்கு அந்தக் கடிதம் போதாது. தம்மை அவளிடம் கவர்ந்தது அந்த முகம்தான். கவிதை எழுதத் தெரிந்தவள் என்பதால் அவருக்குப் பெருமை வந்திருக்கிறது. தில்லியில் அவள் தகப்பனார் வசிப்பதால், உத்தியோக விஷயங்களில் அவர் ஏதேனும் நல்ல உதவிசெய்யக் கூடும். திருமணத்துக்கு அவள் மறுக்கவும் மாட்டாள் என்று அவர் நம்புகிறார்.

கடிதத்தைத் திரும்பவும் அவளிடம் நீட்டியபடியே, ''துடிப்புள்ள பையன்; முன்னுக்கு வரக் கூடியவர்'' என்றான் தணிகாசலம். உமா வெறுப்புடன் உதட்டைப் பிதுக்கினாள். அந்தக் கடிதத்தை வாங்கிச் சுக்குநூறாய்க் கிழித்துக் காற்றிலே பறக்க விட்டாள். அவளுடைய இச் செய்கையைக் கண்டு அவன் மனம் துணுக்குற்றது.

''உமா! நான் இப்படிச் சொல்வதற்காக நீ கோபித்துக் கொள்ளக் கூடாது; பெண்கள் காலா காலத்தில் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். கல்யாணத்தின் அவசியம் உனக்கு இப்போது தெரியாவிட்டாலும், முப்பது-நாற்பது வயதுக்கு மேல் நீ அதற்காக வருந்தப்படும் நிலை வரும். பெண்களுக்குக் குடும்ப வாழ்வில் பற்றுதல், குழந்தை குட்டிகளிடம் அன்பு, சமையற்கலையின் பக்குவம், வரும் விருந்து பேணுதல் முதலிய உயர்ந்த பண்புகள் இருக்க வேண்டுமென நினைக்கிறவன் நான்.''

''குடும்ப வாழ்வை வெறுத்து வெளிப் பகட்டில் மயங்கித் திரியும் பட்டுப் பூச்சியில்லை நான். உங்கள் அம்மாவைப் போய்க் கேட்டுப் பாருங்கள். உங்களுக்குத்தான் குடும்பக் கவலை இல்லை. கல்யாணி அத்தை எனக்கு எவ்வளவோ கற்றுக் கொடுத்திருக்கிறார்கள்... உங்கள் பையன் பரமசிவத்தின் அழுக்குத் துணிகளைக் கசக்கிப் போடுவதில் கூட நான் தனியான இன்பத்தைக் காணுகிறேன், மாமா!'' என்றாள் உமா.

மெய் சிலிர்த்தது தணிகாசலத்துக்கு. சலவைத் துணியில் அழுக்குப் படாமல்



ஒயிலாக நெளிந்து திரியும் ஊதாரி இல்லையா இந்தப் பெண் ?

'' என்றாலும் கல்யாணம்......''

'' இனிமேல் அந்தப் பேச்சை எடுத்தால் நான் அழுது விடுவேன். சௌந்தரத்தம்மாளின் வெறுப்பைக்கூட என்னால் தாங்கிக் கொள்ள முடியும். ஆனால் உங்கள் அன்பை என்னால் தாங்க முடியாது போலிருக்கிறது.''

'' யோசித்துப் பார், உமா !''

'' நீங்களும் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். வாழ்க்கையில் உங்களுக்கொரு லட்சியம் இருப்பது போல் எனக்கும் ஏன் இருக்கக் கூடாது? சமயத்துறை, கல்வித்துறை இப்படிப் பல துறைகளுக்காகத் தங்களை அர்ப்பணித்திருப்பவர்களை நீங்கள் கண்டதில்லையா ?'' என்று கேட்டாள்.

'' பெண்களைப் பொறுத்த மட்டில் வாழ்க்கை கொடியது, உமா ! நீ பஞ்சு மனம் படைத்த பேதை; லட்சியம் என்பது இரும்பு மனம் படைத்த உறுதியாளர்களின் கனவு.''

'' இலவம் பஞ்சுக்குள்ளே இரும்புக்கு ஒப்பான விதைகள் இருப்பதை நீங்கள் கண்டதில்லையா ?''

'' விளங்கும்படி சொல். உன் நோக்கந்தான் என்ன ?''

'' அது எனக்கே இன்னும் விளங்கவில்லை. விளங்கும்போது, உங்களிடம் சொல்ல வேண்டிய அவசியம் வந்தால், அப்போது சொல்கிறேன். அதுவரை என்னைத் தொல்லைப்படுத்தாதீர்கள். இனி நீங்கள் ரவிக்காக என்னிடம் பரிந்து பேசினால் இந்த இடத்தை விட்டே எழுந்து போய் விடுவேன்.''

'பளீர்' என்று கடலுக்குள் ஒரு சத்தம் கேட்டது. அலைகள் குமுறிக் கொண்டு இருபுறமும் சிதறி விழுந்தன. கரையிலிருந்த கட்டை மரத்தை வேகமாய்க் கடலுக்குள் தள்ளி விட்டு, இரண்டு மீனவர்கள் அதன் மேல் தொத்தி ஏறிக் கொண்டிருந்தார்கள். அடுத்த கணத்தில் துடுப்பைச் சுழற்றிக் கொண்டே அவர்கள் கடலைக் கிழிக்கத் தொடங்கினர்.

தணிகாசலமும் உமாவும் ஒருவரையொருவர் ஏறிட்டுப் பார்த்துக் கொண்டனர். தணிகாசலத்துக்கு அவள் பேச்சுக்களை மெல்லவும் முடியவில்லை; விழுங்கவும் முடியவில்லை. இனிமேல் வாயைத் திறந்தால், படாரென்று எழுந்து போனாலும் போய் விடுவாள்.—இவளுடைய மனத்துக்குள்ளே என்னதான் அப்படி ரகசியமான லட்சியம் இருக்கிறது ?

பத்து நாட்களாக அவள் தன்னுடன் முகம் கொடுத்துப் பேசாததற்கு ரவி ஒரு காரணமுமில்லை என்பது அவனுக்கு இப்போது தெரிந்தது. '' ஏன் உமா என்னோடு இந்த வாரம் முழுவதும் பேசாமல் இருந்தாய் ?'' என்றான்.

'' இனிமேல் பேசாமல் இருக்க மாட்டேன்'' என்று சிரித்தாள். '' அன்றைக்கு நீங்கள் கூறிய செங்கமலத்தின் கதையைக் கேட்டவுடன் எனக்கு உங்களைப் பார்க்கவே பிடிக்கவில்லை. உங்களைக் குறை உள்ளவர் என்று நினைத்தேன். இப்போது அப்படித் தோன்றவில்லை. அந்த அதிர்ச்சி இன்றோடு தீர்ந்து விட்டது. நீங்கள் மிகவும் நல்லவர். கௌரியிடம் நீங்கள் உயிரையே வைத்திருக்கிறீர்களே !''

தணிகாசலம் மௌனமாக அவள் மனப்போக்கை எடை போட்டான். அவனுடைய நெற்றிப் புருவங்களுக்கு மத்தியில் தோன்றிய இரண்டு வண்ணப் பொட்டுக்கள் அவன் விழிகளைக் கூர்மையாக்கின. நெற்றியின் வழியே அவன் மூளைக்கும், பிறகு இருதயத்துக்கும் சென்றான். தேவகியிடம் ஏற்படாத சந்தேகம் இவளுக்குச் செங்கமலத்திடம் மட்டும் எப்படி ஏற்பட்டது? தேவகியிடம் இவள் குழைந்து—குழைந்து பழகினாள். ஐந்தே நிமிஷங்கள் செங்கமலத்துடன் நின்று பேசியதைப் பொறுக்காத இவள் மனம், நாட்கணக்கில் தேவகியுடன் கிராமத்துக்குச் செல்வதை அநுமதித்தது. தேவகிக்கும் இவளுக்கும் சிற்சில விஷயங்களில் ஒற்றுமை இருக்குமோ ?—செங்கமலத்தின் அழகு பரபரப்பை ஊட்டும் அழகு; தேவகியின் அழகு பரபரப்பைத் தணிக்கும் அழகு. உமாவின் அழகு ?......:

அழகின் ஆராய்ச்சியை அவன் அத்துடன் நிறுத்திக் கொண்டான். வானம் மங்கிக் கொண்டு வந்தது.

'' புறப்படலாமா ?'' என்றான்.

'' இன்னும் சிறிது நேரம் இங்கேயே உட்கார்ந்து கொண்டிருப்போம். எனக்காக நீங்கள் கடலைப் பார்த்துக் கொண்டே ஒரு கதையை உருவாக்குங்களேன்'' என்றாள் உமா.

'' நினைத்த இடத்தில் கதை உருவாகுமா, உமா ! நான் வரகவியல்லவே? எனக்கு அவ்வளவு திறமையில்லை.''

'' பேசாமல் சிந்தனை செய்யுங்கள். இந்தச் சூழ்நிலையில் ஒரு கற்பனை பிறக்காவிட்டால் நீங்கள் கலைஞரே அல்ல.— உம் ! என்னைப் பார்க்காதீர்கள். கடலையும் வானத்தையும் பாருங்கள். உங்கள் மனத்தில் நர்த்தனமாடும் கலைத்தேவியின் இருவடிகளுக்கு நான் மானசிகமாக மலர் தூவிக் கொண்டே இருக்கிறேன்.''

'' உமா !...''

'' பேசாதீர்கள் ! நான் உங்களிடம் கேட்கும் வரம் இதுதான். அன்புப்

பிரசித்தி பெற்றது...

சிந்தனைக்கு ஒரு சிட்டிகை

# அப்பாதுரைப் பொடி



காரம், மணம், குணம்,
நிறம் நிறைந்தது.
ஒரு முறை உபயோகிக்க
உண்மை விளங்கும்.

**ஆ. அப்பாதுரை முதலியார் & சன்.**
புகையிலை & பொடி வியாபாரம்
B. P. No. 189, 55, ஆச்சாரப்பன் தெரு, சென்னை-1

வியாபாரிகள் விலாசத்திற்கு எழுதவும்

---

# மேலும் மலிவானது!

**குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்**






# ப்ரோடெக்ஸ்

**சர்வ பிரயோக டாய்லட் பவுடர்**

ஜயன்ட்சைஸ் அழகிய
பப்புடன் கிடைக்கும்!

பிச்சை இதுதான்.'' அவள், கண்களை மூடிக் கொண்டு, தியானத்தில் அமரும் கன்னித் தெய்வமென அமர்ந்திருந்தாள். தணிகாசலம் நீலத் திரைக் கடலின் பக்கமாகத் திரும்பினான்.

அவன் மனம் அலைமோதியது. 'என் கலையில் எனக்கே இத்தனை நம்பிக்கையில்லை; நான் ஆராய்ந்து பார்க்கும் சந்தேகப் பிராணி; அவள் உணர்ந்து போற்றும் அடிமை. பக்தியின் மேலிட்டால் பொங்கும் தன் அலை மனத்திலிருந்து, ஒரு கற்பனை வித்தை என் மனத்துக்கு அவள் ஏவி விடுவதற்கு முயற்சி செய்கிறாளா?'

கால்மணி நேரம் அமைதியாகச் சென்றது. ''கதை பிறந்து விட்டது, உமா!''

''வாருங்கள், போகலாம்.''

தெய்வ சந்நிதியிலிருந்து புறப்படும் ஊதுவத்திகளின் மணம் நிறைந்த இழைகளைப் போல அவர்கள் மெய்ம் மறந்து அந்த இடத்தை விட்டு எழுந்தார்கள். உமாவின் கண்கள் பக்திக் கிறக்கத்தால் பாதி திறந்தும் பாதி திறவாமலும் வேறு ஏதோ உலகத்தில் சஞ்சரித்தன. தணிகாசலமும் அவளிடம் வழியில் பேச்சுக் கொடுக்கவில்லை.

அவர்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தவுடன், தணிகாசலம் சௌந்தரத்தம்மாளுக்குத் தெரியாதபடி மாடிக்குச் சென்றான். கீழ் வீட்டில் திடீரென்று இடி இடித்தது; புயல் வீசியது; மழை கொட்டியது. வீட்டுக் கூரையை நொறுக்கி விடுவது போல் சௌந்தரத்தம்மாள் கூச்சல் போட்டாள்.

உமாவின் குரல் எழும்பவே இல்லை.

## அத்தியாயம் 19

# இரும்பு பிடித்த கரம்

''இதனை இதனால் இவன்முடிக்கும்
என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்''

யார் யாரிடம் எந்தத் திறமை இருக்கிறதோ அதற்கேற்ற பணி கிடைத்தால் அவர்களுக்கும் பலன், சமுதாயத்துக்கும் பலன் என்பது வள்ளுவர் வாக்கு. திருக்குறளின் இந்த வரிகளை நம்பித் தணிகாசலம் சென்னை நகரத்தில் வேலைக்கு வேட்டையாடினான். கல்லூரியை விட்டு வெளியில் வந்தவுடன், எழுத்துத் துறையில் அவன் ஏழெட்டு ஆண்டுகள் பெற்ற பயிற்சி, அவனுக்கு ஒரு வேலை தேடித் தரவும், அவனுக்கு வாழ்க்கை வசதிகளை அளிக்கவும் மறுத்து விட்டது. 'மலர்க் கொத்து' ஆசிரியரும் அவனுக்கு வேலை தேடிப் பார்த்துக் களைத்துப் போனார். அவனுடைய நாணயத்தையும் தகுதியையும் ஒப்புக் கொள்ளுவதற்குச் சென்னையில் ஆட்கள் கிடைக்கவில்லை. 'மலர்க் கொத்து' இலக்கியப் பத்திரிகையாதலால் அதனிடம் புகழ் மிகுதி; பணம் குறைவு.

எத்தனையோ அலுவலகங்களில் ஏறி இறங்கிய பின்னர் ஒரு இரும்புத் தொழிற்சாலை அவனுக்குத் தன் கதவுகளைத் திறந்து விட்டது. 'பேனாப் பிடிக்கும் கரத்தில் சுத்தியலும் சம்மட்டியுமா?'— கேள்வி கேட்கலாம். வயிற்றுக்கு யார் பதில் சொல்வது? 'அதனை அவன்கண் விடல்' என்ற திருக்குறளை, நம்முடைய தமிழர்கள் சிறிய மாற்றத்துக்குள்ளாக்கி, 'அதனை அவன்கண் விடேல்' என்று தம் வாழ்க்கை நடைமுறைக்கு எடுத்துக் கொண்டார்கள்.

மாம்பலத்தின் ஒரு பகுதியிலே அந்த 'சிட்டி இன்ஜினியரிங் ஒர்க்ஸ்' என்ற தொழிற்சாலை இருந்தது. உழவுத்தொழிலுக்கு வேண்டிய புதுமையான ஏர், கலப்பை, மண்வெட்டி, மண் கொத்தி, கருக்கரிவாள் முதலிய கருவிகளையும், மோட்டார், சைக்கிள் முதலிய வண்டிகளுக்குரிய தனிப் பகுதிகளையும் அவர்களே உற்பத்தி செய்து வந்தார்கள். அதன் உரிமையாளர் கோவிந்தராஜுவின் குமாரர்களில் ஒருவர், தணிகாசலத்துக்கே தெரியாத வாசகர்களில் ஒருவராக இருந்ததால் அந்த வேலை எதிர்பாராதவிதமாய்க் கிடைத்தது.

''நீங்கள் இந்த வேலைக்கு வரலாமா?'' என்று தயங்கினார் அந்த இளைஞர்.

தணிகாசலம் ஒரு விளக்கம் கூறி அவரை இணங்க வைத்தான். அதன் பிறகு உரிமையாளர் தமது நிலையைத் தணிகாசலத்திடம் வெளியிட்டார்:

''பயிற்சியில்லாத யாருக்கும் நாங்கள் வேலை கொடுப்பதில்லை. உங்கள் விஷயத்தில் என் பையனை நம்பி வேலை தருகிறேன். முதலில் ஐந்தாறு மாதங்கள் குறிப்பிட்ட பகுதியில் போய்ப் பழகிக் கொள்ளுங்கள். பிறகு தனியாக உங்களிடம் ஒரு பகுதியைக் கொடுத்துப் பார்க்கச் சொல்கிறோம்.''

நூறு மனிதர்களுக்கு மேல் இரவு பகலாகச் சுறுசுறுப்புடன் அங்கே உழைத்தார்கள். ஒரு வாரம் பகல், மறு வாரம் இரவு என்ற முறையில் வேலையில் மாற்

றம் இருந்தது. தேனீக்களின் ரீங்காரம் மிகைப்படுத்தப்படுவது போல் எந்த நேரத்திலும் அங்கு இயந்திரங்களின் பயங்கரச் சத்தம் நிறைந்திருந்தது.

அங்கே இரும்பைக் காய்ச்சி உருக்கி ஞர்கள்; இரும்பை வெட்டி இணைத் தார்கள்; உருக்குக் கம்பிகளை முறுக்கி வளைத்துப் பின்னினர்கள். வெல்லப் பாகாய் இரும்பு கொதித்தது. அல்வாத் துண்டுகளை நறுக்குவதைப் போல் அரைக் கணத்தில் பெரிய பெரிய இரும் புத் தூண்களைத் துண்டுபோட்டார்கள். மின்சார சக்தி அங்கே பற்பல அற்புதங் களைச் செய்து கொண்டிருந்தது. 'லேத்' என்னும் கடைசல் இயந்திரம் செய்யும் மாயாஜால வித்தைகளைக் கண்டு வியந் தான் தணிகாசலம். (திரைப் படங் களில் வரும் குதிரைக் கொம்பு மாயா ஜாலமில்லை இது!) அந்தக் கடை சல் இயந்திரம், குயவன் கைக் களி மண்ணை மண் பாண்டங்களாகச் செய்து கொடுப்பது போல், இரும்புத் துண்டு களை இயந்திரக் கருவிகளாக்கிச் செப்பிடு வித்தைகள் செய்தது.

பழக்கமே இல்லாத புதிய வேலை அல்லவா? முதல் ஆறு மாதங்கள் அவ னுடைய பொறுமையைச் சோதனை செய்து விட்டன. குனிந்து நிமிராத உடல் அடிக்கடி ஒத்துழைக்க மறுத்தது. கை கால்கள் வலி எடுத்தன. கணுவுக் குக் கணு குடைச்சல் தாங்க முடிய வில்லை. கண்களுக்குச் சில வேளைகளில் கறுப்புக் கண்ணுடி போட்டுக் கொள் வதை மறந்து, நெருப்புடன் வேலை செய்ய முற்படுவான் தணிகாசலம். உலோகங்களை வெட்டுவதற்கும் ஒட்டுவ தற்கும் பயன்படும் மின்சார ஒளிக் கதிர் பழக்கமில்லாத விழிகளை இலேசாகத் தாக்குவதுமுண்டு. இரண்டு நாட்களுக் குக் கண் எரிச்சல் பொறுக்க முடியாது.

நாளா வட்டத்தில் அவனுக்கு ஒவ் வொன்றுய்ப் பிடிபட்டுக் கொண்டு வந் தன. அவன் உடல் சொன்னபடி கேட் பதற்குப் பணிந்து கொடுத்தது. ஏழெட்டு மாதங்களாக எழுதுவதற்கு ஓய்வு கிடைக்காமல் திண்டாடியவன், பிறகு எப்படியோ ஓய்வு தேடிக் கொண் டான். உமா அவன் உத்தரவுக்குக் கைகட்டிக் காத்திருந்தாள்.

இரும்பின் வலிமையால் அவனது எழுத்தார்வத்தை நசுக்க முடியவில்லை. தசையினைத் தீ சுட்டது உண்மையென் ருலும், அந்தத் தொழிலாளர்களின் வாழ்வு அவன் மனத்தை மலரவைத்தது.

தணிகாசலத்தின் வீட்டு வாழ்க்கை; குடும்பக் காட்சி இது:

இரவு நேரங்களில் உழைத்துக் களைத்த அவனுடைய உடலை, கௌரி தன் உறுதி பெற்ற கரங்களால் மெல்ல-மெல்லப் பிடித்து விடுவாள். எரிச்சல் தரும் கண் களை மூடிக் கொண்டே அவன் கட்டிலில் புரண்டு கொடுப்பான். அந்த வேளை களில் உமா, தணிகாசலத்துக்குப் பிடித்தமான நூல்களைப் படித்துக் காட் டுவாள். உருக்கத்தோடு, உணர்ச்சி யோடு, கேட்பவன் மனத்தில் ஆழமாய்ப் பதியும்படி படிப்பாள். தேவையான இடங்களை இரண்டு முறைகள் படித்து விளக்கம் கூறுவதும் உண்டு.

தணிகாசலத்தின் மனம் ஆனந்தத் தால் பூரிக்கும் அற்புதப் பொழுதுகள் அவை. கௌரியின் கரங்கள் தன் உடல் வலியைப் போக்குவதிலும், உமாவின் குரல் தன் உள்ளத்து இருள் நீக்குவதி லும் போட்டி போடுவதைக் கண்டு, 'நான் பாக்கியசாலி! நான் பாக்கிய சாலி!' என்று ஆயிரம் முறைகள் தனக்குள் சொல்லிக்கொண்டு பெருமை கொள்வான் தணிகாசலம்.

ஒருநாள், தணிகாசலத்தின் கவனக் குறைவால் தொழிற்சாலையில் சிறு தவறு நேர்ந்து விட்டது. உணர்ச்சியற்ற இரும்பு இயந்திரம் இந்த மனித இயந் திரத்தை நன்ருகப் பதம் பார்த்து விட்டதென்றே சொல்லலாம்.

'மலர்க் கொத்து' பத்திரிகையில் அப்போது அவனுடைய அடுத்த நெடுங் கதை வெளி வந்து கொண்டிருந்தது. கதையை முடித்துக் கொடுக்க நேர மில்லாமல் அவ்வப்போது எழுதிக் கொடுத்து வந்தான். அதனுல் அடுத்த மாதக் கதைப் பகுதியில் அவன் மன மும், இயந்திரத்தின் அருகில் அவ னுடைய உடலும் இருந்தன.

''வந்து ஒரு கை பிடிக்கிறீர்களா?''

அடுத்தாற்போல் இருந்த தொழி லாளர், அவருக்கும் அடுத்தாற்போல் இருந்த மற்ருெரு தொழிலாளரை உத



விக்கு அழைத்தார். மற்றவரின் காதில் அது விழவில்லை. தணிகாசலம் தானாகவே அந்த இடத்துக்கு உதவிக்கு விரைந்து சென்றான்.

மின் விசையைப் போட்டு விட்டு, இரும்பு உருளையைச் சுற்றிவிட முயற்சி செய்துகொண்டிருந்தார் அடுத்தவர். தணிகாசலத்தின் பரபரப்பும், முரட்டுத்தனமும், உதவி செய்வதில் ஆர்வமும், நிதானித்துப் பார்க்கவில்லை.

“உம்! சுற்றுங்கள்!” என்று கத்திக் கொண்டே, அவர் தயாராவதற்கு முன்பே, தன்னுடைய மூச்சை அடக்கிக் கொண்டு சுற்றிவிட்டான்.

‘வீர்’ரென்று சக்கரம் சுழன்று வேகமாக அலறியது. ‘வீல்!’ என்று கத்திக் கொண்டே தரையில் விழுந்தான் தணிகாசலம்.

உடனே மின்சக்தி நிறுத்தப் பட்டது. உருளைகள் ஓய்ந்தன; சம்மட்டிகள் சத்தங்களை அடக்கின; ‘ஹோ!’ என்று உறுமிக் கொண்டிருந்த தொழிற்சாலை பயங்கரமான அமைதியைப் பெற்றுத் திகழ்ந்தது.

முழங்கை மூட்டுப் பிசகி விட்டது தணிகாசலத்துக்கு. நல்ல வேளையா, பொல்லாத வேளையா என்று அதைச் சொல்ல முடியாது. நல்ல வேளை என்றால், அவனுக்கு எலும்பு முறியவில்லை; பொல்லாத வேளை என்றால்,



குற்றால முனிவர் ரஸிகமணி திரு டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களின் அருமைப் பேரனும், இலக்கிய வானில் மின்னும் நட்சத்திரமாகத் திகழ்ந்த திரு தீத்தாரப்பன் “தீபன்” அவர்களின் புதல்வருமான திரு தீப. நடராஜனுக்கும் திரு டி. கே. தீத்தாரப்ப முதலியார் அவர்களின் செல்வப் புதல்வி திருமதி முத்தம்மாள் அண்ணிக்கும் சென்ற ஜனவரி முப்பத்தோராம் நாள் திருக்குற்றாலத்தில் கோலாகலமாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்கு ரஸிகமணி அவர்களின் வட்டத்தொட்டி இலக்கிய நண்பர்களும், அவருடைய அன்புக்குப் பாத்திரமாக விளங்கிய கணக்கற்ற ரஸிக அன்பர்களும், பிரமுகர்களும், கல்கி காரியாலய நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினார்கள். ராஜாஜி அவர்களிடமிருந்து வந்திருந்த வாழ்த்துச் செய்தி திருமணத்தின் சிறப்புக்குச் சிகரமாகத் திகழ்ந்தது.

புதுமணத் தம்பதிகளான திரு நடராஜனும், திருமதி முத்தம்மாள் அண்ணியும் எல்லா நலன்களுடன் பல்லாண்டு வாழக் குற்றால நாதரும், குழல்வாய்மொழி அம்மையும் அருள் புரியப் பிரார்த்திக்கிறோம். **வாழ்க, நடராஜன் - முத்தம்மாள்!**

அவனுடைய வலது கை பாதிக்கப் பட்டது. தமிழ் எழுதுகிற கை!

கையை மடக்கித் தூளி கட்டி விட்டார் டாக்டர். படுக்கையில் பத்து நாட்களும், அறைக்குள்ளே இருபது நாட்களுமாய்க் கழிந்தன. வேலைக்குப் போக முடியாதது கூட அவனுக்குக் கவலை இல்லை. தொடர்கதையைத் தொடர வேண்டுமே!

இப்பொழுது அவனுடைய வலது கையாக மாறிவிட்டாள் உமா. எழுத்து இதனால் தடைப்படவில்லை.

பிற்பகல் வேளை ஒன்றில், தணிகாசலம் ஒரு அதிசயத்தைக் கண்டு திகைப்புற்றான். அரைத் தூக்கத்திலிருக்கும் வேளையில் அவன் கழுத்தில் ஏதோ ஈரம் பட்ட மாதிரி தோன்றியது. கண்களை விழித்துப் பார்த்தான். முதலில் இரக்கம், பிறகு வியப்பு, அடுத்தாற்போல் கோபம் அவன் விழிகளில் தோன்றின. உமா, பொங்கி வடிந்த கண்ணீரைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டு சற்று விலகி உட்கார்ந்தாள். அவனுக்கு இந்த 'அழுமூஞ்சித்தனம்' மட்டிலும் பிடிக்கவே பிடிக்காது.

தணிகாசலம் எரிந்து விழுந்தான்: ''இந்த வீட்டில் ஒரே அழுகை மயம்! கௌரியும் அம்மாவும் அழுவது போதாதென்று நீயும் சேர்ந்து கொண்டாய்? உலகம் தெரியாத அவர்களுக்குத் தெம்பு சொல்வதை விட்டு விட்டு, இங்கே அழுவதற்கு வந்து விட்டாயே?''

''இனிமேல் நீங்கள் இந்த வேலைக்குப் போக வேண்டாம்'' என்றாள் உமா.

தணிகாசலம் சிரித்தான்: ''எனக்குப் பிடித்தமான வேலை இது: மூளையால் வேலை செய்கிறவர்களிடமுள்ள போட்டி பொறாமைகள் இதில் குறைவு. தவிரவும் இதில் எனக்குப் போதிய ஓய்வு கிடைக்கிறது. இதை நான் விடமாட்டேன்.''

உமா அவனுடைய நிலையைப் புரிந்து கொள்ளாமல் இன்னும் நன்றாக விசித்து விசித்து அழுதாள்.

''இதோ பார், உமா! இந்த வேலையை விட்டு விட்டால் எனக்குப் படி அளப்பது யார்? என் கடைசி மூச்சுவரை தமிழுக்கும் நாட்டுக்கும் உழைக்கிறேன். நீ எனக்குச் சம்பளம் தருகிறாயா?''

உமா உடனே ஆனந்தக் கூத்தாடினாள்: ''கட்டாயம் தருகிறேன். என் சம்பளத்தை விட நீங்கள் இப்போது வாங்கும் சம்பளம் குறைவுதானே? என் சம்பளம் முழுவதையும் உங்களிடமே கொடுத்து விடுகிறேன்.''

''பேசாமல் வாயை மூடு! இந்தப் பேச்சைக் கேட்டாலே, சௌந்தரத்தம்மாள் உன்னையும், எங்களையும் சேர்த்து, வீட்டை விட்டு வெளியே விரட்டி விடுவார்கள்.''

உமா குழந்தை போல் பிடிவாதம் பிடித்தாள். விளையாட்டுக்கும் வினைக்கும் அவளுக்கு வேற்றுமை தெரியவில்லை. யானையைப் பானைக்குள் அடைக்கச் சொன்ன குழந்தையாவது தேவலாம். ''வேலையை விட்டு விடுங்கள்!'' என்று பல்லவி பாடினாள்.

தணிகாசலத்தின் பொறுமை பறந்தது.

''முட்டாள்! உன் சம்பளத்தில் உயிர் வாழும் பேடியில்லை நான். இன்னொரு முறை அப்படிச் சொன்னால் உன்னுடைய கன்னம் பழுத்து விடும். எனக்குக் கடவுள் கொடுத்த கை இருக்கிறது. இதோ, இந்தக் கையால்...ஐயோ,...ஆ! அம்மா...கை! ......கை!''

ஆத்திரத்தால் அறிவிழந்து கட்டுப் போட்ட கையை வேகமாய் உதறினான் தணிகாசலம். துணிக்கட்டுப் பஞ்சாய்ப் பறந்தது. மயங்கிப் போய்த் தலையணையில் முகத்தைச் சாய்த்துக் கொண்டான். நடந்ததைத் தெரிந்து கொள்வதற்குள் வீட்டுப் பெண்கள் கூடிக் கதறினார்கள். உமா, டாக்டரை அழைத்து வந்து மறு கட்டுப் போடச் செய்தாள்.

நாற்பது நாட்கள் சென்ற பின் மீண்டும் அவன் இரும்புக் கரங்கள் இரும்பைப் பிடிக்கத் தொடங்கின. கூடிய வரையில் கற்பனை மனத்தை வீட்டிலேயே மூட்டை கட்டி வைத்து விட வேண்டுமென்று ஒரு உறுதி வருத்துக் கொண்டான். தொழிலகத்தில் தொழிலாளர்களோடு தொழிலாளியாய்ப் பழகியதால் அவனுக்கு அங்கே அனைவரும் உடன்பிறந்தோரானார்கள்.

பதினைந்து மாதங்கள் இப்படிச் சென்றன. மேலும் பல மாதங்களும் சில ஆண்டுகளும் செல்வதற்காகக் காத்திருந்தன. இடையில் சிறிய நிகழ்ச்சி ஒன்று மெதுவாகத் தலை நீட்டியது:—

ருக்மிணிக்குச் சென்ற ஆண்டில் திருமணம் நடைபெறவில்லை. ரெவின்யூ இன்ஸ்பெக்டருக்குத் தன் பெண்ணைக் கொடுக்க மறுத்து விட்டாள் சௌந்தரத்தம்மாள். உதவிக் கலெக்டர் ரவியோ ருக்மிணியை மறுத்து விட்டான். உமா ரவியை மணந்துகொள்ள முன் வராததால் சௌந்தரத்தம்மாளின் ஆத்திரம் உமாவிடம் சில மாதங்களே நீடித்திருந்தது.

இப்போது திரும்பவும் திடீரென்று உமாவை வாட்டி எடுக்கத் தொடங்கினாள் சௌந்தரம். இது அடுத்த கல்யாண 'சீஸன்.' இந்தப் பருவத்தில் எப்படியும் ருக்மிணியை நல்ல இடத்தில் தள்ளி விடவேண்டும். பெரிய புள்ளியின்

தற்குறிப் பிள்ளையொன்று அகப்படுவான் போல் தோன்றியது. அந்தத் தோற்றத்தைக் கண்டுவிட்டவுடனேயே சௌந்தரத்தம்மாள் பத்திரகாளியாக மாறத் துவங்கினாள். ''இந்தத் துடைகாலி வீட்டில் உள்ளவரையில் என் பெண்ணுக்குக் கல்யாணம் நடக்காது!'' என்று வசை பாடினாள்.

ஒரு நாள் சண்டை முற்றி ரசாபாசமாய்ப் போகும் அளவுக்கு வந்து நின்றது: ''உனக்குத்தான் லீவு வருகிறது. உன் அப்பாவிடம் போய்த் தொலையேன்! போய் விட்டு இரண்டு பேருமாய்க் கல்யாணத்துக்குத் திரும்பி வந்து சேருங்கள்.''

கோடை விடுமுறை வந்து விட்டது. உமாவின் பிழைப்பு அந்தரத்தில் தொங்கியது. ஒவ்வொரு நாளும் அவள் சௌந்தரத்தம்மாளின் சொல்லம்புகளால் செத்துப் பிழைத்தாள். கடைசியில் பேராசிரியருக்கு உமாவிடமிருந்து ஒரு கடிதம் சென்றது: ''நீங்கள் இந்த லீவுக்கு இங்கே வரவேண்டாம். வருகிற வெள்ளிக்கிழமை 'கிராண்ட்டிரங் எக்ஸ்பிரஸில்' புறப்பட்டு, அங்கு ஞாயிற்றுக்கிழமை இறங்குகிறேன். புதுதில்லி ரயிலடியில் எனக்காகக் காத்திருங்கள்.''

வெள்ளிக்கிழமை தணிகாசலத்துக்கு ஓய்வு நாளாதலால் அவளோடு 'சென்டிரல்' நிலையத்துக்குக் கிளம்பினான். உமாவுக்குச் சென்னையை விட்டுப்போவதற்கே மனமில்லை. ''என் உயிரெல்லாம் இந்த மாடியில்தான் சுற்றும்'' என்று தணிகாசலத்தின் வீட்டாரிடம் சொல்லிக் கொண்டாள். சௌந்தரத்தம்மாள் அவளை மிகுந்த மகிழ்ச்சியுடன் வழியனுப்பி வைத்ததில் யாரும் வியப்படையவில்லை.

ரயில் புறப்படும் நேரம் நெருங்க - நெருங்க உமாவின் புத்தி அவளிடம் இல்லை. கண்டிக்குத் தன் கணவனைக் கப்பலேற்றி விட்டுக் கலங்கும் தோட்டக் கூலியின் மனைவிபோல் அவள் நிலையழிந்து கலங்கினாள். எதைப் பேச வேண்டும், எப்படிப் பேச வேண்டும் என்றுகூட அவளுக்குப் புரியவில்லை. ரயில் புறப்படுகிற நேரம் பார்த்து, ''எனக்கு உங்களை யெல்லாம் விட்டுப் பிரிய மனமில்லை. மூன்று நாட்களும் நான் ரயிலில் அழுதுகொண்டே போவேன்; கீழே இறங்கி விடட்டுமா?'' என்று கேட்டுத் தேம்பினாள்.

தணிகாசலம் தைரியம் கூறினான்: ''எல்லாம் அப்பாவின் முகத்தைப் பார்த்தால் சரியாய்ப் போகும்.''

''சரியாய்ப் போகவே போகாது; என்னை உங்களுக்குத் தெரியாது.''

''மண்ணாங்கட்டி!'' என்று சொல்லிச் சிரித்தான் தணிகாசலம்.

''அந்த மண்ணாங்கட்டியுடன் நான் மறையும் வரையில் உங்களை மறக்கமாட்டேன், மாமா! மறக்க மாட்டேன்!''

ரயிலின் ஓட்டத்தில் அவள் தணிகாசலத்தின் கண்களுக்கு மறைந்தாள். ரயிலின் கரிப்புகை அவன் கண்களை மறைத்தது. துடைத்துக் கொண்டு பார்ப்பதற்குள் அவள் வெகு தூரம் சென்று விட்டாள். அவளுடைய கரம் மட்டும் சன்னலுக்கு வெளியே வேகமாக ஆடிக் கொண்டே இருந்தது. அவளுடைய வலது கரம் அது.

வீட்டுக்குத் திரும்பியவுடன், வாசலில் தந்தியும் கையுமாகக் காத்து நின்றாள் சௌந்தரத்தம்மாள். சந்திரசேகரன் தம்முடைய மகளுக்குக் கொடுத்



திருந்தார்: ''நீ வெள்ளிக்கிழமை தில்லிக்குப் புறப்படவேண்டாம். என் கடிதம் உனக்கு விரைவில் கிடைக்கும்.''

தணிகாசலம் முதலில் செய்வதறியாது விழித்தான்.

''இந்த அவசரக் குடுக்கையை யார் இப்படிப் புறப்படச் சொன்னது? அவர் ஊரில் இல்லாவிட்டால் இவள் எங்கு போய் நிற்பாள்?'' என்று ஒன்று மறியாதவள் போல் நீலிக் கண்ணீர் வடித்தாள் சௌந்தரத்தம்மாள்.

''புறப்பட்டுவிட்டாள்'' என்று மறு தந்தி கொடுத்து விட்டு மாடிக்குச் சென்றான் தணிகாசலம். தில்லிக்குப் புறப்பட்ட உமாவின் கதி எப்படி ஆகுமோ என்று பதறிப் போனார்கள் கௌரியும் கல்யாணி அம்மாளும். முதல் முறையாகத் துணையில்லாமல் உமா புறப்பட்டுப் போகிறாளே? (தொடரும்)

பொருளாதாரமும் பொதுமக்களும் 12

# நாணயச் செலாவணியும் பாங்கிகளும்

கே. சந்தானம்

யந்திரத் தொழிலும், யந்திரப் போக்கு வரத்தும் போலவே, நாணய முறையும் உலகில் புரட்சிகரமாக மாறியிருக்கிறது. முன் காலங்களில் ஏழைகள் பெரும்பாலும் பண்ட மாற்று முறையிலேயே தங்கள் சரக்குகளை விற்றுத்தமக்கு வேண்டிய சாமான்களை வாங்கினார்கள். சிறுபாலார் அரசாங்க முத்திரை கொண்ட தங்க, வெள்ளி, செப்பு நாணயத்தைக் கொண்டு சமாளித்தனர். இந்த நாணயங்களும் அவற்றிலுள்ள உலோகங்களின் விலை மதிப்பையொட்டிச்செலாவணியில் இருந்தன.

காகித நாணயம் தோன்றி, எல்லா வியாபாரமும் பணத்தின் வாயிலாக நடக்க ஆரம்பித்ததும், நாணயச் செலாவணி பொருளாதாரத்தின் அஸ்திவாரமாகிவிட்டது. முதலில் காகித நோட்டுகளுக்குப் பதிலாக வேண்டுவோருக்குத் தங்க வெள்ளி நாணயம் கொடுக்க வேண்டுமென்ற கட்டுப்பாடு இருந்தது. இரண்டு உலக மகாயுத்தங்களுக்குப் பின் இது சாத்தியமில்லாமல் போயிற்று. தற்சமயம் எல்லாத் தேசங்களிலும் நாணயத்தின் மதிப்பு அரசாங்கத்தின் சட்டத்தைப் பொறுத்திருக்கிறது. நாட்டில் வியாபாரத்துக்கோ, லேவாதேவிக்கோ சர்க்கார் நோட்டுகளை வாங்க மறுப்பது குற்றமாகும். அதைக் கொடுத்து விலையையோ, கடனையோ தீர்ப்பதற்குப் பிரஜைகளுக்கு உரிமையுண்டு. பாரத சர்க்கார் சார்பில் நோட்டுகளை வழங்குவதற்கு ரிசர்வ் பாங்கி ஒன்றுக்கே அதிகாரமுண்டு. பத்து வருஷங்களுக்கு முன் அது ஒரு தனி கம்பெனியாக அமைக்கப்பட்டு, சர்க்கார் மேற்பார்வையில் இருந்தது. சுதந்திரம் வந்தபின் அதை நேரில் சர்க்கார் ஸ்தாபனமாகச் செய்து விட்டனர். ரிசர்வ் பாங்கி மூலம் செலாவணி செய்யப்பட்ட நாணயம் 1951-52ல் 1216 கோடியாக விருந்து 1956-57ல் 1556 கோடியாக அதிகரித்தது.

சட்டப்படி ரிசர்வ் பாங்கி நோட்டுகளே நாணயமானாலும், வியாபாரமும் லேவாதேவியும் பாங்கிகளின் செக் மூலம் பெரும் பாகம் நடைபெறுகின்றன. ரிசர்வ் பாங்கியின் அத்தாட்சி பெற்று, அதனிடமிருந்து உதவி பெற உரிமையுள்ள பாங்கிகளுக்கு ஷெடியூலில் சேர்ந்த பாங்கிகள் என்று பெயர். அவ்வித பாங்கிகளின் எண்ணிக்கை 89. ஒவ்வொன்றுக்கும் பல இடங்களில் கிளைகள் உண்டு. அப்படி முக்கிய பாங்கிகளின் மொத்த கிளைகள் 2898. ஜனங்களின் மிச்சப் பணத்தை ஏற்று வட்டி கொடுப்பதும், வியாபாரிகளுக்குச் சாமான்கள் பேரிலும், சர்க்கார் கடன் பத்திரத்தின் மீதும், இதர அடகுகள் மேலும் வட்டிக்குக் கடன் கொடுப்பதும் பாங்கிகளின் முக்கிய வேலைகள். இக்காலத்தில் பாங்கிகள் இல்லாமல் இதர பொருளாதாரக் காரியங்கள் நடைபெற முடியாது.

பாங்கிகள் எல்லாவற்றிலும் முக்கியமானது இந்திய அரசாங்க பாங்கி. முதலில் இது தனி கம்பெனியாக, பிரிட்டிஷ் முதலாளிகளின் ஆதிக்கத்தில் இருந்தது. சுதந்திரத்துக்குப் பின் ரிசர்வ் பாங்கியைப் போலவே இதுவும் மத்திய அரசாங்கத்தின் நேரடியான நிர்வாகத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டது. ராஜ்ய அரசாங்கங்கள், மத்திய அரசாங்கம் இவற்றின் பண நிர்வாகத்தை இந்த இந்திய அரசாங்க பாங்கிதான் ரிசர்வ் பாங்கின் ஏஜெண்டாக நிர்வாகம் செய்து வருகிறது. எல்லா ஜில்லாத் தலைநகரிலும் இதன் கிளை இருக்கிறது. இதர வியாபார ஸ்தலங்களிலும் கிளைகளை ஸ்தாபிக்க வேண்டுமென்பது பாரத சர்க்காரின் திட்டம்.

மக்களிடம் மிச்சம் இருக்கும் பணத்தைச் சேகரித்து அதை நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உபயோகிப்பதற்கு இன்ஷூரன்ஸ் கம்பெனிகளும் நல்ல சாதனங்களாக இருக்கின்றன. ஒரு அபாயத்துக்கு உள்ளாகக் கூடியவர்கள் அனைவரும் சேர்ந்து ஆண்டு தோறும் ஒரு தொகை கட்டி, அபாயம் ஏற்படும்பொழுது அதனால் பீடிக்கப்பட்டவர்களின் நஷ்டத்தை ஈடு செய்ய வேண்டுமென்பது இன்ஷூரன்ஸ் முறையின் அடிப்படையான தத்துவம். எல்லோருக்கும் ஏககாலத்தில் அதே அபாயம் ஏற்படாததால், அதில் தப்புகிறவர்கள் பீடிக்கப்பட்டவர்களின் கஷ்டத்தைப் பங்கிட்டுக் கொள்கிறார்கள்.

சாவு மனிதனுக்குத் தவிர்க்கவொண்ணாதது. ஒருவன் எந்த வயதில் சாகவேண்டி வரும் என்பதை ஒருவரும் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால், ஒரு நாட்டின் மக்களில் ஒவ்வோர் வயதில் எத்தனை பேர்கள் சாவார்கள், சராசரி எத்தனை வயது வரையில் உயிருடன் இருக்கக்கூடும் என்பதை நிர்ணயிக்க முடியும். இதை ஆதாரமாகக் கொண்டு, 20 வயதிலிருப்போரிடம் 30 வருஷத்திற்கு ரூ. 25 விதமும், 30 வயதிலிருப்போரிடம் 20 வருஷத்திற்கு ரூ. 40 விதம் வாங்கினால், அப்படிச் சந்தா கட்டுவோரில் ஒருவர் எப்பொழுது இறந்தாலும் அவர் குடும்பத்துக்கு ரூபாய் 1000 கொடுத்துவிட முடியும். அவர் சந்தா அவதி முடியக் கட்டிவிட்டுப் பின் உயிருடனிருந்தாலும் அத்தொகையை அவருக்குத் திருப்பிக் கொடுத்துவிடலாமென்று கணக்கிட்டு அவ்விதமான ஒப்பந்தப் பத்திரங்கள் கொடுக்கப்படுகின்றன. இதற்கு வாழ்க்கை இன்ஷூரன்ஸ் என்று பெயர். இது இன்ஷூரன்ஸ் ஏற்பாட்டில் முக்கிய பாகமாகும். இதைத் தவிர மோட்டார் விபத்து, கப்பல் விபத்து, வியாபாரச் சாமான்களுக்கு தீ முதலிய விபத்து இவற்றுக்காகவும் இன்ஷூரன்ஸ் செய்யப்படுகிறது. வாழ்க்கை இன்ஷூரன்ஸ் கம்பெனிகளை யெல்லாம் இரண்டு வருஷங்களுக்கு முன் பாரத சர்க்கார் எடுத்துக் கொண்டு, அதை அரசாங்கத் தொழிலாக்கி, பழைய கம்பெனி முதலாளிகளுக்கு ஈடு கொடுத்து விட்டனர். இதர பொது இன்ஷூரன்ஸ் தொழில் கம்பெனிகளிடமே இருந்து வருகிறது.

1955-ம் வருஷத்தில் 44·43 லக்ஷம் வாழ்க்கை ஒப்பந்தங்கள் (பாலிஸிகள்) 1086 கோடி ரூபாய்க்கு வழங்கப்பட்டிருந்தன. அவற்றின் வருஷ சந்தா ரூ. 74 கோடி. ஒரு வருஷத்தில் சாவினாலும், சந்தா அவதி பூர்த்தியாலும் கொடுக்கப்பட்ட தொகை ரூ. 44·57 கோடி.

இதர இன்ஷூரன்ஸ் சந்தா விவரங்கள்:

| | |
|---|---|
| தீ விபத்துக்காக | ரூ. 12·19 கோடி |
| கடல் விபத்துக்காக | ரூ. 7·59 கோடி |
| மற்ற விபத்துக்களுக்கு | ரூ. 8·31 கோடி |

பாங்கிகள், இன்ஷூரன்ஸ் ஸ்தாபனங்கள் மூலம் சேமிப்பதைத் தவிர, ஜனங்களின் சிறிய மிச்சங்களைச் சேகரிக்கப் பாரத சர்க்கார் பல வித முறைகளை அனுஷ்டிக்கிறார்கள். தபால் ஆபீஸ்களில் சேவிங்ஸ் பாங்கிக் கணக்குகள் ஏற்படுத்தி அதில் சாதாரணக் கூலிக்காரர்கூடத் தமது மிச்சத் தொகைகளைக் கட்டி வேண்டியபோது செலவுக்கு எடுத்துக் கொள்ள வசதிகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. கணக்குகளில் அவ்வப்போது மீதி இருக்கும் தொகைகளுக்கு மாதாந்திரம் கால் வட்டி கொடுக்கப்படுகிறது. வருஷம் நூற்றுக்கு நாலே கால் வட்டி சேர்த்து 12 வருஷ முடிவில் முதலும் வட்டியும் கிடைக்கக்கூடிய சேவிங் சர்டிபிகேட்டுகளும் ஆண்டுதோறும் 4 வட்டி கொடுத்துவிட்டு, 10 வருஷ முடிவில் முதலைத் திருப்பிக் கொடுக்கும் டிரெஷரி டிபாஸிட் சர்டிபிகேட்டுகளும் வழங்கப்படுகின்றன. இவற்றின் மூலம் 1952 வரையில் 372·57 கோடி ரூபாய் சர்க்காரிடம் சேமித்து வைக்கப்பட்டது. இத்தொகை 1957-ல் 629·38 கோடிக்குப் பெருகியது. பணக்காரர்களும், பாங்கிகளும், மற்ற ஸ்தாபனங்களும் தங்கள் மிச்சத் தொகைகளை ஆண்டுதோறும் சர்க்காரால் கோரப்படும் கடன் பத்திரங்கள் வாயிலாகச் சேமிக்கின்றனர். பாரத சர்க்காரின் கடன் தொகை 1952-ல் 1403·51 கோடி ரூபாய். 1957-ல் 1633·61 கோடி ரூபாய். இதைத் தவிரப் பிரதேச அரசாங்கங்களும் அவ்வப்போது கடன் வாங்கியிருக்கின்றன. இவ்விதக் கடன் பத்திரங்களைச் சுலபமாக விற்று விடலாம். ஆனால் அவ்வப்பொழுது நிலவும் வட்டி விகிதத்தை அனுசரித்து அவற்றின் மதிப்பு ஏறி, இறங்கிக் கொண்டிருக்கும். இதைச் சரியாகக் கவனித்து இதன் மூலம் லாபம் சம்பாதிப்பது தனிகர்களின் ஒரு சூட்சம சூதாட்டமாகி யிருக்கின்றது.



ஓ-இந்த கண்ணைக் கூசும் வெளிச்சம்...



# ஆ - ஹா ! ஆர்ஜென்டா

## – பிரகாசமான கண்ணைக் கூசாத வெளிச்சம்!




நிலவு ஒளிபோல் குளுமையானதும் ஆனால் பகல் போல் பிரகாசமானதுமான ஒளி வீசும் உள் வெண்மை ஆர்ஜென்டா பல்புகள், வீடுகளுக்கும், வேலை ஸ்தலங்களுக்கும் சிறந்தவை.

இன்றே ஒரு ஆர்ஜென்டா பல்பை வாங்கி, அதன் வெளிச்சம் கண்ணுக்கு எவ்வளவு குளுமையாயும் தேக ஆரோக்கியத்திற்கு எவ்வளவு சிறந்ததாயும் இருக்கிறது என்று பாருங்கள்.

**பிலிப்ஸின் தயாரிப்புகளை**
**சரியான விலைக்கே வாங்குங்கள்**

[illegible]

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்



# ஒரு பழைய கனவு

“என்ன ரவி? இப்படியே பித்தன் மாதிரி உட்கார்ந்துகொண்டிருப்பது உனக்கு நன்றாய் இருக்கிறதா? குளிக்காமல், உடை மாற்றிக் கொள்ளாமல், சாப்பிடாமல் இதென்ன காரியம் நீ செய்கிறாய்?”

ரவி பதில் சொல்லவில்லை. சிங்கள நண்பன் குணசேனா ஒன்றும் புரியாமல் பலகணிக்கு வெளியே வெறித்துப் பார்த்தான். பஞ்சுப் பொதி போன்ற வெண் மேகப் படலங்களுக்கு இடையே சிவனொளி பாதத்துச் சிகரம் தொலைவில் தெரிந்து கொண்டிருந்தது. அழகிய பெரிய பச்சை நிற வெல்வெட் கம்பளம் ஒன்றை மேடு பள்ளமான மடிப்புக்களோடு யாரோ ஒரு சோம்பேறி கடனுக்கு விரித்துப் போட்டிருப்பது போல் தூரத்து மலைகள் தெரிந்தன. அணிவகுத்து நிற்கும் பட்டாளத்து வீரர்களைப் போல ரப்பர் மரங்கள். கரும் பசுமைத் தளிர் விளங்கக் காட்சியளிக்கும் பரந்த தேயிலைத் தோட்டங்கள். அந்தச் சிகரங்களினிடையே இரையெடுத்த மலைப்பாம்பு நெளிவது போல் பாய்ந்து கொண்டிருக்கும் மாவலி கங்கை.

பலகணிக்கு வெளியே தெரிந்த இயற்கையின் பெரிய உலகத்தை ஒரே ஒரு கணத்தில் பார்த்து முடித்து விட்டான் குணசேனா. ஆனால் கைக்கெட்டுகிற தொலைவில் உட்கார்ந்திருக்கும் நண்பன் ரவியின் உள்ளத்தை அறிய முடியவில்லை அவனால்.

அன்று காலையில்தான் அவர்கள் இருவரும் கொழும்பிலிருந்து புறப்பட்டு இரத்தினபுர மார்க்கமாகப் பெலிஹுல்ஓயாவிலுள்ள விருந்தினர் விடுதி (ரெஸ்ட் ஹவுஸ்)யில் வந்து தங்கியிருந்தார்கள். குணசேனனின் அழகிய கார் வாசலில் நின்று கொண்டிருந்தது. அதில்தான் அவர்கள் இருவரும் பிரயாணம் செய்து வந்திருந்தனர். மறுநாள் காலை அவர்கள் இருவரும் நுவாரா—எலியா சென்று அங்கிருந்து கண்டிக்குப் போயாக வேண்டும். நீண்ட பிரயாணம் அலுப்பைத் தரும் என்பதற்காகப் பெலிஹுல்ஓயாவில் அன்றிரவு தங்கி ஓய்வு கொண்டு விட்டு மறுநாள் காலை மறுபடியும் பிரயாணத்தைத் தொடங்கக் கருதியிருந்தார்கள்.



நா. பார்த்தசாரதி



“ரவி! இந்த மாதிரி இங்கே வந்து அடம் பிடிப்பதற்கு நீ வராமலே இருந்திருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும். பன்னிரண்டு வருடங்களுக்குப் பின் இலங்கைக்கு வந்திருக்கிறாய். பத்துப் பதினைந்து நாட்கள் உல்லாசமாக ஊர் சுற்றிப் பார்த்து விட்டுப் போயேன். உனக்கென்ன வந்து விட்டது? ஏன் இப்படி உன்மத்தம் பிடித்தவன் மாதிரி உட்கார்ந்திருக்கிறாய்?”

பதில் இல்லை! ரவி ஆடாமல் அசையாமல் அடித்து வைத்த சிலை போல் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

“குளிக்கும் அறையில் வெந்நீர் கடச்கட இருக்கிறது. இன்னும் சிறிது நேரமானால் ஆறிப் போகும். சாப்பாடு எடுத்துக்கொண்டு வருவதற்காக டிரைவரை பலாங்கொடைக்கு அனுப்ப வேண்டும். போ, எழுந்திருந்து போய்க் குளித்து விட்டு வா.”

நண்பன் குணசேனா சிறுகுழந்தையைக் கெஞ்சுவது போல் கெஞ்சினான். ரவி பலகணிக்கு வெளியே எட்டிப் பிடிக்க முடியாத இயற்கை எழில் கொட்டிக் கிடக்கும் உலகத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டே இருந்தான்.

பனியும் இருளும் ஒளியை விழுங்கி ஏப்பமிடத் தொடங்கும் நேரம். செருப்பின் கனத்தையும் கடந்து பாதத்தில் உறைக்கும் ஊசிக்குளிர். சாலை வழியே ஓலமிட்டுச் செல்லும் லாரிகள். அந்த விடுதியின் பின்புறம் பாறையிடுக்கில் பாயும் காட்டாற்றின் ஒலி — எல்லாம் குணசேனாவுக்குத் தெரிந்தன; உறைத்தன; கேட்டன. அதே இடத்தில் அதே சூழலில் வீற்றிருந்த ரவிக்குத் தெரியவில்லை; உறைக்கவில்லை; கேட்கவில்லை. ரவியின் மனத்தில், மனத்துக்கு மையமான இடத்தில் ஒளியும் மணமும் கவர்ச்சியும் நிறைந்த மிகப் பெரிய பூ ஒன்று ஒவ்வோர் இதழாக விரிந்து கொண்டிருந்தது. விரிந்த வேகத்தில் மனத்தின் ஆழத்துக்கும் ஆழமான இடத்தில் ஒவ்வோர் இதழாக உதிர்ந்து கருகிக்கொண்டிருந்தது. அந்தப் பூ — அந்தப் பூவின் இதழ்கள் — இதழ்களின் மணம் — அவனுக்கு என்ன பொருள்?

## முதல் இதழ்

இந்தப் பெலிஹுல்ஓயா விருந்தினர் விடுதிக்கு இப்போதுதான் நான் முதல் முறையாக வந்திருக்கிறேனென்று நண்பன் குணசேனா நினைத்துக் கொண்டிருக்கிறான். பாவம்! அப்பாவி நண்பன். என்னைத் தெரிந்து கொண்ட அளவுக்கு என் அந்தரங்கங்களைத் தெரிந்துகொள்ளாதவன். என் தகப்பனார் கொழும்பில் பிரின்ஸ் தெருவில் ஜவுளிக் கடை வைத்திருந்தபோது பழக்க

மானவன் குணசேனு. தமிழர்களோடு அதிகம் நெருங்கிப் பழகிப் பழகி நன்ருகத் தமிழ் பேசக் கற்றுக் கொண்டு விட்டான். பிரின்ஸ் தெருவில் எங்கள் கடைக்கு அடுத்த கடை குணசேனுவின் தகப்பனுருடையது.

அவன் தந்தை 'சொய்சா'வுக்கும் என் தந்தைக்கும் நெருங்கிய நட்பு இருந்தது போலவே எங்களுக்குள்ளும் நட்பிருந்தது.

இதற்கு முன்பு இந்த விருந்தினர் விடுதிக்கு எப்போது வந்திருக்கிறேன்? எதற்காக வந்திருக்கின்றேன்? ஏன் வந்திருக்கின்றேன்? அந்த



ஒரு பழைய நினைவு அல்லது பழைய கனவு — இப்போது எப்படி நினைவு வந்தது? அதோ — இவ்வளவு நேரமாக நான் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறேனே — அந்தப் பலகணியின் வலதுபுறம் வெள்ளையடித்த சுவரில் மங்கலாகத் தெரிகிறதே ஒரு கறை- அந்தக் கறை இத்தனை வருடங்களுக்குப் பிறகும் எத்தனையோ வெள்ளைகள் அடித்த பிறகும் இப்படி மங்கலாகத் தெரிவானேன்? அதற்குக் கீழ்ப்புறம் காப்பிங் பென்சிலால் அன்றிரவு அந்தக் கோணல் மாணலான சிங்கள எழுத்துக்களில் கிறுக்கிய 'தாரா'-என்ற பெயர்கூட இலேசாகத் தெரிகிறதே! ஊம்! இந்தப் பெயரையும், இந்தக் கறையையும் பார்க்காவிட்டால் மட்டும் நினைவு வராமல் போய்விடப் போகிறதா, என்ன?

என்னவோ ஒரு அஞ்ஞாயம்! வேறொன்றும் இல்லை. மனிதனுடைய சம்மதத்தின் படியா இந்த உலகத்தில் எல்லாம் நடக்கின்றன? அப்படி நடப்பதாயிருந்தால் அன்றைக்கு இந்த ரெஸ்ட் ஹவுஸில் அப்படி ஒரு சம்பவம் நடந்திருக்குமா? இப்போது நினைத்துப் பார்த்தால் என்றோ ஒரு நாள் தன்னை மறந்த உறக்கத்தில் முன்னிரவு நேரத்தில் கண்ட ஏதோ ஒரு பழைய கனவைப் போல அது தோன்றுகிறது! என்னைப் பொறுத்த

வரையில்தான் கனவாகத் தோன்றுகிறது. நீங்களோ, அருமை நண்பன் குணசேனுவோ, 'கனவு' என்றுகூட அதை நம்ப மாட்டார்கள். கனவில்கூட அப்படி நடப்பது சாத்தியமில்லை என்று உங்கள் வலிமை வாய்ந்த திடமான சிந்தனைக்குத் தெரியும்.

ஆனால் இந்த உலகத்தில் நம்ப முடிந்தவைகள் எங்கும், எப்போதும், எல்லோர் முன்னிலையிலும் நடந்து கொண்டிருக்கின்றன. நம்ப முடியாதவைகளோ, எங்கேயாவது எப்போதாவது, எவர் முன்னிலையிலாவது நடக்கின்றன. வித்தியாசம் அவ்வளவே. வேறு ஒன்றும் இல்லை.

## இரண்டாவது இதழ்

நாங்கள் கொழும்பிலிருந்த போது அப்பாவின் வியாபாரம் செழிப்பாக நடந்து வந்ததனால் மிக வசதியாக வாழ்ந்து வந்தோம். வெள்ளவத்தையில் கடற்கரையோரத்தில் பெரிய பங்களா, வீட்டோடு இரண்டு பெரிய கார்கள். கடை, வியாபார உபயோகங்களுக்காக அப்பா ஒரு காரைப் பயன்படுத்திக் கொண்டார். மற்றொரு காரை நானும், வீட்டில் உள்ள எல்லோரும் பொதுவாக உபயோகித்துக் கொண்டோம்.

அப்போது எனக்கு இருபத்திநான்கு வயது. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். விடுமுறை நாட்களில் காரை எடுத்துக் கொண்டு இயற்கை எழில் கொஞ்சும் இலங்கையின் மலைப்பகுதிகளில் சுற்றுவது எனக்கு விருப்பமான பொழுது போக்கு. அவசியத்தை உத்தேசித்துப் பத்தொன்பதாவது வயதிலேயே நன்றாகக் கார் ஓட்டக் கற்றுக் கொண்டிருந்தேன்.

அந்த வருடம் டிசம்பர் மாதக் கடைசியிலேயே கிறிஸ்துமஸ் விடுமுறை ஆரம்பமாகிவிட்டது. இரண்டு மூன்று நாட்கள் நிம்மதியாக மலைப் பகுதிகளில் சுற்றிவிட்டு வரலாமென்று காரில் புறப்பட்டேன்.

கொழும்பிலிருந்து புறப்படும் பொழுது காலை பதினொரு மணி. வழக்கத்தைவிட அன்று வெய்யில் அதிகமாக இருந்தது. ஏற்றமும் இறக்கமுமாக வளைந்து நெளிந்து செல்லும் மலை ரோடுகளில் கார் சென்று கொண்டிருந்தது. வெள்ளைக்காரர்களின் மூளையும், தமிழர்களின் உழைப்புமாகச் சேர்ந்து இந்த மலைகளைத் தேங்காய் துருவுகிறது போலத் துருவி ஒரே தார் ரோடுகளாக அமைத்திருக்கும்போது மலைப் பிரயாணத்திலுள்ள சுகத்துக்குக் கேட்க வேண்டுமா?

அவிசாவெல்லையில் மலைமேல் படிப்படியாக ஏற்றப் பாதையை அடைந்த கார், உலப்பனை வருகிறவரை ஒரு தொல்லையில்லை. உலப்பனையைக் கடந்ததும் மழை சோனாமாரியாகப் பிடித்துக் கொண்டது. ரோட்டில் இருபுறமும் மேடுகளிலிருந்து காட்டாறு போல் நீர் பெருக்கெடுத்து ஓடியது. சாதாரணமாகவே வழவழவென்று கண்ணாடி பதித்தது போலிருக்கும் அந்த ரோடுகளில் சற்று அதிகமான வேகத்தில் சென்றால் காரின் டயர் வழுக்கும். மழை வேறு பெய்யவே நான் அஞ்சினேன். போதாக் குறைக்கு மாலை நேரம் முடிந்து இருள் பரவத் தொடங்கியது. எத்தனை முறை வந்து பழகியவர்களாக இருந்தாலும் இலங்கை மலைகளில் ரோடுகளை நினைவாக அடையாளம் வைத்துக் கொள்வதென்பது மட்டும் முடியாத காரியம். இரும்பின இடமெல்லாம் ரோடுகளாக இருந்தால் எதைத்தான் நினைவு வைத்துக் கொள்வதற்கு முடியும்?

மழை நிற்கிறவரை கிளம்ப வேண்டாம் என்று உலப்பனையைக் கடந்து சிறிது தூரம் வந்ததும் சாலையோரத்தில் காரை நிறுத்திவிட்டேன். மழை ஓசை, இருட்டு—காரைச் சுற்றிலும், எங்கே என்ன இருக்கிறதென்றே தெரியவில்லை. காருக்குள் மேலே இருக்கும் விளக்கு, முன் விளக்குகள், — எல்லாம்



அணைந்து இருளில் உட்கார்ந்திருந்தேன். சுற்று முற்றும் பார்த்தபோது பத்துப் பதினைந்து கெஜ தூரம் முன்னால் பாதை யோரத்தில் விளக்கொளி தெரிந்தது. அங்கே ஏதாவது குடிசையிருக்க வேண்டு மென்று அனுமானித்தேன். மழை பெய்து கொண்டிருந்தால்தான் என்ன? இருளில் காருக்குள் எவ்வளவு நேரம்தான் பொறுமையாக உட்கார்ந்திருக்க முடியும். காரைப் பூட்டிச் சாவியைக் கையில் எடுத்துக் கொண்டேன். நனைந்தாலும் பரவாயில்லை என்று கீழே இறங்கி ஒளி வந்த இடத்தை நோக்கி நடந்தேன்.

'கஜுக் கொட்டை' (முந்திரிப் பருப்பு)யும், செவ்விளநீரும் விற்கும் சிறிய கடை அது. குடிசை முகப்பில் தட்டு நிறையக் கட்ட முந்திரிப் பருப்பு குவித்திருந்தது. இன்னொரு புறம் கொத்துக் கொத்தாகத் தங்கக் கட்டிகளை காய்த்துப் பழுத்தது போல் செம்பொன் நிறத்தில் செவ்விளநீர்க் குலைகள், பக்கத்தில் அவற்றைச் சீவிக் கொடுக்கப் பயன்படும் ஒரு அரிவாள். முந்திரிப் பருப்பைப் பொட்டலம் கட்டும் காகிதங்கள். அவற்றின் இடையே ஒரு சின்ன முக்காலியில் பதினேழு, பதினெட்டு வயது மதிக்கத்தக்க ஒரு சிங்கள யுவதி. கரும் புகையைக் கக்கிக் கொண்டு எரியும் ஒரு மண்ணெண்ணெய் விளக்கு.

காரை விட்டு இறங்கி நனைந்துகொண்டே சென்றவன் அந்த இடத்தில் அப்படி ஒரு அற்புதமான காட்சியை எதிர்பார்க்கவே இல்லை. 'இவள் முந்திரிக்கொட்டை விற்கும் சிங்களப் பெண்ணா? அல்லது எங்கிருந்தாவது வழி தவறி வந்து விட்ட வானுலகத்து மோகினியா?'—என்று ஒரு கணம் மலைத்துப் போனேன். நனைந்து கொண்டே அந்தக் கீற்றுக் கொட்டகை வாசலில் நின்ற என்னை அவள் பார்த்து விட்டாள்.

"ஆ, முதலாளி! (இப்படி அழைப்பது ஒரு மரியாதை வழக்கம்) இப்படி உள்ளே வாருங்கள்."—இனிய குரலில் சிங்களத்தில் பேசினாள் அவள். சிவப்பு நிற வெல்வெட் பெட்டிக்குள் மறைந்திருக்கும் முத்துச்சரம் போல் அவள் செவ்விதழ்களுக்கிடையே நகை மலர்ந்தது. அதே குடிசைக்குள்ளிருந்து வேறு ஒரு வயதான கிழவி எட்டிப் பார்த்து விட்டு, "யார் வந்திருக்கிறார்கள்?" என்று அந்த யுவதியிடம் கேட்டாள். அவள் பதில் கூறினாள். நான் கொட்டகைக்குள் நுழைந்தேன். அவள் உள்ளே போய் உட்காருவதற்கு இன்னொரு சிறிய முக்காலியைக் கொண்டு வந்து போட்டாள்; உட்கார்ந்தேன். அத்தனை ஆண்டுகளாக இலங்கையில் வசித்ததின் பயனாகச் சுமாராகச் சிங்களம் பேசவும், மற்றவர்கள் பேசினால் புரிந்து கொள்ளவும் தெரிந்திருந்தது. "உன் பெயர் என்ன?"—என்று சிங்களத்தில் அந்த யுவதியைக் கேட்டேன். "தாரா" - என்று சொல்லிவிட்டுக் கன்னத்தில் குழி விழச் சிரித்தாள். அப்பப்பா! ஆளைக் கொள்ளையடிக்கிற மோகனச் சிரிப்பு!

உலகத்தில் எந்தெந்தப் பெண்களிடமோ அழகு இருப்பதாகச் சொல்லுகிறார்கள். இங்கே இந்தக் கண் காணாத மலைப்பகுதியில் இளநீரும் முந்திரிப் பருப்பும் விற்கும் ஒரு ஏழைப் பெண்ணுக்குக் கடவுள் இவ்வளவு அழகை வழங்கியிருக்கிறானே! கரந்தும், சிரித்

தும், வளைந்தும், நெளிந்தும், குழைந்தும், குவிந்தும், உயர்ந்த ஊனுடல் ஒன்று என் முன் அந்தக் குடிசையில் நிற்கவில்லை. ஆண் பிள்ளைகளின் உள்ளங்களைச் சூறையாட ஆசை கொண்ட மாயச் சிற்பி ஒருவன் செம்பொற் சிலை ஒன்று செய்து கொல்லிப் பாவையாக உலாவ விட்டிருக்கிறான். அந்தச் சிலை உயிர் பெற்று உணர்வு பெற்றுத் 'தாரா' என்ற பெயரும் பெற்று இங்கே முந்திரிப் பருப்பு விற்றுக் கொண்டிருக்கிறது.

''இதோ! இதை எடுத்துக் கொள்ளுங்கள்''—உட்கார்ந்தவன் நிமிர்ந்து பார்த்தேன். ஒரு காகிதத்தில் வறுத்த முந்திரிப் பருப்பும், மற்றொரு கையில் கிளாஸ் நிறைய ஆவி பறக்கும் தேநீருமாக அருகில் நின்றாள் அவள். அவளுடைய நாசிக்குக் கீழே, முக வாய்க்குமேலே இரத்தச் சிவப்பில் இரண்டு மாதுளை மொட்டுக்கள். சிரித்தன. அவை? உதடுகள்! — அவளுடைய அதரச் செம் மலர்கள் அப்படிச் சிரித்தன!

''மழைக்கு ஒதுங்கியவனுக்காக வீண் சிரமத்தை எடுத்துக் கொள்கிறீர்கள். பக்கத்தில் காரை நிறுத்தி விட்டு வந்திருக்கிறேன். இதோ மழை நின்றதும் புறப்பட்டு வி'; வேன்'' என்று அவளிடம் எனக்குத் தெரிந்த அரைகுறைச் சிங்களத்தில் சிரித்துக்கொண்டே கூறினேன்.

''பரவாயில்லை! இவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்''—கதவோரத்தில் மறைந்து நின்று கொண்டிருந்த கிழவியும் வெளியே வந்து என்னை வற்புறுத்தினாள். நான் தாராவின் கைகளிலிருந்து முந்திரிப் பருப்பையும், தேநீரையும் வாங்கிக் கொண்டேன். சற்றே நீண்ட சண்பக மொட்டுக்களைப் போன்ற அந்த விரல்கள்! ...அவை தாம் எவ்வளவு நேர்த்தியாக அமைந்திருந்தன?

''ஒரு இளநீர் சீவித் தரட்டுமா?''-கேள்வி- அதே மோகனச் சிரிப்பு! ஏன் இப்படிச் சிரிக்கிறாள்? சிரிக்காமல் பேசவே தெரியாதா இவளுக்கு?

''இந்த மழையில் இளநீர் சாப்பிடவா சொல்கிறாய்? நீ என்னைக் கேலி செய்கிறாய் போலிருக்கிறது!''

மறுபடியும் அதே சிரிப்பு. ஐயோ! அவளிடம் அந்தச் சிரிப்பையும் என்னிடம் இந்தக் கண்களையும் ஏன் வைத்தாய்? முந்திரிப் பருப்பு இருந்த காகிதமும், தேநீர்க் கிண்ணமும் காலியாயின. கிழவி வந்தாள். ஏதேதோ விசாரித்தாள். இரவில் அங்கேயே சாப்பிட வேண்டுமென்று வற்புறுத்தி விட்டுக் குடிசைக்குள் சென்று விட்டாள்.

''உங்களுக்குத் திருமணமாகி விட்டதா? எத்தனை குழந்தைகள்?''—கேள்வி! சிரிப்பொலி! தூக்கிவாரிப் போட்டது எனக்கு. தாராதான் கேட்டாள்.

''இல்லை. இன்னும் எனக்குத் திருமணமே ஆகவில்லை!'' பதில் கூறினேன் நான்.

''ஏன் செய்து கொள்ளவில்லை?'' கேள்வி! அதே கிண்கிணிச் சிரிப்பு! என்ன பதில் கூறுவதென்று தெரியாமல் திணறிப் போய் மலங்க விழித்துக்கொண்டே உட்கார்ந்திருந்தேன்.

என் மனத்தில் ஒரே வியப்பு! இந்த மலை நாட்டுச் சிங்கள யுவதிக்குச் சூது, வாது

எதுவுமே தெரியாதா? இவனைச் சரியானபடி மடக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு, ''அது சரி! உனக்குத் திருமணமாகி விட்டதா?'' என்று வேண்டுமென்றே தெரியாதது போலக் கேட்டேன்.

அப்போதாவது அவனுடைய முகத்தில், சிரிப்பில், பார்வையில் நாணம், தயக்கம், பயம், கூச்சம் ஏதாவது ஒன்றை எதிர்பார்த்தேன். ஆனால் ஏமாந்தேன். நாணமோ, பயமோ, கூச்சமோ, தயக்கமோ சிறிதும் இல்லாமல் அதே நிமிர்ந்த பார்வையோடு, அதே சிரிப்போடு ''இன்னும் ஆகவில்லை'' என்று தலையை ஆட்டினான். ஒய்யாரமாக அந்தத் தலை அசைந்தபோது என் இதயமே அசைந்தது. பயங்கரமாகக் கொட்டிய அந்த மழை நிற்கும்போது இரவு பத்துமணிக்கு மேலாகி விட்டது. கிழவியும் தாராவும் விடாப்பிடியாக வற்புறுத்தவே அந்தக் குடிசையில் அவர்கள் அன்போடு அளித்த ரொட்டி, பழங்களைச் சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக் கொண்டேன். அவர்கள் அன்பு என்னைப் பிரமிக்க வைத்தது.

''மழை நின்றுவிட்டது! நான் போய் வரட்டுமா?'' பையிலிருந்து கார்ச் சாவியை வெளியில் எடுத்துக் கொண்டு விடை பெறுவதற்காக அவர்களை நோக்கிக் கைகூப்பினேன். அவர்கள் திகைத்தனர். பயந்த குரலில் கண்களை அகல விரித்து, ''என்ன? இந்த இருட்டிலேயா?'' என்றான் தாரா.

''கார் இருக்கிறது! வசதியான ரோடுகள் இருக்கின்றன! இருட்டு என்னை என்ன செய்யும்?'' என்று பதில் சொன்னேன்.

''நீங்கள் எங்கே போக வேண்டும்?''

''ஏன்? இரவு 'பெலிஹூல்லோயா' ரெஸ்ட் ஹவுஸில் போய்த் தங்கிவிடலாமென்று நினைக்கிறேன்.''

நான் கூறியதைக் கேட்டு இரண்டு கைகளையும் தட்டிக் கொண்டே இடி இடியென்று கேலிச் சிரிப்பு சிரித்தான் தாரா.

''என்ன? ஏன் சிரிக்கிறாய்?''

''ஒன்றும் இல்லை! இந்த வழிகளில் இதற்கு முன்பு வந்து பழகியிருக்கிறீர்களோ?''

''ஏன்? பலமுறை வந்திருக்கிறேனே!''

''பலமுறை வந்த லட்சணம்தான் இவ்வளவு நன்றாக வழி கண்டுபிடித்து வந்திருக்கிறீர்களோ? பெலிஹூல்லோயா போவதற்கு யாராவது 'உலப்பனே' வரை வீணாகக் காரை விட்டுக் கொண்டு வருவார்களா? நீங்கள் 'எட்டியாந் தொட்டை'யிலாவது, 'கித்துல் கலே'யிலாவது வழி பிரிந்து போயிருக்கலாமே? மூலைக்கு மூலை ஐந்தாறு ரோடுகளும் வழிகளும் பிரிகின்றன. இங்கெல்லாம் வழி விவரம் தெரியாவிட்டால் இப்படித்தான் இடர்ப்பட வேண்டும்'' என்று கூறிச் சிரித்தான்.

''ஐயையோ! அப்படியானால் இப்போது என்ன செய்வது? நான் எப்படியும் 'பெலிஹூல்லோயா'வுக்குப் போயாக வேண்டுமே!'' நான் திடுக்கிட்டுப் போய்ப் பதறிய குரலில் அவனை வினவினேன்.

'''கினிகத்தேனை' வரை இதே ரோட்டில் திரும்பிப் போய் அங்கிருந்து 'நோர்ட்டன் பிரிட்ஜ்' மார்க்கமாகக் குறுக்கு வழியில் போனால் பெலிஹூல்லோயா சீக்கிரமாகப் போய் விடலாம்'' என்று அவன் கூறினான்.




தெருநாய்: உனக்கென்னப்பா! உன் பாடு தேவலே. உன் எஜமானர் போர்டு பக்கத்தில் உன் போர்டைப் போட்டுக் கொண்டு ஜாய்யா இருக்கிறாய்!

''நீ சொல்கிற அந்த வழிகள் எனக்குத் தெரியாதே! பகலானால் யாரையாவது கேட்டுக் கொண்டே போகலாம். இந்த நேரத்தில் எப்படிப் போவது? யாரைக் கேட்டுக்கொண்டு போவது?'' என்றேன்.

''நீங்கள் அவசியம் இப்போதே போய்த்தான் ஆக வேண்டுமா?''

''கண்டிப்பாகப் போயாக வேண்டும்! நாளைக் காலை அங்கே வந்து சந்திக்கச் சொல்லி இரண்டு நண்பர்களுக்கு முன் கடிதம் வேறு எழுதி விட்டேன். இரவிலேயே போனால்தான் காலையில் அவர்களைச் சந்திக்க வசதியாயிருக்கும்.''

''அப்படியானால் புறப்படுங்கள். நானும் உங்களுடன் கூட வருகிறேன். எனக்கு எல்லா வழிகளும் தெரியும்!''

''நீயா?''...நான் இரைந்து கத்துகின்றாற் போன்ற தொனியில் கேட்டு விட்டேன். எனக்குப் பகீரென்றது. நான் கேட்கும் குரலில் எனக்கு நம்பிக்கை விழவில்லை.

''ஏன் ஆச்சரியப்படுகிறீர்கள்? நான் உங்களோடு வரக் கூடாதா?'' அவன் கலங்கமில்லாத குரலில் மறுபடியும் கேட்டான். நான் நம்பிக்கையில்லாத மனத்துடன் தாராவினுடைய தாயின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். அந்த வயதான, சுருக்கம் விழுந்த கிழட்டு முகத்தில் கலக்கமோ, அவநம்பிக்கையோ, சந்தேகமோ இல்லை.

''தாராவை அழைத்துக் கொண்டு செல்லுங்கள். அவனுக்கு இங்குள்ள வழிகள் எல்லாம் கரதலப் பாடம். நாளைக்கோ, நாளன்றைக்கோ நீங்கள் திரும்பிவரும்போது உங்கள் காரிலேயே அவனை இங்கே கொண்டு வந்து விட்டால் போதும்.'' — கிழவியின் குரலில்

தயக்கமே இல்லை. எனக்கு உடல் முழுதும் சிலிர்த்தது. மறுபடியும் அந்த வாக்கியத்தை நினைத்துக் கொண்டேன்.

அந்நியனை அந்நியனாக எண்ணவே இவளுக்குத் தெரியவில்லை. எதையும் விபரீதமாக எண்ணவே இவர்களுக்குத் தெரியாதா? அமுதத்தில் செய்து நிறுத்திய சிலைபோல் பதினெட்டு வயதுப் பெண்ணை இந்த இரவில் எனக்கு வழிகாட்டத் துணையாக அனுப்புகிறாளே இந்தத் தாய்! உலகில் நன்மைகளைத் தவிர, சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட நிகழ்ச்சிகளைத் தவிர வேறெதையுமே நடக்க முடியாதென்ற நம்பிக்கையா இவளுக்கு? எல்லோருக்கும் இப்படி ஒரு நம்பிக்கை இருந்தால் உலகம் எப்படி இருக்கும்?

''வாருங்கள், போகலாம்!'' அவள் என்னையும் முந்திக்கொண்டு கார் நின்ற இடத்தை நோக்கி நடந்தாள். மலைத்துப் போய் நின்று கொண்டிருந்த நானும் நடந்தேன்.

காரில் அவள் முன் ஸீட்டில் எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்தபோது இன்னும் தூக்கி வாரிப் போட்டது எனக்கு. ''நீ பின் ஸீட்டில் உட்கார்ந்து கொண்டால் நல்லது!''—

''பரவாயில்லை! இங்கேயே இருக்கிறேன். இப்படி இருந்தால்தான் ரோடுகள் பிரிகிற இடத்தில் உங்களுக்கு வழிகாட்ட முடியும்'' என்று சொல்லிச் சிரித்தாள் அவள். வெற்றுமை, கூச்சம், நாணம் இவற்றில் எதையுமே மருந்துக்குக் கூடப் படைத்தவன் வைக்கவில்லை போலும். முன் ஸீட்டில் உட்கார்ந்து கொண்டதற்கு அவள் கூறிய காரணம் பொருத்தமாக இருந்தாலும் என் மனத்தில் வேறுவிதமான சந்தேகங்கள் உண்டாயின. அழகான, இளம் பெண்களைப் பயன்படுத்தி அங்கங்கே நடைபெறும் நூதனக் கொள்ளைகள், வழிப்பறிகளைப் பற்றிப் பத்திரிகைகளில் அவ்வப்போது செய்திகள் வந்து கொண்டிருந்தன. அந்த வகையில் ஏதாவது இருக்குமோ என்று கூட நினைத்துப் பயந்தேன். கார் குடிசைக்கு அருகிலிருந்து புறப்பட்டது. தாரா பாதைகளை விளக்கிக் கூறினாள்.

## இறுதி இதழ்

பெனிஹாலேயா ரெஸ்ட் ஹவுஸை அடையும்போது இரவு இரண்டரை மணி. ரெஸ்ட் ஹவுஸ் காவல்காரனை எழுப்பி இடம் கேட்டோம்.

''எனக்கு ஒரு அறையும், இந்தப் பெண்ணுக்கு ஒரு அறையும் தனித்தனியே வேண்டும்''—என்றேன் நான்.

''ரெஸ்ட்ஹவுஸில் அநேகமாக எல்லா அறைகளிலும் ஆட்கள் தங்கி யிருக்கிறார்கள். ஒரே ஒரு அறை வேண்டுமானால் உங்களுக்காக ஒழித்துக் கொடுக்கலாம்.'' — காவல்காரன் பதில் கூறினான்.

நான் அவநம்பிக்கையோடு தாராவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். ''பரவாயில்லை! ஒரு அறை போதும். இரண்டு பேரும் அங்கேயே தங்கிக் கொள்ளலாம்.''—தாரா காவல்காரனிடம் கூறினாள். அவளுக்குத்தான் அந்நியனை அந்நியனாக நினைக்கத் தெரியாதே! காரைப் பூட்டி ரெஸ்ட் ஹவுஸின் ஷெட்டில் கொண்டுபோய் நிறுத்தினேன்.

தாராவை அழைத்துக் கொண்டு ரெஸ்ட் ஹவுஸில் எங்களுக்காகக் கொடுத்த அறைக்குள் நுழைந்தேன். அறையில் ஒரே படுக்கைதான் இருந்தது. காவல்காரனைக் கூப்பிட்டு இன்னொரு படுக்கை போடச் சொல்வதற்காக வெளியே வந்தேன். இன்னொரு படுக்கைக்காகக் காவல்காரனிடம் தகராறு செய்துகொண்டிருந்தபோது உள்ளே தாராவின் கூச்சல் கேட்டது. என்னவோ, ஏதோ என்று பதறிப்போய் ஓடினேன்.

கூச்சலிட்டு அலறியவாறே ஜன்னலோரமாகச் சுவரில் முழங்கையின் பின் புறத்தைத் தேய்த்துக் கொண்டிருந்தாள் தாரா.

''என்ன? என்ன?''

''பாழாய்ப்போன அட்டை! எப்போது பிடித்துக் கொண்டதென்றே தெரியவில்லை. திடீரென்று முழங்கையில் இரத்தம் வடிகிறது'' என்றாள். ''அதற்காகப் பூப்போன்ற கையை இப்படியா சுவரில் தேய்ப்பார்கள்! இதோ அட்டையை நான் எடுத்து விடுகிறேன்'' என்று சொல்லி அந்தக் கையைப் பற்றிக் காவல்காரனிடம் சிறிது மூக்குப் பொடி வாங்கி அட்டை பற்றியிருந்த இடத்தில் தூவினேன். அந்த வாடையில் பிடி தளர்ந்து அட்டை கீழே சுருண்டு விழுந்தது.

தாரா கையைத் தேய்த்த இடத்தில் சுவரில் இரத்தக் கறையாகி விட்டது. ''இதென்ன இப்படிச் சுவரைப் பாழாக்கி விட்டாயே?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டேன்.

''பாழாக்கவில்லையே! சுவருக்கு இரத்த தானம் செய்திருக்கிறேனாக்கும்'' என்று சொல்லிக் கொண்டே என் சட்டைப் பையிலிருந்த காப்பிங்பென்ஸிலை உருவி எடுத்தாள்.

''பென்ஸிலை என்ன செய்யப் போகிறாய்?''

''இந்தக் கறைக்கு மேல் 'தாராவின் இரத்தம்! அட்டைகள் ஜாக்கிரதை' என்று எழுதப் போகிறேன்'' என்று பதில் கூறிக் கொண்டே சுவரில் 'தாரா' என்று ஆரம்பித்து எழுதத் தொடங்கி விட்டாள். ''இதோ பார்! இது ரெஸ்ட் ஹவுஸ். கண்டதையெல்லாம் சுவரில் கிறுக்கக் கூடாது!'' என்று அவள் கையைப் பிடித்து மேலே எழுத விடாமல் தடுத்தேன்.

கண்ணாமூச்சி விளையாடும் சிறு குழந்தையை விளையாடும்போது ஒளிந்திருக்கும் இடத்திலிருந்து கண்டு பிடித்து விட்டால் அது கலகலவென்று கைகொட்டிச் சிரிக்குமே;, அந்த மாதிரி சிரித்தாள் தாரா.

''பல பேர்கள் தங்கி யிருக்கும் ரெஸ்ட் ஹவுஸில் இரவு இரண்டு மணிக்குமேல் ஒரு பெண் இப்படிச் சிரித்தால் என்ன நினைத்துக் கொள்வார்கள்?''

''ஏன்? இரவு இரண்டு மணிக்குச் சிரிக்கக் கூடாதென்று பெனிஹாலேயா ரெஸ்ட் ஹவுஸில் ஏதாவது சட்டம் போட்டிருக்கிறார்களா, என்ன?'' துடுக்குத்தனமாக எதிர்த்துக் கேட்டாள் அவள். அப்போது எங்கள் அறைக்கு வெளியே யாரோ சிரித்துக் கொண்டே மெல்லப் பேசும் குரல் கேட்டது. அந்தச் சிரிப்பும், பேச்சும், அதை அவர்கள் பேசிய விதமும், சிரித்த விதமுமே கேட்கத் தூண்டக்கூடிய முறையில் இருந்தன.

தாரா அதை உற்றுக் கேட்டாள். எங்கள் பேச்சு நின்றது. நானும் கேட்டேன்.

'' என்ன வாட்ச்மேன்? யார் இந்த அறைக்கு வந்திருக்கிறார்கள்? இந்த நேரத்தில் ஒரே சிரிப்பும் கும்மாளமுமாக இருக்கிறது?'' கேட்டவர் சிங்களத்திலேயே பேசினார்.

காவல்காரன் அவருக்குப் பதில் சொல்லாமல் 'ஒரு தினுசாக'ச் சிரிக்கும் ஒலி கேட்டது.

''என்னப்பா சிரிக்கிறாய்? என்ன விஷயம்?''

'' சரியான ஜோடிதான்! யாரோ ஒரு பணக்காரத் தமிழ்ப் பையன் ஒரு சிங்களக் குட்டியை இழுத்துக் கொண்டு......''

அவன் சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்கவில்லை. பேயறை பட்டவள் போல 'வீல்' என்று அலறினாள் தாரா. படீரென்று அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே ஓடினாள். '' தாரா! தாரா! போகாதே. இருட்டு-உலகமென்றால் நாலுவிதமாகத்தான் பேசுவார்கள்'' என்று கத்திக்கொண்டே பின்னால் ஓடினேன் நான். வெறி பிடித்தவள் போலத் தட்டுத்தடுமாறி விழுந்து ஓடினாள் அவள். கூண்டிலிருந்து விடுதலை யடைந்த பறவையைப் போலப் பறந்தோடி விட்டாள்.

இருளில் அவளும் தெரியவில்லை. அவளுடைய பதில் குரலும் கேட்கவில்லை.

'' ஆம்! அவள் அந்நியனை அந்நியனாகக் கருதுவதற்குத் தெரிந்து கொண்டுவிட்டாள். ஒரே காரில் சேர்ந்து பிரயாணம் செய்த போதும், ஒரே அறையில் உடன் தங்கச் சம்மதித்தபோதும், கையைப் பிடித்துத் தீண்டி அட்டைக்கடியிலிருந்து விடுவித்த போதும், எந்த ஒரு களங்கம் அவள் மனத்தில் ஏற்படவில்லையோ, அந்தக் களங்கத்தை இரண்டு முட்டாள்கள் தங்கள் பேச்சின் மூலம் உண்டாக்கி விட்டார்கள்.

அந்த முட்டாள்கள்? அவர்கள் உலகில் எதையுமே பாவம் நிறைந்த கெட்ட கண்களோடு மட்டுமே பார்க்கத் தெரிந்தவர்கள்; தீமைத் தழும்பேறிய அந்தப் பார்வை ? விளைவு என்ன? தாராவின் புனிதமான மனம் அந்நியனை அந்நியனாக எண்ணி விட்டது. தீயவை எதையுமே பேச, நினைக்க, செய்யத் தெரியாத அந்தப் பதினெட்டு வயதுப் பெண் குழந்தையின் மென்மையான இதயத்தில் சமூகத்தின் கூரிய முள் ஒன்று தைத்து விட்டது. அவளுக்கு அன்று வரையில் தெரியாத புதிய பயத்தை உண்டாக்கி விட்டது.

ரவியின் மனத்தில் மலர்ந்த நினைவுப் பூவின் இதழ்கள் ஒவ்வொன்றாக உதிர்ந்துவிட்டன.''நீ குளிக்கவேண்டாம். உடை மாற்றிக் கொள்ள வேண்டாம். சாப்பிட மட்டுமாவது வா'' என்று கையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான் குணசேன. ரவி அவனுக்குப் பதில் சொல்லாமல் மறுபடியும் பலகணியைப் பார்த்தான். அதே அறை! அதே கறை! அதே எழுத்து.

'' உனக்கு என்ன பைத்தியம் பிடித்து விட்டதா? எதைச் சிந்திக்கிறாய்? ஏன் அப்படி வெறித்து வெறித்துப் பார்க்கிறாய்?'' குணசேன உரத்த குரலில் வினவினான். ரவி சாவதானமாக நிறுத்தி நிதானமாக ஒவ்வொரு வார்த்தையாக மறுமொழி கூறினான்.

'' ஒன்றுமில்லை! அது ஒரு பழைய கனவு.''






நாற்பது ஐம்பது வருஷங்களுக்கு முன், கிராமத்திலே கலியாணம் என்றால், மாப்பிள்ளையையோ மணப் பெண்ணையோ அல்லது இரண்டு பேரையுமோ பல்லக்கில் ஏற்றி வைத்து, கொட்டு மேளத்துடன் கோயிலில் இருந்து மண வீட்டுக்கு அழைத்து வருவது வழக்கம். ஒவ்வொரு ஊரிலும், இல்லா விட்டால் இரண்டு மூன்று கிராமங்களுக்கு ஒன்றாகவாவது, ஒரு பல்லக்கு இருக்கும். கலியாணம் என்றால் அது வெளியே வரும். பெரிய மனிதர் வீட்டுக் கலியாணமானால், பல்லக்கின் ஜோடனையும் புஷ்ப அலங்காரமும் சிறிது அதிகமாக இருக்கும்; பல்லக்கைச் சுமந்து வரும் போகிகள் கோடி உடுத்தி, பட்டுத் தலைக்குட்டை கட்டி, கம்பீர நடை போடுவார்கள்; அவ்வளவுதான். மற்றப்படி, யார் வீட்டுக் கலியாணமானாலும் அதே பல்லக்குத்தான்.

இன்று பல்லக்கு அநேகமாக மறைந்து விட்டது. கோயில் வாகன மண்டபத்திலே, திருவிழாவிலே, அதைக் காணலாம். சில மடாலயங்களில் எப்போதாவது அருமையாக அது முகத்தைக் காட்டும். கிராமக் கலியாணப் பல்லக்கு இருந்த இடங்கூடத் தெரியவில்லை. அது எப்படி மறைந்தது? முதலில் சாரட்டு வந்தது. பிறகு மெல்ல மெல்ல, சாரட்டின் இடத்தை மோட்டார்கார் பிடித்தது. கொஞ்ச நாளைக்கு இரண்டையும் பல்லக்கு மாதிரி அலங்காரம் செய்யும் வழக்கம் இருந்தது. இருந்த வரையில், பல்லக்கின் பழைய ஆதிக்கத்தைச் சுட்டிக் காட்டி விட்டு, அந்த வழக்கமும் ஒழிந்தது. இன்று, குக் கிராமத்தில் நடைபெறும் ஊர்வலங்களில் கூட, மண்ணெண்ணெய்ப் புகையை வாரி இறைத்துக் கொண்டு, மோட்டார் கார் (எங்கிருந்தோ வந்த அந்த இயந்திர பூதம்) 'ஓ'வென்று பிளிறித் தனியாட்சி செலுத்துகிறது. பல்லக்கோ, அது பொய்யாய், பழங் கதையாய், பொருந்தாத விசித்திரமாய்ப் போய் விட்டது.

'போனது நல்லதுதான். பல்லக்கா, மனிதனை மனிதன் சுமப்பதா?' என்று சிலர் பேசலாம். இது ஒரு பார்வை. ஆனால் பல்லக்கை மட்டும் என்ன, எந்தப் பொருளையும், எத்தனையோ விதமாகப் பார்க்கலாம் அல்லவா? 'ஐயோ, பாழும் வயிற்றுக்காக, இந்தப் பணத் தொந்தியைச் சுமந்து செல்ல வேண்டி இருக்கிறதே, என்ன அடிமை வாழ்வு!' என்று பல்லக்கைச் சுமக்கும் கூலிக்காரன் வேண்டுமானால் எண்ணலாம். ஆனால், 'போரிலே வெற்றி கண்ட சேனாதிபதியை, அவ் வெற்றியின் அடையாளமாக உடம்பெல்லாம் புண்ணாகக் கிடக்கும் தமது தலைவனை, சிவிகையில் ஏற்றி, ஊருக்குக் கொண்டு வரும் வீரர்கள் அப்படி எண்ணுவார்களா? ஒன்றுமில்லை, ஏதோ கிரிக்கட் ஆட்டத்தில் நூறு ஓட்டம் ஓடினாலும், அவனை விளையாட்டு முடிந்தவுடன் தமது தோளில் தூக்கி வைத்துக் கொண்டு, மைதானத்தைச் சுற்றி வரும் இளைஞர்கள் மனிதனை மனிதன் சுமப்பதில் எவ்வளவு பெருமை அடைகிறார்கள்!

திருப்பாணாழ்வாரைத் தோளிலே சுமந்து கொண்டு, திருவரங்க நெடு வீதியில் நடந்த லோக சாரங்க முனிவருக்கு, ஞானச் செல்வத்தை ஏந்தி, பரமபதத்தில் நடக்கிறோம் என்ற எண்ணந்தானே — என்னமா, பரவசந்தானே சித்தியாகி இருக்கும்? இறை உணர்விலே முதிர்ந்து பழுத்த பழமாகிய திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தருடைய பல்லக்கைச் சுமந்து நடந்தார் என்று கேட்டிருக்கிறோம். 'இறைவியின் அருளைப் பருகி, அறிவாகிய மெய்யறிவைச் சுவைத்த பாலறாவாயர் இவரை, எங்கள் ஆளுடைய பிள்ளையை ஏந்தும் பேறு எனக்கும் கிடைத்ததே!' என்றுதானே அந்த நிலையில் அப்பர் அகம் குழைந்திருப்பார்?

பல்லக்கைச் சுமப்பதால் மட்டும் இழிவு வந்து விடாது. யாருடைய பல்லக்கை, எந்த மனத்தோடு ஏந்திச் செல்கிறோம் என்பதிலேதான் பெருமையோ சிறுமையோ ஏற்படுகிறது. பல்லக்கைத் தூக்கிக் கொண்டு, நீண்ட வழி நடக்கும்போது, உடற்சோர்வு தோன்றாமல் பாடிச் செல்வது போகிகளின் வழக்கம். ஏற்றம் இறைப்பவன் பாடுகிறான், வயலிலே களையெடுக்கும் பெண்கள் பாடுகிறார்கள், சாலையிலே கருங்கல் உருளையை இழுத்துச் செல்லும் பாதை செப்பனிடுவோர், பாட்டின் போதையால் தமது களைப்பை மாற்றிக் கொள்ளுகிறார்கள். படகோட்டி ஏலேலோ பாடுகிறான், வண்டிக்காரன் தெம்மாங்கு இசைக்கிறான், சாலியன் தான் நெய்யும் இழைகளோடு பாட்டையும் இழைக்கிறான். இப்படித்தான் தங்கள் களைப்பைப் போக்கிக் கொள்வதற்காக, பல்லக்குச் சுமப்பவர்களும் பாடுகிறார்கள். அவர்களுடைய அயர்வுக்கு மருந்தாகப் பாடல் வருகிறது. அதே சமயத்தில், அவர்கள் உணர்ச்சியின் வடிவமாகவும் அந்தப் பாட்டு அமைந்து விடுகிறது. உணர்ச்சி, களிப்போ, கசப்போ, ஏமாப்போ, ஏமாற்றமோ, வேறு எதுவோ? எந்த உணர்ச்சிதான் பாட்டாக வராது?

இதோ தந்தப் பல்லக்கில், தங்கள் இளவரசியை ஏந்திச் செல்லும் போகிகள் ஏதோ பாடிக் கொண்டு போகிறார்கள். அவர்கள் பாடலைக் காது கொடுத்துக் கேட்போம்.

அவர்களுக்கு ஒரே பெருமை. பல்லக்கோ அரசர் ஏறும் பல்லக்கு, தந்தமும், பொன்னும், மணியும், பூம்பட்டும் இசைந்து சமைத்த எழிற் சிவிகை.

**பொன் கொண்(டு) இழைத்து**
**மணியைக் கொடு பொதிந்து**
**மின் கொண்(டு) அமைத்து**
**வெயிலைக் கொடு சமைத்த**
**என்கொண்(டு) இயற்றிய எனத்தெரிவிலாத**

*[இழைத்து - செய்து; மணியைக் கொடு - இரத்தினங்களைக் கொண்டு; பொதிந்து - மேலே மூடி; என் கொண்டு - எதைக் கொண்டு, எதனால்.*

என்று கம்பர் பாடுகிறாரே, அது இந்தப் பல்லக்குக்கும் பொருந்தும். இதை - இந்த அற்புதக் கலைப் பொருளை - தோளிலே வைத்து நடந்தால், என்னதான் தொலையா நெடு வழியாக இருக்கட்டுமே, கண நேரத்தில் நடந்து விடலாம், அவ்வளவு அழகுடைய பல்லக்கு. அதோடு இப்போது பல்லக்கில் அமர்ந்து, அதன் அசைவோடு, கொடி போல் அசையும் அழகி யார் தெரியுமா? 'எங்கள் இளவரசி, எங்கள் நாட்டின் தலைவி' என்று பெருமையோடு சொல்கிறார்கள் போகிகள். 'எழிற் பல்லக்கிலே எழிலரசி, எங்கள் தோளிலே எழில் வெள்ளத்தையல்லவா ஏந்தி நடக்கிறோம், நடக்கிறோமா, இல்லை, மிதக்கிறோம், பறக்கிறோம்' என்று மெய்

பம்பாய் டி. எஸ் உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு எஸ். சீனிவாச அய்யர் பம்பாய் நகரில் 'ஜஸ்டிஸ் ஆப் பீஸா'க நியமிக்கப்பட்டிருப்பதை அறிந்து பெரு மகிழ்ச்சி அடைகிறோம். சிறந்த கல்வித் துறை நிபுணரான இவர் பம்பாய் ராஜ்ய தலைமை ஆசிரியர்கள் மகாநாட்டுக்குத் தலைமை வகித்து அனைவரது பாராட்டுதலையும் பெற்றவர். அவருக்கு அளிக்கப்பட்டுள்ள இந்தக் கௌரவத்தைக் கண்டு பம்பாயில் வாழும் தமிழர்கள் அனைவரும் பெருமிதமும் பேருவகையும் அடைகிறார்கள். ★

சிலிர்க்க, உள்ளம் பெருமையால் விம்மப் பாடத் தொடங்குகிறார்கள் போகிகள்.

> ஏந்திச் செல்கிறோம் — ஒயிலாய்
> ஏந்திச் செல்கிறோம்
> ஏம மென் சரத்தில் ஆடும்
> சுடர் முத்துப் போல் அவளை
> ஏந்திச் செல்கிறோம்.

[ஏம-தம்பத்தாளனை : சடிக்-சதி இக்னாத]

பல்லக்கு மெல்லிய தங்கச் சங்கிலி போலவும், இளவரசி அந்தச் சங்கிலியில் கோத்த ஒப்பற்ற நன்முத்துப் போலவும் அவர்களுக்குத் தோன்றுகிறது. ஏன் ஒயிலாய் நடக்க மாட்டார்கள்? பல்லக்கு அலை போல் ஆடிச் செல்கிறது. அலைக்குள்ளே மின்னும் கதிரொளி போல, சிவிகையின் உள்ளே இளவரசியின் பொலிவு மின்னுகிறது. இந்த அழகுக் கொள்ளையில் தம்மை மறந்து தமது இளவரசியின் புகழைப் பாடுகிறார்கள் பல்லக்கைச் சுமந்து கொண்டு செல்லும் வீரர்கள் :

> எங்கள் பாடல் வேய்ந்த காற்றில்
> எழில் மலர்போல் அசைகுவாள்.

'ஆமாம், எங்கள் பாட்டு முடைந்த தல்லவா காற்று, அந்தக் காற்றில் அலர்ந்த எழில் மலரடா எங்கள் இளவரசி! அசைகிறாள் பார், எங்கள் பாட்டோடு அசைகிறாள் பார்!' என்று துள்ளுகிறார்கள் போகிகள். பல்லக்கு துள்ளுகிறது. உள்ளே வீற்றிருக்கும் அழகும் துள்ளுகிறது. சாலையருகிலே அலைமோதும் ஏரியின் வெள்ளத்தின் நுரையை அலகால் கோதிய வண்ணம், பறவை ஒன்று பாய்கிறது. 'எங்கள் இளவரசியும் இந்தப் பறவையைப் போலத்தான் இருக்கிறாள்.'

> பொங்கு வெள்ள நுரையைக் கோதும்
> புள்ளினைப் போல் துள்ளுவாள்.

அழகிய கனவொன்றின் இதழிலே தளிரும் குறுநகை போலவும் அவள் மின்னுகிறாள்.

> தங்கக் கனவின் இதழில் மின்னும்
> தளிர் நகைபோல் தவழுவாள்.

என்ன சொல்வது, அவள் எழிலை எப்படிச் சொல்லிலே வடிப்பது என்பது தான் தெரியவில்லை. நாங்கள் பாடுகின்ற பாடல் வானம்போல் விரிகிறது. அந்த வானத்தில் சுடர் விடும் நட்சத்திரமா அவள்? கடலின் நெற்றியை வருடும் பொன் கதிரா? புதுமணப் பெண் ஒருத்தியின் விழியிலே பெருகும் ஆனந்தக் கண்ணீரா?

> எங்கள் பாடல் வானில் ஆடும்
> மீனைப் போல மின்னுவாள்.
> பொங்கு கடலின் நெற்றி வருடும்
> பொன் கதிர்போல் துள்ளுவாள்.
> தங்கு புதுமை மணப்பெண் விழியில்
> தளிர் புனல்போல் தவழுவாள்.
> எங்கும் செல்லுவோம் — களிப்பில்
> ஏந்திச் செல்லுவோம்.

இந்தப் பாடல், பாரத நாட்டுக்குயில் என்று தமது கவிதையால் புகழ்பெற்ற கவியரசி சரோஜினி தேவி ஆங்கிலத்தில் இயற்றியது. பாட்டில் அடுக்கடுக்காக வரும் உவமைகளும், பாட்டின் சந்தமும் நம்மை எங்கேயோ உள்ள அலகிலா எழில் உலகத்துக்கு அழைத்துச் செல்கின்றன. மொழிபெயர்ப்பில் பாட்டின் நளினம் பெரும்பாலும் சிதைந்து விடுகிறது. என்றாலும், அதன் கவிதையின் சாயல் சிறிதாவது தோன்றினால் போதும்; பல்லக்கை ஏந்தி நடக்கும் வீரர்களுடைய பெருமிதம் சொல்லில் வடிவாகும் மாயம் சிறிதாவது பிடிபட்டால் போதும். பிடிபடுகிறதா என்று பாடல் முழுவதையும் சேர்த்துப் பார்ப்போம் :

> ஏந்திச் செல்லுவோம் — ஒயிலாய்
> ஏந்திச் செல்லுவோம்
>
> எங்கள் பாடல் வேய்ந்த காற்றில்
> எழில் மலர்போல் அசைகுவாள் ;
> பொங்கு வெள்ள நுரையைக் கோதும்
> புள்ளினைப் போல் துள்ளுவாள் ;
> தங்கக் கனவின் இதழ்ச் மின்னும்
> தளிர்நகை போல் தவழுவாள் ;
> எங்கும் செல்லுவோம் — களிப்பில்
> ஏந்திச் செல்லுவோம்.
>
> ஏம மென்சரத்தில் ஆடும்
> சுடர் முத்துப்போல் அவளை
> ஏந்திச் செல்லுவோம் — நாம்
> ஏந்திச் செல்லுவோம்.
>
> எங்கள் பாடல் வானில் ஆடும்
> மீனைப் போல மின்னுவாள் ;
> பொங்கு கடலின் நெற்றி வருடும்
> பொன் கதிர்போல் துள்ளுவாள் ;
> தங்கு புதுமை மணப்பெண் விழியில்
> தளிர் புனல்போல் தவழுவாள் ;
> எங்கும் செல்லுவோம் — எழுந்
> தேற்றிச் செல்லுவோம்.
>
> ஏம மென் சரத்தில் ஆடும்
> இணையிலாத முத்தெனவே
> ஏந்திச் செல்லுவோம் — பல்லக்கில்
> ஏந்திச் செல்லுவோம்.*

* Sarojini Naidu : 'Palanquin Bearers'

# அதன் மதிப்பே அலாதி*

நியூ ஷோராக்கின்

# பாப்லின்

வெண்மையான, கலருள்ள மற்றும் கோடிட்ட துணிகள்

நான்கு புகழ் பெற்ற பிராண்டுகளில் கிடைக்கின்றன:

*

## பிளாட்டினம் டச்

*

## ஸில்வர் டச்

*

## டெஸெர்ட்

*

## மதுகுஞ்ச்

பைன் மற்றும்

ஸூப்பர்பைன் ரகங்கள் உள்ளன

Look for

·SANFORIZED·

on the label

லாட்டிங், கேம்பிரிக்,
லாங்கிளாத்து

தி நியூ ஷோராக் ஸ்பின்னிங் அண்ட் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட், நடியாட்.

SISTA'S-NS 18

# கல்கி மாதச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்றவர்கள்



'பாண்டியனின் பரிசு'
துரோணன்

ஜூலை

ஆகஸ்ட்



'வைரம்'
டி. எஸ். கோதண்டராமன்



'தேர்த் திருவிழா'
க. பஞ்சாபகேசன்

செப்டம்பர்

அக்டோபர்



'அடிமையின் காதல்'
கௌசிகன்

'நட்சத்திரம்'
ஆர். சூடாமணி



நவம்பர்

டிசம்பர்

'சந்திரகாந்தக்கல்'
என். சம்பந்தம்



# விசித்திரச் சலங்கை

கதை...

படம்....

(10)









இன் திட்டமெல்லாம் தரை மட்ட மானதை எண்ணிய சசாங்கனுக்கு ஆத்திரம் மூண்டு வந்தது. அந்தக் கொடியவனின் இதயத்திலே உதயமாயிற்று மற்றுமொரு சூழ்ச்சி. கானகத்திலே காய்த்துத் தொங்கிய சுவைமிக்க மாங்கனிகளைப் பறித்து அவைகளைக் கொடிய நாக சர்ப்பங் களை விட்டுக் கடிக்கச் செய்து, விஷ மேற்றிப்பழம் விற் கும் கிழவருகை அவர்கள் வரும் வழியில் காத் திருந்தான்.






கல்கண்டு போல
இனிக்கும் பழம்;
காதலர்களுக்கு
ஏற்ற பழம், சாமி!
அம்மாவுக்கு வாங்கிக்
கொடுங்க, சாமி


அவன் தான் எவ்வளவு அன்
பாகப் பேசுகிறான். எனக்குத்
தாகமாக இருக்கிறது. நல்ல
சமயத்தில் வந்தான்.


பின்னால் வந்த தேவதத்தன் மதிபாலனின்
முதுகிலுள்ள பளபளக்கும் கேடயத்தில்
தெரிந்த உருவத்தைக் கண்டு திடுக்கிடுகிறான்,
பழத்தில் ஏதோ ஆபத்து என்று உணர்ந்து




என்ன ?... ஆசையோடு சாப்பிடப் போன
என் காதலியின் கைப்பழத்தைக் கல்லால்
அடித்து வீழ்த்தியது யார்? தேவதத்தா,
நீயா...?


டேய், காட்டுப் புறத்
தானே! இது என்ன நன்
றி கெட்ட செயல்!



# கெட்டிக்காரர்!

அரண்மனையையடுத்த தோட்டத்தில் ஒரு சிறு மண்மேடு. அந்த மண் மேட்டில் உள்ள வளைக்குள் ஒரு எலி வசித்து வந்தது. அதன் தாயார் எலி அதனை வளையை விட்டு வெளியே வர அனுமதிப்ப தில்லை. எலிக்குச் சாப்பாடு, வாசம், தூக்கம் எல்லாம் அந்தச் சின்னஞ் சிறு உலகத்துக்குள் தான்.

ஒரு நாள் அந்த வளைக்குள் ஒரு எறும்பு லட்டுவிலுள்ள பூந்தியை மட்டும் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு வந்தது.

''எறும்பே! இது என்ன? எங்கே போகிறாய்?'' என்று கேட்டது எலி.

''நான் தான் மழைக் காலத்துக்கு உணவைச் சேகரிப்பவளாயிற்றே. அருகி லுள்ள அரண்மனையிலிருந்து உணவு சேகரித்துக் கொண்டு செல்லுகிறேன்'' என்றது எறும்பு.

''அப்படியா? அரண்மனை என்றால் இந்த வளை மாதிரி இருக்குமா?'' என்று ஆவலுடன் கேட்டது எலி.

''இதை விடப் பன்மடங்கு பெரிது.... அங்கே உணவெல்லாம் அம்பாரம் அம்பார மாய்க் கொட்டிக் கிடக்கும். வேண்டியதைச் சாப்பிடலாம்...இந்தப் பூந்தியைச் சாப் பிட்டுப் பாரேன்.''

''ஆஹா! என்ன ருசி. பூந்தி நிறையச் சாப்பிட ஆசையாயிருக்கிறது....என்னையும் அரண்மனைக்கு அழைத்துப் போகிறாயா?'' என்று ஆசையுடன் வினவியது எலி.

''அதற்கென்ன? பேஷாகப் போகலாம். இப்பொழுதே வேண்டுமானாலும் வந்தால் உன்னை அழைத்துப் போகிறேன்! ஆனால்......?''

''ஆனால் என்ன?'' என்று வியப்புடன் கேட்டது எலி.

''உன் தாயாரிடம் சொல்லி அனுமதி பெற வேண்டாமா?'' என்றது எறும்பு.

"என் தாயார் ஒன்றும் சொல்ல மாட்டாள். வா, போகலாம்!" என்று கூறிப் புறப்பட்டது எலி.

இரண்டும் அரண்மனையை அடைந்தன. அங்கே விஸ்தாரமான அறையில் விருந்துக்காக நிறைய லட்டுகள் செய்து வைத்திருந்தார்கள்.

'ஹா! எவ்வளவு பெரிய இடம்! இந்தக் கடவுள் பாரபட்சமுள்ளவர். மனிதனுக்கு இத்தனை பெரிய மாளிகையைக் கொடுத்தவர் நமக்குச் சின்னஞ்சிறு வளையை அல்லவா கொடுத்திருக்கிறார்?" என்று மிகுந்த வருத்தத்துடன் கூறியது எலி.

"ஆமாம்!" என்று சொல்லித் தலையை அசைத்தது எறும்பு.

"நானிங்கே என் அம்மாவிடம் கூறி அந்த வளையை விட்டு இத்தகைய பெரிய மாளிகையில் குடியேறி விடுகிறேன், பார்!" என்று கர்வத்துடன் கூறியது எலி.

அப்பொழுது 'மியாவ்' என்ற சத்தம் எழுந்தது அந்தச் சத்தத்தைத் தொடர்ந்து பூனை ஒன்று பாய்ந்து வந்தது.

அடுத்தகணம் எறும்பு கண்ணுக்குத் தெரியாமல் ஓரமாக ஒதுங்கி நின்றது. ஆனால் எலிக்கு ஒளிந்து கொள்ள அந்த விஸ்தாரமான அறையில் இடமில்லை. பூனையோ அதை விடாமல் துரத்தியது.

உயிருக்குப் பயந்து எலி தலை தெறிக்க வேகமாக ஓடியது. எலிக்கு எப்படியாவது தன் வளையை அடைந்து விட்டால் போதும் என்றாகிவிட்டது.

எங்கெல்லாமோ வளைந்து சுற்றிக் கடைசியில் தன் வளைக்குள் எலி 'தப்பித்தோம், பிழைத்தோம்' என்று நுழைந்தது. சின்னஞ்சிறு வளையாக இருந்ததால் பூனை உள்ளே நுழைய முடியவில்லை. அது பின்தங்கி விட்டது. எலி மெதுவாக வளைக்குள்ளிருந்து வெளியே எட்டிப் பார்த்தது. பூனை வளையின் வாசலில் அதைக் கவ்வத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தது.

அப்பொழுதுதான் அதற்குப் புத்தி வந்தது. 'அரண்மனை மாதிரி இடம் வேண்டும் என்று ஆசைப்பட்டோமே? கடவுளை வேறு குறை சொன்னோமே? நமக்குச் சின்னஞ்சிறு வளையை இருப்பிடமாகச் செய்யாதிருந்தால் இன்று நம் உயிர் பறி போயிருக்குமே? கடவுள் கெட்டிக்காரர்! நாம் தான் அதிக ஆசைப்பட்டு விட்டோம்' என்று மனத்துக்குள் எண்ணியது எலி.

அந்தக் கணத்திலே அதனிடமுள்ள ஆசை அறவே நீங்கி விட்டது. அதற்குப் பிறகு எலி மிகுந்த திருப்தியோடு அந்த வளைக்குள்ளேயே வெகுநாட்கள் சௌக்கியமாக வாழ்ந்திருந்தது. —பி. எஸ். மணி

(ஆதாரம்: ஆங்கிலக் கதை)

## சின்னக் கண்ணன்



# உருக்கு உறுதியின் சின்னம்

நாட்டின் உறுதிக்கும் உருக்கு தேவை. ஆதாரத் தொழில்களுக்கும் கனரகத் தொழில்களுக்கும் அது வேண்டும். பொருள்களைச் செய்து தரும் இயந்திரங்களையும், இந்த இயந்திரங்களையே உண்டாக்கும் இயந்திரங்களையும் செய்ய உருக்கு அதிகமாகத் தேவைப்படுகிறது. பிலாயிலும், ரூர்க்கேலாவிலும், துர்க்காபூரிலும் நிறுவப்படும் உருக்கு ஆலைகள் நமக்கு வேண்டிய உருக்கு உற்பத்தி செய்யும்.

பல லட்சக்கணக்கான டன் நிலக்கரியும் லட்சக்கணக்கான வாட் மின்சாரமும் இந்த ஆலைகளுக்கு வேண்டிய இயக்கச் சக்தியைத் தருகின்றன.

## ஆற்றலின் ஆதார சுருதி

மூலப்பொருள்களை ஆலைகளுக்கும், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை மற்ற இடங்களுக்கும் எடுத்துச் செல்லப் போக்குவரத்து வசதிகள் விரிவு செய்யப்படுகின்றன.

உருக்கு, நிலக்கரி, ரெயில்வே, துறைமுகங்கள், மற்றும் அவற்றிற்கு வேண்டிய சக்திகள் ஆகியவை பொருளாதார வளர்ச்சியின் ஆதார சுருதிகளாகக் கருதப்படுகின்றன. எனவே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இவற்றின் முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது.





நாடு முன்னேற — வளங்கள் பெருக

நிறைவேறுகிறது **திட்டம்**

DA 57/296

நடுப்பகல் மணி இரண்டு இருக்கும்.

அலுவலகம் விடுமுறையாதலால், எங்கே வெல்லாமோ ஊர் சுற்றி விட்டு, அப்போது தான் வீட்டுக்குள் நுழைந்தேன்.

ரேழியில் கால் வைக்கவில்லை. புயல் போல் எதிர்ப்பட்டாள், மீனு.

''இதோ, பாருங்கள்!...இதற்கு முதலில் பதில் சொல்லி விட்டுப் பிறகு நீங்கள் உள்ளே நுழையுங்கள்!''

ஆணையிட்டாள் அவள். ஏன் அவளுக்கு அவ்வளவு கோபம்?

''உங்களுக்கு அம்மா வேணுமா? அல்லது மனைவி வேணுமா?''

நான் மெதுவாகச் சிரித்தேன்.

என்றைக்கு மேல் படிப்பு என்ற பெயரில் நாகரிகம் என்ற நச்சுப் பாம்பு மனித சமூகத்தைத் தீண்ட ஆரம்பித்ததோ, அன்றிலிருந்தே ஆண் வர்க்கத்தை எதிர்நோக்கியிருக்கும் பெரிய பிரச்னை அல்லவா இந்தக் கேள்வி? மீனு கலபமாகக் கேட்டு விட்டாளே!



# குடியிருந்த கோயில்



''பிலஹரி''

''நான் கேட்டதற்குப் பதில் வரவில்லையே!'' என்று அதட்டினாள் அவள்.

''என்ன மீனு! நடந்த விஷயம் என்ன வென்று தெரியாமல் ...''

''ஆயிரம் நடந்தது! அதைப் பற்றி உங்களுக்கு என்ன? நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்!''

என்னத்தைச் சொல்வது? மனிதன் இந்த உலகில் பிறந்தபொழுதே, அவனுடைய பிற்காலம் நன்றாகச் செழுமையுடன் இருக்க வேண்டும் என்பதற்காக, எதையுமே தியாகம் செய்யத் துணியும் தெய்வம் தாய்; அன்னை எழுப்பிய அந்த அஸ்திவாரத்தில், அக்கறையுடன் கட்டடம் எழுப்புபவள் தாரம். இரண்டு கண்களில் எந்தக் கண் உயர்ந்தது?

''நடந்த விஷயம் தெரியாமல்...''

''ஏன்? விஷயத்தை உடைத்தே சொல்கிறேன்! நீங்கள் ஒருவர்தான் உங்கள் அம்மாவுக்குப் பிள்ளையா?''

''இடீரென்று ஏன் இந்தச் சந்தேகம்?''

''வில்லிவாக்கத்தில் கொஞ்ச நாட்கள் போய் இருக்கட்டுமே!''

''அண்ணா வீட்டிலா?''

''பின்னே ஸ்டேஷன் 'வெயிட்டிங் ரூமி'லா போய் இருக்கச் சொல்கிறேன்?''

''அவனே கஷ்டப்படுகிறான், பாவம்!''

''இங்கே என்ன வாழுகிறது? இருபது தேதியானால் புறங்கையைப் பார்க்கவேண்டியிருக்கிறதே!''

நாக்கைச் சாட்டையாக மாற்றிச் சுழற்றினாள் அவள்.

''அவனோ சம்சாரி! ஏழெட்டுக் குழந்தைகள் அவனுக்கு இருக்கின்றனவே.''

''என்னை 'மலடு' என்று சொல்கிறீர்கள்; அவ்வளவுதானே!''

அவள் கண்கள் குட்டைகளாக மாறின.

மீனுவை, அழ விடலாமா? மருண்டு பார்க்கும் அந்த விழிகள் நீரில் மிதக்கலாமா? அவளைப்போல் மனைவி கிடைப்பது என்பது எல்லோருக்கும் கிட்டும் அதிர்ஷ்டமா? செம்பொன் நிற மேனி, கருநாகம் போன்ற கூந்தல், மல்லிமொட்டு போன்ற நாசி, மருண்ட மானின் இயற்கை அழகு நிரம்பிய பார்வை, குயிலை விடச் சிறந்த குரல், அன்னத்தைவிட ஆயிரம் மடங்கு உயர்ந்த நடை—இவ்வளவும் ஒருங்கே பெற்ற அவளைக் கைப்பிடித்த பொழுது, இந்திர போகமே கிடைத்து விட்டது போன்ற மகிழ்ச்சி எய்தினவன் ஆயிற்றே நான்! இந்த மூன்று வருஷ தாம்பத்திய வாழ்வில், ஒரு கணமும் அந்த மலர் வதனம் வாடுவதற்குப் பொறுத்ததில்லையே என் உள்ளம். அம்மாவிடமும் எனக்குப் பிரியம் இல்லை என்று கூறமுடியுமா? ஆனால், அம்மாவுக்கும் மீனுவுக்கும் அபிப்பிராய பேதம் ஏற்படும்பொழுது, என்

உள்ளம் யார் பக்கம் சாய்கிறது? மீனுவின் பக்கம் தானே? அந்த அழகுத் தெய்வத்தின் முன்பு, என் சப்த நாடிகளும் ஏன் அப்படி ஒடுங்கிப் போய் விடுகின்றன ?

மீனு விசித்து அழும் குரல், என் உள்ளத்தைப் போகக்கியது. அம்மாவின் பக்கம் ஆத்திரத்துடன் திரும்பினேன்.

''அம்மா!'' என் குரலில் ஏன் எவ்வளவு கோபம் எழுந்தது ?

சுவரில் சாய்ந்தபடியே ஜபமாலையை உருட்டிக் கொண்டிருந்த அம்மா கண் திறந்தாள்.

''என்ன அம்மா நடந்தது?'' சலிப்புடன் வினவினேன்.

''எதைப்பற்றிக் கேட்கிறாய்?''

அம்மாவின் குரலில் தான் எவ்வளவு சாந்தம் ததும்பி யிருந்தது !

''ஒன்றும் தெரியாதது போல் எதற்கு நாடகம் போடுகிறாய்?...உனக்கும் மீனுவுக்கும் என்ன சண்டை?''

''அவளையே கேளேண்டா, குழந்தை!'' அமைதியுடன் கூறினாள் அம்மா.

''உன்னைக் கேட்டால் அவளை ஏன் அம்மா, அனுவசியமாக இழுக்கிறாய்?''

''...............''

''கொஞ்சம்கூட அநுசரித்துக் கொண்டு போகத் தெரியவில்லையே உனக்கு!''



''ஆமாமடா! ஒன்றும் தெரியாமல்தான் இத்தனை வருஷங்களாக, உங்களை யெல்லாம் பெற்று வளர்த்து ஆளாக்கி விட்டிருக்கிறேன்! இனிமேல் வேண்டுமானால் உங்களிடம் கற்றுக் கொள்கிறேன் !''

அம்மாவின் குரலில் துளிக்கூட ஆத்திரம் தொனிக்கவில்லை. புன்முறுவலுடன் தான் இதைக் கூறினாள் அம்மா.

'' ஆமாம் ! ஆமாம்! இத்தனை வயதாகியும் இடக்குப் பேச்சுக்கு மட்டும் குறைச்சலில்லை. உன் வேதனையே பெரிதாகப் போச்சு !''

'' ஏண்டா இவ்வளவு கஷ்டம்? பேசாமல் சமுத்திரத்திலே தள்ளி விடேன் ! நிம்மதியாய்ப் போய் விடும் !''

'' அந்தப் பாவம் வேறே எனக்கு வரணுமா? பேசாமல் வில்லிவாக்கத்திலே கொண்டு தள்ளி விடுகிறேன் !''

அம்மா ஒரு சில வினாடிகள் என்னையே உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வையில் இருந்த தீட்சண்யத்தை என்னால் தாள முடியவில்லை.

'' அதுவும் உண்மை தாண்டா, குழந்தை ! நானே கொஞ்ச நாட்களாக உன்னிடம் சொல்ல வேணும் என்று நினைத்தேன். அவனும் நான் பெற்ற பிள்ளைதானே ! அவனிடமும் தான் நான் கொஞ்ச நாட்கள் போய் இருக்கிறேனே? உனக்குள்ள பொறுப்பு அவனுக்கு மாத்திரம் இல்லையா !...இரண்டு நிமிஷம் பொறு! இதோ கிளம்பி விடுகிறேன் !...''

அம்மா மெதுவாக எழுந்தாள். கொடியில் உலர்த்தி யிருந்த இரண்டு கந்தல் புடவைகளைச் சுருட்டிக் கொண்டாள். பூஜை அறையில் உள்ள விபூதிப் பெட்டியை எடுத்துக் கொண்டாள். சிறிய கோணிப் பை

ஒன்றில் எல்லாவற்றையும் திணித்துக் கொண்டு கிளம்பத் தயாராகி விட்டாள்!

ஒரு பெண் பிள்ளைக்கே இவ்வளவு ரோசம் என்றால், ஆண்பிள்ளையாகிய எனக்கு எவ்வளவு கோபம் வராது?

ஆனால், அந்தப் பெண் தேவதையின் கருவிலே உதித்து ஜனித்த ஆண் புழு நான் என்பதை ஒரு கணம் மறந்து விட்டேன்.

"சரி! சரி! வா! நாலரை மணிக்கு ஒரு வண்டி இருக்கு! அதில் அனுப்பி விட்டுறேன்!"



நானும் துணிந்து விட்டேன்.

இடுப்பிலே பையை வைத்துக் கொண்ட அம்மா, ஒரு கணம் தயங்கினாள். பிறகு மீனாவைப் பார்த்தாள்.

"நான் போய் விட்டு வரேன், மீனா! ஒன்றையும் மனசில் வைத்துக் கொள்ளாதே! வேளா வேளைக்குத் தவறாமல் சாப்பிடு! என்ன காரியம் இருந்தாலும், செவ்வாய், வெள்ளி தவறாமல் எண்ணெய் தேய்த்துக் கொள்! சூடு உடம்பு உனக்கு. வரட்டுமா?"

சென்ட்ரல் ஸ்டேஷனை நானும் அம்மாவும் அடைந்த பொழுது நாலாவது பிளாட்பாரத்தை விட்டு ரேணிகுண்டா பாசஞ்சர் கிளம்பத் தயாராக நின்றுகொண்டிருந்தது. கூட்டம் அதிகம் இல்லாத பெட்டியாகப் பார்த்து அம்மாவை ஏற்றி விட்டேன். ஏனோ என் உள்ளத்தில் இனம் தெரியாத வேதனை எழுந்து மறைந்து கொண்டிருந்தது.

தாயை விடத் தாரம் அவ்வளவு உயர்ந்தவளா என்ன? இனிமேல் அதை யோசித்து என்ன பலன்? இதோ அம்மா கிளம்பப் போகிறாள்.

"ஏண்டா குழந்தை, வண்டி கிளம்ப எத்தனை நேரம் இருக்கு இன்னும்?"

"ஐந்து நிமிஷம் இருக்கு!"

எங்கேயோ பார்த்தபடி கூறினேன். அம்மாவை நேருக்கு நேர் பார்க்க ஏனோ எனக்குத் தைரியம் வரவில்லை.

'ஒரு ஆரஞ்சுப்பழம் வாங்கிக் கொடேன்."

நான் சற்றுத் திடுக்கிட்டேன்.

"இன்றைக்குக் காலையிலிருந்து வயிறு சரியாக இல்லே! ஒன்றும் சாப்பிடவில்லே! அது தான், வண்டியிலே சாப்பிடலாம்னு ......"

என் அடிவயிறு கலங்கியது. இதயம் கனத்தது. அம்மா இன்று முழுவதும் பட்டினியா?

அருகிலுள்ள 'ஸ்டாலு'க்கு விழுந்தடித்துக் கொண்டு ஓடினேன். இரண்டே விநாடிகளில் திரும்பினேன். மெதுவாக நகர ஆரம்பித்த ரயில் வண்டிக்குள் ஜன்னல் வழியாக அரை டஜன் பழங்களைத் தள்ளினேன்.

"எதற்கடா இவ்வளவு?...அப்போ, நான் வரேன்! உடம்பை ஜாக்கிரதையாகக் கவனிச்சுக்கோ!...ஊர் சுற்றாதே! தினமும் அந்த லேகியத்தை மறக்காமல் சாப்பிடு! அப்போது தான் உன் பித்தம் இறங்கும்! உடம்பைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்!"

வண்டி புறப்படும் அந்த இரைச்சலிலும், அம்மாவின் குரல் வெகு தெளிவாகக் கேட்டது. கண்களின் ஓரத்தில் கரையிட்ட நீரைத் துடைத்துக் கொண்டேன்.

மெதுவாக நகர ஆரம்பித்த வண்டி, சற்றைக்கெல்லாம் வேகமாக ஓடத் தொடங்கியது—தன் ராட்சஸச் சக்கரங்களை என் மனத்தில் பதிய வைத்துக் கொண்டு!

வீட்டில் காலடி எடுத்து வைக்கவே என் உள்ளம் கூசியது.

வழக்கமாகத் தினந்தோறும் காலை நீட்டிக் கொண்டு அம்மா உட்கார்ந்திருக்கும் திண்ணை

காலி. அம்மாவின் பழம் புடவைகள் தொங்கிக் கொண்டிருக்கும் கூடத்துக் கொடியும் காலி. சுவாமி படத்து ஆணியில் வழக்கமாகத் தொங்கும் ஜபமாலை இல்லை.

அந்தக் கிழவி ஒருத்தி இல்லாமல் வீடே 'வெறிச்' சென்றாகி விட்டது!

"அடேடே! வந்து விட்டீர்களா! இதோ ஒரு நிமிஷத்தில் காப்பி கலந்து கொண்டு வருகிறேன்!" என்று கூறிக்கொண்டே மீனு சமையலறையில் புகுந்தாள். இரண்டே நிமிஷங்களில் காப்பியும் பலகாரமும் கொண்டு வந்து விட்டாள்.

அவளை நோக்கினேன். என்ன அழகான அலங்காரம்? சமீபத்தில் தீபாவளிக்கு வாங்கிய மாம்பழக் கலர் மைசூர் சில்க் புடவையும் கறுப்புநிற வெல்வெட் ரவிக்கையும் அவள் அழகை எவ்வளவு அதிகமாக எடுத்துக் காட்டின! தலைநிறையக் கனகாம்பரம். ஏற்கெனவே கொள்ளை அழகு. செயற்கை அலங்காரமும் சேர்ந்து கொண்டால், கேட்க வேண்டுமா? கைதேர்ந்த சிற்பி ஒருவன் செதுக்கிய சிலையாகக் காட்சியளித்தாள்மீனு.

"ஆளையே விழுங்கிவிடுகிறாற்போல் பார்க்கிறீர்களே!" என்று சிரித்தபடியே கேட்டாள். சிரிப்பா அது? உள்ளத்தையே சுண்டி இழுக்கும் மந்திர ஒலி ஆயிற்றே! என் சோர்வு கொஞ்சம் கொஞ்சமாக மறையத் தொடங்கியது.

"எதற்காக மீனு இவ்வளவு அலங்காரம்?"

"உங்களுக்கு ஐந்து நிமிஷம் அவகாசம் தருகிறேன்! அதற்குள் முகம் கழுவிக்கொண்டு தயாராக வாருங்கள்! ஏதாவது சினிமாவுக்குப் போகலாம்!"

"சினிமாவுக்கா?"

"ஆமாம்!...அப்பப்பா!...ஒரு இடத்துக்கு நினைத்தபோது போனோம், வந்தோம் என்று உண்டா? எல்லாவற்றுக்கும் உங்கள் அம்மாவிடந்தான் உத்தரவு வாங்க வேண்டும்! வீட்டிலேயே அடைந்து கிடக்க, அப்பாடி என்ன நாம் தாத்தா — பாட்டியாகி விட்டோமா?...... கொஞ்சநாட்களாவது நிம்மதியாக, சுகத்தோடு இருக்கலாம்!......"

அவள் கூறியதும் உண்மை என்றுதான் எனக்குத் தோன்றியது!

ஐந்தே நிமிஷத்தில் கிளம்பி விட்டோம்.

படம் ஆரம்பிப்பதற்காக, தியேட்டர் விளக்குகள் அணைக்கப்பட்டன. கொட்டகையில் மாத்திரமல்ல, என்னுடைய உள்ளத்திலும் பழைய இருள் மறுபடியும் சூழ ஆரம்பித்து விட்டது.

கவனம் முழுவதும் வில்லிவாக்கத்தைச் சுற்றியே வட்டமிடத் தொடங்கியது.

"இந்நேரம் வில்லிவாக்கம் போய்ச் சேர்ந்திருப்பாள் அம்மா. அண்ணாவிடம் விஷயத்தைச் சொல்லவே மாட்டாள். 'என்னவோ உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருந்தது. வந்துவிட்டேன்!' என்றுதான் சொல்லுவாள்! என்ன இருந்தாலும் பிள்ளையை விட்டுக்கொடுக்கத் தோன்றுமா?"

சிந்தனை என் மூளையைக் குழப்பியது.

ஒரு வழியாகப் படம் முடிந்து, வெளியே வந்தோம். கை ரிக்ஷா ஒன்று உடனே கிடைத்தது. குடியிருக்கும் தெருவின் பெயரைச் சொன்னேன். வண்டி கிளம்பியது.

நானும் இந்தச் சென்னையில் பத்து வருஷங்களாக இருக்கிறேன். ஆனால் இவ்வளவு சந்து பொந்துகள் இருக்கின்றன என்று எனக்குத் தெரியாது. நான் முன்பின் நடந்தறியாத சந்துகளிலெல்லாம் புகுந்து, குறுக்கு வழியாகச் சென்று கொண்டிருந்தது ரிக்ஷா.

ஒரு சந்திலிருந்து மற்றொரு சந்துக்கு, வண்டி திரும்பும் சமயம்.

"அ...ம்...மா! அ ... ம் ... ம்... ம் ...மா! ஐயோ!...அ...ப்...ப...ப்...பா..."

திடீரென்று என் உடம்பிலுள்ள ரத்தம் உறைந்து விட்டதைப் போன்ற உணர்வு ஏற்பட்டது. கைகால்கள் நடுநடுங்கின. உடல் முழுமையும் முத்து முத்தாக வியர்வை துளிர்த்தது.

என்ன குரல் அது? அக்குரலில்தான் எவ்வளவு பயங்கரம்? எவ்வளவு தீனமான குரல் அது! மனிதப் பிறவியின் குரலா அல்லது லாரி அல்லது மோட்டார் ஒன்றின் அடியில் அரைபடும் பிராணி ஒன்று அலறும் குரலா? அதுவும், இந்த இரவு வேளையில்...?

மெதுவாக மீனுவின் கையைப் பிடித்தேன். ஆச்சர்யம்! அவள் சிறிதும் அச்சம் கொள்ளவேயில்லை. அவள் முகத்தில் இளநகை படர்ந்தது. ஒரு பெண்ணுக்கு இவ்வளவு தைரியமா? ஆண்மகன் நானே பயப்படும் பொழுது, ஒரு பெண் இவள் எவ்வளவு துணிச்சலாக இருக்கிறாள்?

"பயமாக இருக்கிறதா என்ன?" கொஞ்சலோடு, மெதுவான குரலில் கேட்டாள் மீனு.

மௌனமாகத் தலையசைத்தேன் நான்.

"அது என்ன சத்தம், தெரியுமா...?"

"தெரிந்தால் பயப்படமாட்டேனே...!"

ரிக்ஷா மிகவும் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது.

"நான் ஒரு தரம் குடித்தனக்கார மாமியுடன் இங்கே வந்திருக்கிறேன். இந்தச் சந்து முனையிலே ஒரு பிரசவ ஆஸ்பத்திரி புதிதாகக் கட்டியிருக்கிறார்கள். நீங்கள் கேட்ட சத்தம்... குழந்தை என்றால் சும்மாத்தானா...?"

மீனுவின் குரலில் சற்றே வெட்கம் தொனித்தது.

என் மெய் சிலிர்த்தது. ஒரு சின்னஞ்சிறு ஜீவனை வெளியே கொண்டுவருவதற்கு, ஒரு உயிர் அல்லவா பணயம் வைக்கப்படுகிறது? தன் உயிரையே இறப்பின் வாயிலிலே வைத்து, ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கிறாளே அதன் தாய்! தன் உடலை வில்லாக வளைத்து, ஒடித்து, அங்கங்கள் அலற, பொறுக்க முடியாத பெரும் வலியைப் பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு தாய், ஒரு சில வினாடிகள் அல்லது நிமிஷங்கள் துடிதுடிக்கிறாளே, அது ஏன்றுக்கே அவள் பெற்றெடுக்கும் ஜீவன் அவளைத் தெய்வமாகப் போற்றி வணங்க வேண்டுமே!

என் கண் முன்னே ஒரு காட்சி......

சுமார் இருபத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு...இன்றுபோல் வைத்திய வசதி பெருகாத காலம்...திருச்சி ஜில்லாவில், காவேரிக் கரையோரம் அமைந்துள்ள ஒரு குக்கிராமத்தில், குறிப்பிட்ட ஒரு வீட்டில், கிராமத்தில் முதிர்ந்த கிழவிகள் நான்கைந்து பேர்கள் ஒத்தாசை செய்ய, மங்கலாக எரிந்து கொண்டிருக்கும் காடா விளக்கின் ஒளியில், ஒரு தாய் தன் உயிரையே பணயம் வைத்து,

உடல் பதறத் துடிதுடிக்கிறாள்......சற்றைக் கெல்லாம், இந்த ஜன சமுத்திரத்தில் ஒரு துளியாக, நானும் பிறந்துவிடுகிறேன்...பத்து மாதம் குடியிருந்த கோவிலை விட்டு வெளியேறுகிறேன் நான்...அந்த வலியிலும், தன் தாயிடம் "மணி என்ன?" என்று கேட்கிறாள் என் அன்னை எனக்கு நாள் நக்ஷத்திரம் குறிப்பதற்கு......!

"ரிக்ஷா......!"

ரிக்ஷாக்காரன் திரும்பிப் பார்த்தான்.

"வண்டியை வேகமாக விடு, அப்பா...! உம்... இன்னும் வேகம்...! வீட்டிலிருந்து சென்டிரல் ஸ்டேஷன் போகணும்...!"

மீரு என்னை ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

"என்ன உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? இப்போது எதற்கு சென்டிரல் ஸ்டேஷனுக்கு..."

"சட்! வாயை மூடு! என் செய்கை இப்போது உனக்குப் பைத்தியக்காரத்தனமாக இருக்கலாம்! ஆனால், நாளையே நீயும் நாலைந்து குழந்தைகளுக்குத் தாயாக மாறும் போது என் செய்கை உனக்கு நிச்சயம் புரியும். கடைசி வண்டி பத்தரைக்கு இருக்கிறது! நான் வில்லிவாக்கம் போகிறேன். நாளையே அம்மாவை அழைத்துக் கொண்டு வரப் போகிறேன். என்ன தவறு செய்தாலும் ஒரு மனிதனுக்கு மன்னிப்பு கிடைக்கும்! ஆனால் தான் குடியிருந்த கோவிலை ஒதுக்குவதற்கு ஒருவன் துணிந்தால், அவனுக்கு விமோசனமே கிடையாது. மிருகத்துக்குச் சமானம் அவன். இவ்வளவு நாள் மிருகமாக இருந்தாகி விட்டது. இனியாவது மனிதனாக மாறுகிறேனே!"

அவள் பதில் கூறவில்லை.

பாசத்திலும் பக்தியிலும் பிறந்த பவித்திரமான என் ஆண்மையின் அதிகாரத்துக்கு இனிமேல் அவள் கட்டுப்பட்டுத் தானே ஆக வேண்டும்!

# படித்துப் பாருங்கள்

## ஜி. ஏ. நடேசன் கம்பெனியின் வைர விழா மலர்

ஜி. ஏ. நடேசன் கம்பெனி 1897ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. சென்ற வருஷத்துடன் அதற்கு அறுபதாண்டுகள் பூர்த்தி யடைகின்றன. ஜி. ஏ. நடேசன் அவர்கள் பலப் பல அரிய நூல்களை மிக எளிய விலையில் விற்று வந்தார். மகாபாரதம், ராமாயணம், உபநிஷதங்கள் ஆகியவற்றுடன் நம் நாட்டுப் பெரியோர்கள், பக்தர்கள் ஆகிய பலருடைய வாழ்க்கை வரலாற்றையும் பிரகரித்து மிக மலிவான விலையில் விற்று, சீரிய தொண்டு புரிந்து வந்தார். இந்தப் பணியுடன் அவரே ஒரு அரும் பெரும் ஸ்தாபனமாக விளங்கி வந்தார். அவருக்கு நாட்டிலுள்ள எல்லாக் கட்சிப் பிரமுகர்களும் அன்பர்கள். மகாத்மா காந்தி சென்னைக்கு வந்தால் ஜி. ஏ. நடேசன் அவர்கள் இல்லத்தில்தான் தங்குவார் என்று சொன்னால் போதும், அவருடைய நண்பர்களின் தரத்தை எளிதில் உணரலாம். அவரைப் பற்றியும், அவரது சிறந்த பணிகளைப் பற்றியும் நாட்டின் பல பகுதிகளிலிருக்கும் பல பெரியோர்கள் இம்மலரில் அரிய கட்டுரைகளாக எழுதி யிருக்கிறார்கள். பல அபூர்வமான புகைப்படங்களையும் இதில் காணலாம். இந்த மலர் முழுதும் ஆர்ட் காகிதத்தில் அச்சடிக்கப்பட்டு மிக நேர்த்தியாக விளங்குகிறது. காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியார் இம்மலருக்கு ஆசி அருளியிருக்கிறார்.

பிரசுரம்: ஜி.ஏ. நடேசன் அண்ட் கம்பெனி 3, கங்குராமசெட்டித் தெரு, சென்னை-1.

## சினிமா டைரி 1958

சினிமா தற்காலத்தில் வெறும் பொழுது போக்குச் சாதனமாக மட்டும் இல்லாமல், வாழ்க்கையில் இன்றியமையாத அம்சமாக மாறி வருகிறது. ஏழை, பணக்காரன்,—ஆண், பெண் — மாணவர், மாணவிகள் — சிறுவர், சிறுமியர்,—வாலிபர், வயோதிகர்— என்ற வேற்றுமையின்றி எல்லாருக்கும் மகிழ்வூட்டும் சாதனமாக விளங்குவது சினிமா.

நம் சமூக வாழ்வில் இத்தனை செல்வாக்குப் பெற்றுவிட்ட சினிமாக் கலை ஒரு தனி உலகையே சிருஷ்டித்துக் கொண்டு சுவர்க்க லோகம், பூலோகம் என்பது போல் 'சினிமா உலகம்' என்று பெயர் பெற்று விட்டது.

அத்தகைய சிறப்பு வாய்ந்த சினிமாக் கலையைப் பற்றிய பல விஷயங்களையும் தாங்கி இந்த டைரி வெளிவந்திருக்கிறது. சினிமாக் கதை வசனகர்த்தாக்கள், பாடல் இயற்றுபவர்கள், சங்கீத டைரக்டர்கள், பின்னணிப் பாடகர்கள், நடன டைரக்டர்கள், ஒளிப் பதிவாளர்கள், ஒலிப்பதிவாளர்கள், நடிக, நடிகையர்களின் வாழ்க்கைக் குறிப்புகள்- இப்படி எல்லா விஷயங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது, இந்த வருஷத்துச் சினிமா டைரி. சினிமாக் கலையில் சம்பந்தப்பட்டவர்களை மட்டும் குறிக்காமல், சினிமாக் கலையின் தரத்தை நிர்ணயித்துக் குற்றங் குறைகளைப் பாரபட்சமற்ற முறையில் எடுத்துக் கூறிப் பணியாற்றும் சினிமா விமரிசகர்களைப் பற்றியும் குறிப்புகள் தந்திருப்பது பாராட்டுக்குரிய விஷயம்.

சினிமா நடிக, நடிகையர்களின் வர்ண ஒவியங்கள் கண்ணைக் கவர்கின்றன. சினிமாவை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டிருக்கும் புது விதப் பரமபத சோபான படம் விநோதமா யிருக்கிறது. இத்தனை அம்சங்களோடு டைரியின் இன்றியமையாத அம்சமான நினைவுக் குறிப்பையும் நினைவாகச் சேர்த்திருக்கிறார்கள். இந்த அரும் பெரும் பணியைத் துவங்கி, தகவல்களைச் சேகரித்துத் தொகுத்திருக்கும் டைரி ஆசிரியர் "காண்டீபன்", கூட்டு ஆசிரியர் செல்வம் இருவரும் நம் பாராட்டுக்கு உரியவர்கள்.

கிடைக்குமிடம்: சுதர்ஸன் பப்ளிகேஷன்ஸ், 20, கல்லுக்காரன் தெரு, மயிலாப்பூர், சென்னை-4; விலை: ரூ-3

சென்னை பிரபாத், சரஸ்வதி

மற்றும் தென்னாடெங்கும் வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருக்கிறது



நடிகவேள் M.R.ராதா நடிக்கும் ஸ்ரீ லக்ஷ்மி பிக்சர்ஸ்

# நல்ல இடத்து சம்மந்தம்

BALU BROS

டைரக்ஷன்... மூலக்கதை.... ...திரைக்கதை வசனம்... ...சங்கீதம்...

K.சோமு • V.K.ராமசாமி • A.P.நாகராஜன் • K.V.மஹாதேவன்

ஸ்டுடியோ. பிலிம்சென்டர் தயாரிப்பு.. V.K.ராமசாமி • A.P.நாகராஜன்

21 - 2 - 58 முதல் - சென்னை சித்ராவிலும்











# பரிசும் ஆசியும்: புதுமுறை

















# வைர அட்டிகை

* ஆனா. ஸா. குஞ்சிதபாதம் *

நெல்லையப்பர் மத்தியானச் சாப்பாடு ஆனபிறகு ஆயில்லினாத் தலையணையைத் தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டு, இரண்டு சங்கிலிகளையும் உதைத்துக் கொண்டு அகலமான கருங்காலிப் பலகை ஊஞ்சலில் படுத்திருந்தார்.

அவருடைய மனைவி சிவபாக்கியம் அவர் எதிரில் வந்து நின்று இலேசாகக் கனைத்து அவருடைய சிந்தனையைக் கலைத்தாள். சாவதானமாக மூடிய கண்களைத் திறந்து, தலையைத் திருப்பி, பார்வையை அவள்மீது செலுத்தி, "ஏன்?'' என்றார்.

''செங்கமலத்துக்கு வைர அட்டிகை வாங்கிப் போட வேணுமாம். அவங்க சொல்லிருங்க'' என்றாள் சிவபாக்கியம்.

'அவங்க' என்று சிவபாக்கியம் குறிப்பிட்டது நெல்லையப்பருடைய காலஞ்சென்ற தம்பியின் பாரியை மணியாச்சியைத்தான்.

மனைவி மணியாச்சியையும், ஒரே பெண் குழந்தை செங்கமலத்தையும் விட்டு விட்டு நெல்லையப்பரின் தம்பி பதினைந்து வருஷங்களுக்கு முன்பு காலமானார். நெல்லையப்பர் தம்பியின் மனைவியையும் குழந்தையையும் பராமரித்தார். விருத்தாசலத்தின் பையன் பாலையாவுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். தம்பி அனாதையாக இவர்களை விட்டுச் சென்று விட்டான். ஒருவரும் ஒரு குறையும் சொல்லக் கூடாது என்று எவ்வளவோ எச்சரிக்கையாகத்தான் நெல்லையப்பரும் இருந்தார். அதற்காக மணியாச்சியும், செங்கமலமும் அடிக்கடி ஏராளமாகப் பணம் கேட்டுப் பிடுங்கியெடுத்துக் கொண்டிருந்தால் அவரும்தான் என்ன செய்வார்?

'' வைர அட்டிகையா? நமக்கும்தான் பெண் பிள்ளைகள் இல்லையா? எல்லாருக்கும் வைர அட்டிகை வாங்கிப் போடுகிறதென்றால் கட்டுபடியாகுமா? கையிலே இப்போது பணம் இல்லை. அறுவடையாகி நெல் விற்றால் தான்பணம் வரும். சொல் அவங்ககிட்டே '' என்றார் நெல்லையப்பர்.

அறுவடையாகி நெல் பணம் வந்து சேருகிறவரை பொறுக்கவில்லை மணியாச்சிக்கு. இரண்டு மாதங்களுக்கு முன்புதான் பிரசவிக்க வந்திருந்த மகள் செங்கமலத்தைக் கைக் குழந்தையுடன் அழைத்துக் கொண்டு மருமகன் வீட்டுக்குப் போய் விட்டாள் மணியாச்சி. அங்கிருந்து விருத்தாசலத்தின் உதவியால் வக்கீல் நோட்டீசு அனுப்பினாள் நெல்லையப்பருக்கு. தன்னுடைய கணவரின் பாகமான சரி பாதி சொத்து தனக்குக் கிடைக்க வேண்டுமென்று கச்சேரியில் வழக்குப் போட்டாள். நெல்லையப்பரும் விடவில்லை. வக்கீல்களின் மனைவிகள் வைர அட்டிகை வாங்கிப் போட்டுக் கொள்ளும் அளவு இருதரப்பாரும் செலவிட்டு வழக்கைக் கீழ்க் கோர்ட்டுக்கும் மேல் கோர்ட்டுக்குமாக இழுக்கடித்தனர். கடைசியில் அவரவர்கள் செலவு தொகை அவரவர்களோடு போய் விடுவதென்றும், நெல்லையப்பர் பாதிச் சொத்தை மணியாச்சிக்குக் கொடுத்து விடுவதென்றும் மனோராஜியாகத் தீர்த்துக் கொண்டு விட்டார்கள்.

நேற்று வரையில் குற்றாலநாதர் ரைஸ் மில்லில் கணக்குப் பிள்ளையாயிருந்த விருத்தாசலம் தனக்குச் சம்பந்தியாக வந்து, விரோதியாக மாறி இப்போது ஜல்வாதுப் பொட்டும் ஜரிகை அங்கவஸ்திரமுமாகத் தம்மைவிட நல்ல நிலையிலிருப்பது நெல்லையப்பருக்குச் சொத்தில் பாதி இழந்ததைவிட வேதனையளிப்பதாக இருந்தது. தட்டிக் கழிக்காமல் கேட்டதுமே மணியாச்சியிடம் வைர அட்டிகையை வாங்கிக் கொடுத்திருந்தால்... தும்பை விட்டாயிற்று. வாலைப் பிடித்தும் பல்லில் உதை வாங்கிக் கொண்டாயிற்று!

விருத்தாசலத்தினிடம் மணியாச்சியின் சொத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு வந்தது முதல் அவர் தலைதெறித்து நின்றார். அவருடைய நீச சுபாவம் மாறிப்போய் விடவில்லை. தங்கமான குணமுள்ள பாலையாவோ தகப்பனாருக்கு அடங்கிய பிள்ளையாக இருந்தான். இந்த உலகத்திலே யாரிடமாவது விருத்தாசலத்துக்குப் பயம் உண்டென்றால் அது பாலையா ஒருவனிடம் மட்டுமேதான். பரிசுத்தமான மனமுள்ளவர்களிடம் தீயவருக்கு உள்ளூற அச்சம் இருக்கத்தான் செய்யும்; அது இயற்கையின் நியதி. பாலையா புதிதாகக் கிடைத்த நிலம் நீச்சை அடிக்கடி போய்க் கவனித்துக் கொண்டு வந்தான். பழைய ஓட்டுவில்லை வீடு மெத்தைக் கட்டடமாயிற்று. டயர்போட்ட வில்வண்டி, மணப்பாறைக் காளைகள் — இப்படி வாழ்க்கைத் தரம் உயர்ந்தது.

'' பாலையா! இன்னும் வைர அட்டிகை வாங்காமல் இருக்கீங்களே? குழந்தை செல்லமணிக்கு இரண்டு வயது முடிஞ்ச போச்சு.

மறுபடியும் செங்கமலம் முழுகாமல் இருக்கு. எப்போது அது வைர அட்டிகை போட்டுப் பார்க்கிறதாம். கிழவியாய்ப் போன அப்புறமா?'' என்றாள் மணியாச்சி.

''நாளைக்கே ஏற்பாடு செய்கிறேன்'' என்றான் பாலையா.

மறுநாளே பாலையா திருநெல்வேலிக்குப் போய்ப் பிரபல வைர வியாபாரி ஹீராலால் பிரேம்சந்த் கடையில் ஆறு காரட் உயர்ந்த ரக வைரக் கற்களைத் தேர்ந்தெடுத்தான். இடையிடையே பச்சைக் கற்களைப் பதித்து மிகவும் நவீன மோஸ்தரில் அட்டிகை கட்டிக் கொடுப்பதாகப் பிரேம்சந்த் சொன்னார். அழகழகான 'டிசைன்'களைக் காட்டினார். பவுன், கூலி எல்லாம் உள்பட ஆறாயிரம் ரூபாய் வரை ஆகும் என்று கணக்குப் போட்டுச் சொன்னார். ஆயிரம் ரூபாய் அட்வான்ஸாகக் கொடுத்து விட்டுப் பாலையா ஊருக்குத் திரும்பினான்.



பத்து நாட்களில் அட்டிகை வேலை முடிந்து விட்டது. ஹீராலால் இலக்குவன் என்ற லக்ஷ்மணனிடம் நகையைக் கொடுத்து அனுப்பினார். லக்ஷ்மணன் பஸ்ஸிலிருந்து இறங்கி வந்தபோது மணி மூன்றிருக்கும். அன்று காலைதான் பாலையா கிராமத்துக்குப் போய் நிலங்களைப் பார்த்து வருவதாகக் கிளம்பினான். லக்ஷ்மணன் அட்டிகையை விருத்தாசலத்திடம் கொடுத்தான். பாலையாவின் பெயருக்கு எழுதப்பட்ட கடிதத்தையும் அவரிடமே கொடுத்தான். ''நாளை பாலையா வந்து விடுவார். அவரைப் பார்த்து விட்டுப் போ'' என்றார் விருத்தாசலம்.

செங்கமலம் அட்டிகையைப் பார்த்தாள். நகைப் பெட்டியின் நீலநிற வெல்வெட் பின்னணியில் பூரிப்புடன் பல நிற ஒளிகளை அள்ளி வீசிக்கொண்டிருந்த அதை அணிந்துகொண்டு கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தாள். எழில் மோகினியான அந்த உருவம் அவளைப் பார்த்துக் குதூகலித்துச் சிரித்தது. சுவாமி படத்துக்கு நமஸ்காரம் செய்தாள். அம்மாவையும் மாமனாரையும் வணங்கினாள். அந்த நகையைக் கொண்டு வந்த லக்ஷ்மணனுக்குக் காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். பாலையா தன்னை இப்பொழுது வந்து பார்த்தால் சொக்கிப் போய் விடுவான் என்று அகமகிழ்ந்தாள் செங்கமலம்.

கிலுகிலுப்பையைக் குலுக்கிப் பார்த்து விட்டுப் பிறகு ஓய்ந்துபோகும் குழந்தையைப் போல அவள் தன் மாமனாரிடம் நெக்லெஸைப் பெட்டியில் வைத்துக் கொடுத்து உள்ளே வைத்துப் பூட்டச் சொன்னாள். விருத்தாசலம் அதை எடுத்து இரும்புப் பெட்டிக்குள் பத்திரப்படுத்தி விட்டு லக்ஷ்மணனை அழைத்துக் கொண்டு திண்ணையில் போய்ப் பேசிக் கொண்டிருந்தார்.

மாலை மணி ஆறரை இருக்கும். அன்று காலையில் மாடியின் அறைகளுக்குப் பின்னால் திறந்த வெளியில் சருள் சருளாக நறுக்கிய ஜாதி நாரத்தங்காய்களை உப்பிட்டு உலர வைத்திருந்தது திடீரென்று நினைவுக்கு வந்து, எடுப்பதற்குப் போனாள் செங்கமலம். கீழே கிணற்றருகில் பேச்சரவம் கேட்டது. எட்டிப் பார்த்தாள். அவளுடைய மாமனார் விருத்தாசலமும், பண்ணையாட்கள் செங்கோடனும், கருப்பையாவும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டாள் மறைவிலிருந்து.

''இங்கே வந்து போலீஸ்காரன் ஏன் சோதனை போடுகிறான்? நாளைக்கே மதுரைக்குப் போய்ப் பிரித்து வேறு மாதிரி கட்டி விட்டால் போகிறது!'' என்றார் விருத்தாசலம்.

''இந்த ஆளைதான் எடுத்துக் கொண்டு தலைமறைவாக ஓடிப் போய் விட்டான் என்று தான் சேட்டுக்கும் தோன்றும்'' என்றான் செங்கோடன்.

''குழியைவெட்டிவைத்து விட்டுச் சரியாக ராத்திரி பன்னிரண்டு மணிக்கு நாங்கள் மில்லுக்கு வருவோம்'' என்றான் கருப்பையன்.

''இதோ இருநூறுரூபாய். தலைக்கு நூறாக எடுத்துக்குங்க. பாக்கி மூந்நூறு காலையிலே வந்து காரியம் முடிந்ததும் வாங்கிக்குங்க'' என்றார் விருத்தாசலம்.

செங்கமலம் அவ்வளவுதான் கேட்க முடிந்தது. நாரத்தங்காய்கள் இருந்த தட்டை எடுத்துக் கொண்டு திரும்பி விட்டாள். வேதனைப்பட்டது அவள் உள்ளம். என்னவோ அனர்த்தம் ஏற்படப் போகிறது என்று திகிலடைந்தாள். யாரைப்போய் அவள் கேட்க முடியும்? இப்படியும் இருக்கலாமோ? நகை கொண்டு வந்த ஆளைத் தீர்த்துக் கட்டி விடவா இந்தச் சதியாலோசனை? ''தேவி! காப்பாற்று. கணவனே கண் கண்ட தெய்வம் என்று அனவரதமும் கருதும் பதிவிரதையாக நான் இருந்தால் இக்குடும்பம் கொலைகாரக் கும்பல் என்ற பெயர் அடையாமல் செய்'' என்று பிரார்த்தனை செய்தாள். அவளுடைய குதூகலமெல்லாம் மறைந்து விட்டது. எல்லையில்லாத கலவரம் அவள் மனத்திலே மூண்டது. 'தடக் தடக்'கென்று அவள் இதயம் அடித்துக் கொண்டது. பீதி வயிற்றைப் பிசைந்தது.

இரவு விருத்தாசலமும் லக்ஷ்மணனும் சாப்பிட உட்கார்ந்தபோது, ''பாவம்! இந்த மனிதன் நாளைச் சாப்பாட்டுக்கு இருக்கப் போகிறானோ, இல்லையோ?'' என்று கழிவிரக்கம் கொண்டு நாலு கரண்டி நெய் அதிகமாக ஊற்றினாள் செங்கமலம். முருங்கைக்காய் சாம்பாரையும் முட்டைக்கோஸ் கறியையும் வஞ்சனையில்லாமல் பரிமாறி, சாப்பிடுகிற மட்டும் சாப்பிட்டுப்பிறகே உயிரை விடட்டும் என்று எண்ணமிட்டாள். அவள் என்ன செய்ய முடியும்? தாயாரிடம் வேணுமானால் சொல்லலாம். சொல்லிப் பிரயோசனமில்லை. லக்ஷ்மணனைத் தனியாகக் கூப்பிட்டுப் பேச

முடியுமா? மாமியாரிடம் சொன்னால் மாமனாரைக் கேட்டாலும் கேட்பாள். சம்பவம் எதுவும் நிகழாமல் தடுத்து விடலாம். ஆனால் கற்பனையாக அவள் அபவாதம் உண்டாக்கினாள் என்ற கெட்ட பெயர்தான் ஏற்படும். ஒன்றும் புரியாத உள்ளக் கொந்தளிப்புடன் அவள் ஆடைத் தயிராகக் கொண்டு வந்து இருவர் இலையிலும் விட்டாள். அவ்வளவு தான் அவள் செய்ய முடிந்தது.

"மில்லிலே போய்ப் படுத்துக் கொள்ளும், ஐயா! காற்று நன்றாக வரும்" என்றார் விருத்தாசலம்.

லக்ஷ்மணனை ஓர் ஆள் மில்லுக்கு அழைத்துப்போனான். தெருக்கோடியில் தென்னந் தோப்பில் புதிதாக நெல்லரைக்கும் மில் வைத்திருந்தார் விருத்தாசலம். வராந்தாவில் நாடாக் கட்டில் போடப்பட்டிருந்தது. இரண்டு தலையணைகள் ஜமக்காளத்தில் சுருட்டி வைக்கப்பட்டிருந்தன. மேல் பக்கம் இலேசாகப் புகையடைந்த ஹரிக்கேன் விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. வேலி நடுவேயிருந்த மூங்கில் கேட்டைத் திறந்து அந்த ஆள் லக்ஷ்மணனை அங்கு அழைத்துக் கொண்டு போய் விட்டுவிட்டுச் சென்றான்.




'குளுகுளு' என்று தென்றல் வீசிக் கொண்டிருந்தது. லக்ஷ்மணன் படுக்கையில் சாய்ந்து கொண்டு ஒரு சிகரட்டை ஊதித் தீர்த்தான்.

உலகத்தில் சினிமா, சிகரெட்டு இரண்டு மில்லாமல் லக்ஷ்மணனால் ஜீவித்திருக்க முடியாது. பஸ்ஸி லிருந்து இறங்கும்போது மைதானத்தில் போட்டிருந்த கொட்டகையில் "சேற்றில் மலர்ந்த செந்தாமரை" என்ற படம் ஓடிக் கொண்டிருப்பதை அறிந்தான். பழைய படமாயிருந்த போதிலும் அதைப் பார்க்கும் ஆவலை அவனால் அடக்க முடியவில்லை. லக்ஷ்மணன் படத்தைப் பார்க்கப் போனான்.

பத்து மணிக்கு வரும் கடைசி பஸ்ஸிலிருந்து பாலையா இறங்கி வழியில் சினிமாக் கொட்டகை வாசலில் இருந்த கடையில் சோடா குடித்து விட்டுத் தெருவை நோக்கி வந்தான். மில் தென்னந்தோப்பில் தேங்காய்கள் அடிக்கடி திருட்டுப் போய்க் கொண்டிருந்ததால் டார்ச் விளக்கை யடித்துப் பார்த்தான். கேட் திறந்திருப்பது தெரிந்தது. வேகமாக உள்ளே போனான். நாடாக் கட்டிலும் அதன்மீது சுருட்டிய படுக்கையும் அவன் கண்களில் தென்பட்டன. ஹரிக்கேன் விளக்கின் ஜுவாலை மங்கலாக்கப்பட்டு நீல நிறமாக எரிந்து கொண்டிருந்தது. யாருக்காக இந்தப் படுக்கை போடப்பட்டிருந்தது என்பது அவனுக்குப் புரியவில்லை. விளக்கைப் பெரிதாக்கிக் கம்பியிலே மாட்டி வைத்தான். கையிலே இருந்த 'வெண்ணிலா' பத்திரிகையின் தொடர்கதையில் உப்பரிகையிலிருந்து ராஜகுமாரி மேலே பிரித்துவிட்ட நூலேணியின் வழியாக, அவள் கீழே இறங்கினாளா, அல்லது கீழே நூலேணியைப் பற்றிக்கொண்ட கதாநாயகன் மேலே ஏறினானா என்பதை அறிந்து கொள்ளும் ஆவல், யாருக்காக அங்கே படுக்கை போடப்பட்டிருந்தது என்று அறிந்து கொள்வதிலுள்ள ஆவலைவிட அதிகமாக இருந்தது. படுக்கை கட்டியிருந்த கயிற்றை எடுத்து விட்டத்தில் கட்டி விளக்கை அதிலே தாழ்த்த மாட்டிவிட்டுக் கட்டிலில் படுத்துக் கொண்டான். மாலை இட்டிலி சாப்பிட்டிருந்ததால் பசியில்லை.

தமிழ் நாட்டின் பிரசித்தமான ஆசிரியர்களில் ஒருவரான லக்ஷ்மிகாந்தம் எழுதிய அந்தச் சரித்திரக் கலப்புள்ள தொடர்கதையில் மனத்தை ஓட விட்டான். நாள் முழுதும் அலைந்த கால்களைப் படுக்கையில் நீட்டியதும் இதமாக இருந்தது. தூக்கம் கண்களைச் சுற்றியது. பத்திரிகையை மார்பின்மேல் போட்டுக் கொண்டு மெய்ம்மறந்து தூங்கலானான். கள்ளங் கபடமற்ற அவன் முகம், விளக்கின் ஒளியில், கடவுள் ஒருவர் சரணார்த்திகளைக் காப்பவராய், ஆபத்பாந்தவராய், கஜேந்திரனையும், திரௌபதியையும் கோடானுகோடி பக்தர்களையும் ரட்சித்தது போல் இன்றும் ரட்சிப்பார் என்பதை விளக்குவதுபோல நிம்மதியோடு இருந்தது.

தீட்டிய அரிவாளுடன் இருளில் பதுங்கிப் பதுங்கி வந்த செங்கோடனும் கருப்பையனும் சின்ன எஜமானர் கட்டிலில் படுத்திருப்பதைக் கண்டு பதைபதைத்துத் திரும்பினர். சினிமாவுக்குப் போய் விட்டு வந்த லக்ஷ்மணன் எழுப்பியபிறகுதான், விளக்கைத் தீவட்டியாகப் படர்ந்தெரிய விட்டு, தான் உடல் உணர்ச்சியின்றி நித்திரையில் ஆழ்ந்தது பாலையாவுக்குத் தெரிந்தது.

காலையில் லக்ஷ்மணனும் பாலையாவும் எழுந்து தென்னந்தோப்பிலிருந்த கிணற்றடி

யில் பல் விளக்கி விட்டு வந்தார்கள். காலை உணவுக்குப் பிறகு பில் பணம் கொடுத்துக் கணக்குத் தீர்த்து லக்ஷ்மணனை எழுப்பி அனுப்பி வைத்தான் பாலையா.

வைர அட்டிகையையும் எடுத்துக் கொண்டு செங்கமலத்தையும் அழைத்துக் கொண்டு மாடிக்குப் போனான் அவன். சற்று நேரம் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். செங்கமலம் பெருமூச்சு விட்டாள். முதல் நாள் மாடியிலிருந்து கேட்ட செய்தியை அவள் சொல்லவில்லை.

" நான் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன். இந்த வைர அட்டிகையைக் காந்திமதி அம்பாளுக்குக் காணிக்கையாகச் சூட்டப் போகிறேன் " என்றாள் செங்கமலம். ஏன் என்று சொல்வாளா, கெட்டிக்காரி!

பாலையாவுக்கு ஒரே வியப்பாக இருந்தது. விருத்தாசலத்திடம் வந்து, " அப்பா! மில்லில் படுத்துக் கொண்டிருந்த லக்ஷ்மணன் ராத்திரி சினிமாவுக்குப் போனான். நான் பஸ்ஸில் இருந்து இறங்கி வந்து மில்லிலேயே படுத்துக் கொண்டு விட்டேன். விளக்கருகில் படித்துக் கொண்டிருந்தவன் அப்படியே தூங்கிப் போய் விட்டேன். விளக்கு படர்ந்து எரிந்து கொண்டிருந்தது. லக்ஷ்மணன் சமயத்தில் வந்து எழுப்பியிராவிட்டால் அந்த விளக்கினால் என்ன ஆபத்து நேர்ந்திருக்குமோ? இதைச் செங்கமலத்திடம் நான் சொன்னதும் அவள் அட்டிகையைக் காந்திமதி அம்பாளுக்குச் சாத்தி விடவேண்டும் என்று சொல்கிறாள் " என்றான் பாலையா.

அந்த அரிக்கேன் விளக்கினால் ஆபத்து வரவிருந்ததா? அல்லது வந்த ஆபத்து தொலைந்ததா? அவரிடம் காலையிலே செங்கோடன் வந்து சொன்னதை நினைத்ததும் அவருக்கு மயிர்க்கூச்சல் உண்டாயிற்று. பிறருக்குக் கேடு நினைத்து அவர் தம் துராசைக்குத் தம் ஒரே மகனைப் பலி கொடுக்கக் கூடிய நிலையல்லவா வந்தது? செங்கமலத்தின் மாங்கல்ய பலத்தினால் அல்லவா பாலையா தப்பினான்?

" அவள் பணம், அவள் விருப்பம்போல் செய், பாலையா! " என்று ஆமோதித்தார் விருத்தாசலம். காசாசை பிடித்த அப்பா எப்படி இவ்வளவு தாராள மனமுடையவரானார் என்று ஆச்சரியப்பட்டான் பாலையா. அன்று முதலே விருத்தாசலம் நல்லவரானது அவனுக்குமட்டும் ஆச்சரியமாக இல்லை; ஊரிலுள்ளவர்களுக்கே ஆச்சரியமாக இருந்தது.

# தமிழ் கூறும் நல்லுலகம்

ஜெம்ஷெட்பூரில் தென்னிந்திய மக்கள் ஒன்றுகூடி 24-1-58 முதல் 26-1-58 முடிய மூன்று நாட்கள் சாஸ்தாப்ரீதி உத்ஸவத்தை விமரிசையாகக் கொண்டாடினார்கள். முதல் நாள் மாலை மணக்கால் ரங்கராஜன் குழுவினரின் சங்கீதக் கச்சேரியும், மறு நாள் காலை ஸ்ருத்ராபிஷேகமும், ஏகாதச ருத்ரயக்ஞமும் சிறப்பாக நடந்தன. அன்றைய தினம் மாலை அம்புலப்புழை சங்கரநாராயணன் சகோதரர்கள் நாதஸ்வரக் கச்சேரியுடன் ஸ்ரீ தர்ம சாஸ்தாவை அலங்கரிக்கப்பட்ட ரதத்தில் வாண வேடிக்கைகளுடன் வீதிவலம் எடுத்தார்கள். மூன்றும் நாள் சாஸ்தாவுக்கு ஆராதனைகளும், ஏழைகளுக்கு அன்னதானங்களும் செய்து, ஸ்ரீ சாஸ்தாவின் பூஜையை வெகு விமரிசையாக நடத்தினார்கள்.

★

கல்கத்தாவிலுள்ள 'தேவவாணிபரிஷத்'தினர் பிப்ரவரி இரண்டாம் தேதி 'மத்யம வ்யாயோகம்' என்னும் சமஸ்கிருத நாடகத்தைப் பொதுஜனங்களின் முன்னிலையில் சிறப்பாக நடத்தினர். இந்தப் பரிஷத் கல்கத்தா அரசாங்கக் கல்லூரியைச் சேர்ந்த சாஸ்திர ரத்னாகர பிரும்ம ஸ்ரீ பி. என். பட்டாபிராம சாஸ்திரிகளின் தலைமையின் கீழ் சமஸ்கிருதம், வேதாத்யயனம் முதலிய வகுப்புகளை நடத்தி வருகின்றது.

இந்த நாடகத்தின் மூலம் வசூலாகும் தொகையை ஸ்ரீ காஞ்சி மடத்துக்காக இந்தப் பரிஷத் பிரசுரிக்க விருக்கும் 'அத்வைதக்ரந்த கோசம்' என்னும் நூலின் பொருட்டு உபயோகப் படுத்திக் கொள்ளத் தீர்மானித்துள்ளது.

தென்னிந்தியர் கலைச் சங்கத்தின் தொடக்க விழா ஹைதராபாத்தில் சென்ற 19-1-58 விமரிசையாக நடந்தேறியது.

ஆந்திரப் பிரதேச அக்கௌண்டெண்ட் ஜெனரல் ஸ்ரீ ராமையா அவர்கள் சங்கத்தைத் துவக்கி வைத்துப் பேசினார். இம்மாதிரி சங்கங்களின் அவசியத்தையும், தென்னிந்தியர்களுக்கே உரித்தான தனி கலாசாரப் பண்பையும், அது தழைத்தோங்க அவர்கள் எவ்விடம் சென்றாலும் சங்கங்கள் நிறுவிப் பாடுபடுவதைப் பற்றியும் தமது சொற்பொழிவில் குறிப்பிட்டார்.

★

ஆந்திர நாட்டிலே கடந்த பல ஆண்டுகளாகத் தமிழ்ப் பணியாற்றிவரும் குந்தக்கல் தமிழ்ச் சங்கத்தார், 31-1-58 அன்று மாலை 6-30 மணிக்கு விகட ரத்னம் திரு சந்தானம்-சந்துரு அவர்களின் விகடக் கச்சேரியை ஏற்பாடு செய்திருந்தார்கள். திரளாகக் கூடியிருந்த சபையோரை இன்பத்தில் ஆழ்த்திய அவர்கள் நகைச்சுவை பாராட்டத்தக்க முறையில் அமைந்திருந்தது.

இறுதியில் செயலாளர் க. சோமசுந்தரத்தின் நன்றி நவிலலுடன் விகடக் கச்சேரி முடிவடைந்தது.

மக்களின் ஆதரவையும், கலைஞர்களின் ஆதரவையும் அடிப்படையாகக் கொண்டு தமிழ் அன்னைக்கு இச் சங்கம் அரும் சேவை செய்து வருகிறது. உற்சாகத்துடன் நடத்தி வரும் இளைஞர்களின் முயற்சியான இத் தமிழ்ச் சங்கம் மேன்மேலும் வளருமாக.



நேர்த்தியான
அமைப்பு !



இனிமையான
நாதம் !




MODEL 222

- ஆல் வேவ்
- 3 – பாண்ட்
- 5 – வால்வ்
- "ஏஸி" அல்லது ஏஸி/டிஸி
- ரூ. 300/-; உள்ளூர் வரிகள் தனி

**murphy radio**

**மர்பி ரேடியோ**

பல ஆண்டுகளுக்கு உங்களை மகிழ்விக்கும் !

மர்பி ரேடியோ ஆப் இந்தியா லிமிடெட், பம்பாய்-12

வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

## மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ வாயில் நறுமணம்!
✓ ஒளிவீசும் பற்கள்!
✓ சொத்தைகுறையும்!




வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள்,

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பற்களை 2 நிமிஷம் பிரஷ் கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லா வற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல் நுனி நோக்கி தேய்க்கவும்.

*மேற்கண்ட முறையை இன்றே கையாளுங்கள்!*

**பல்டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**

---

# நரஸ் காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்



நரஸுஸ்
மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை

NC 2-73 ATW




## 49. நேயர்கள் கடிதம்

'அம்பேல்! அம்பேல்!'

இப்படி ஒரு சொல். இதை விளையாட்டுப் பிள்ளைகள் அடிக்கடி சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம்.

விளையாடிக் கொண்டிருக்கும்போது ஒரு சிறுவனை இன்னொருவன் துரத்திப் பிடிக்கப் போகிறான். பிடிபட்டுவிடும் நிலையில் இருக்கும் பையன் 'அம்பேல்' என்று சொல்லிவிட்டு நிற்கிறான். பிடிக்கப் போகும் சிறுவன் அவனைப் பிடிப்பதில்லை. பிடித்தாலும் பிடிபட்டவன் 'அவுட்' என்று கருதப்படமாட்டான்.

சளைத்துப் போனவனுக்கு—விளையாட்டிலுங்கூட—சலுகை காட்டும் இப்பண்பு நம்முள் என்று பிறந்ததோ, தெரியாது. இன்றளவும் பழக்கத்தில் இருக்கிறது. இப்பழக்கத்தின் அடிப்படைப் பண்பை நம்மில் பலர் கவனியாமல் இருக்கலாம். ஆனாலென்ன? பழக்கமும், அதிலுள்ள பண்பும் குறையவில்லை.

நிராயுதபாணியாய் நிற்கும் இராவணனைப் பார்த்து, ''இன்று போய்...... [இளைப்பாறி,] நாளை வா'' [யுத்தத்துக்கானாலும் சரி, சமாதானத்துக்கானாலும் சரி] என்றான் ஸ்ரீராமச்சந்திரன் என்று ராமாயணம். சளைத்தவனுக்குச் சலுகை காட்டுவது நமது அரிய பண்பு என்பதற்கு இதுவும் ஓர் உதாரணம்.

'தவுக்களைக் கவுண்டனு'க்கும் 'குப்புக் கவுண்ட'னுக்கும் சண்டை. நாட்டாண்மைக்காரனிடம் போகின்றனர். தப்பு முழுவதும் 'தவுக்களைக் கவுண்ட'னிடம் தான். ஆனால் ''அட! அவன் என்ன மனிசன்! நடக்கமாட்டாதே நவுந்துங் கடக்கிறவன். பாவம்! ஒன்னே சொல்லிப்புட்டாதான் என்னடா பூடிச்சு? கெடக்கரன்னு சும்மாப் போவியா ...அவனோடு சண்டைக்குப் போறியே... அட தூ! நீ வெட்கங்கெட்டவன்டா, குப்பா!'' என்கிறான் நாட்டாண்மைக்காரன். இளைத்தவனுக்கும் சளைத்தவனுக்கும் சலுகை காட்டுவது நமது பண்பு என்பதற்கு இது மற்றுமொரு உதாரணம். எழுதப் படிக்கத் தெரியாத பாமர மக்கள் நிறைந்த கிராமாந்தரங்களிலும் காணும் காட்சி.

அணுகுண்டுகளின் உற்பத்திப் பெருக்கினால் அண்டத்தை அழித்துவிட அடிகோல வேண்டாம். அண்டத்தை நாம் அழிக்கலாம். ஆனால் அதை ஆக்க முடியுமா? ஆண்டவனாலன்றி நம்மால் இயலாது. கைவசமுள்ள அணுகுண்டுகளை யெல்லாம் முதலில் ஆழ்கடலில் களைந்து உலகத்தின் ஆபத்தைத் தவிர்க்குமாறு அமெரிக்காவுக்குத் தம் ஆலோசனையைத் தெரிவித்தார் பாரதத்தாய் பெற்ற, பாரதப் பண்பு நிறைந்த—ரத்தினம் ஒருவர்.

'ஏனய்யா இந்த யோசனையை நீங்கள் ரஷ்யாவுக்குச் சொல்லக் கூடாதா?' என்று கேட்டதற்கு ''சளைத்தவனுக்கும் இளைத்தவனுக்கும் விட்டுக் கொடுப்பது தான் பண்பு. இன்று அமெரிக்காதான் பலசாலி. ஆகவே இந்த யோசனையை அமெரிக்காவுக்குச் சொல்கிறேன்'' என்று கூறினார்.

பிறகு சிலநாட்களானதும் ரஷ்யாவின் பலந்தான் அதிகமென்று தோன்றவே, இதே யோசனையை ரஷ்யாவுக்கும் அவர் சொன்னார்.

தன் கை ஓங்க வேண்டும் என்ற ஆசைப் பேய்; பிறன் என்ன இன்னல் செய்வானோ என்ற பயப் பேய். இவ்விரண்டுக்கும் இலக்காகிய அவ்வரசுகள் மேற்சொன்ன பண்பின் பெருமையையும் மேன்மையையும் உள்ளத்தில் உணர்ந்தும், செயலளவில் ஏற்கத் துணியவில்லை.

சளைத்தவனுக்கு விட்டுக் கொடுத்துச் சலுகை காட்டும் நமது அரிய பண்பைக் கல்கி வாசகர்களுக்கு நினைப்பூட்டி 'அம்பேல்' என்று கூவித் தஞ்சம் புக விரும்புகிறேன். நேயர்களின் கடிதக் குவியல்கள், குன்றுகளாய் விட்ட காரணத்தால் இந்த 'அம்பேல்' விட்டேன். இதற்கு மேல் என்ன செய்யலாம்?

இன்றைய வரையில் (31-1-58) 688 கடிதங்கள் வந்துள்ளன. இவற்றுள் பதிலுக்குத் தபால் கூலி அனுப்பாதவர்கள், பதில் தபால் அவசியமில்லாதவர்கள், நாட்டு வைத்தியக் கட்டுரைகளைப் புகழ்ந்து மதிப்புரை அனுப்பியுள்ளவர்கள், இக் கட்டுரை இன்ன விதத்தில் அமையவேணுமென்று ஆலோசனைதெரிவிப்பவர்கள்-இப்படியெல்லாம் பலதரப்பட்ட கடிதங்கள்.

இவற்றுள் சிலவற்றைப் பற்றிய பராமர்சம் சென்ற கட்டுரையில் பிரசுரமாகியுள்ளது. மற்றும் சிலவற்றை இக் கட்டுரையில் எழுத உத்தேசம். ஆனால் 'அம்பேல்' விட்டதை மாற்றி 'ஜூட்' சொல்லத் துணிவு ஏற்படவில்லை.

வயிற்றுப்போக்கில் [அமீபியாஸிஸ்—க்ரானிக் அமீபியாஸிஸ்—கோலைடிஸ்—என்னும் பற்பல நாமங்களால் அழைக்கப்படுவது] கருவம்பட்டை வில்வப்பழத்தின் உட்சதை ஆகியவற்றை உபயோகிக்கும் முறையை விளக்குமாறு கடிதம், 609-ல் பம்பாய் நண்பர் விரும்பியுள்ளார்.

கருவக்காய்—கருவேலங்காய் என்பதில் வித்துகள் தோன்றிப் பாதி முக்கால் முற்றியுள்ள நிலையில்—முழுதும் முற்றாத நிலையில்—உபயோகிக்கத்தக்கது. காயை இடித்துச் சலித்த நுண்பொடியில்...... மூன்று சிட்டிக்கை வீதம் தினம் 2 வேளை சிறிது ஜலத்துடன் பருகி வரலாம்.

செம்பழமான வில்வப் பழத்தின் உட்கதப்பைத் தண்ணீரில் கொதிக்க வைத்துப் பிழிந்தெடுத்ததில் போதுமான அளவு சீனிக் கற்கண்டைக் கரைத்துப் பானகமாகக் காய்ச்சிவைத்துக்கொண்டு 1, 2 டீஸ்பூன் அளவை 1, 2 அவுன்ஸ் ஜலத்தில் கரைத்துத் தினம் இரண்டு வேளை சாப்பிட்டு வரலாம்.

இவ்விதப் பழத்தின் உட்கதப்பை உலர்த்திப் பொடி செய்து வைத்துக் கொண்டும் வேளைக்கு 2, 3 சிட்டிக்கை வீதம் தினம் 2-3 வேளை ஜலத்துடன் உட்கொள்ளலாம்.

இவ்வகைப் பிணியினால் பீடிக்கப்பட்டவர்களுக்கு ஆகாரமாகவும், மருந்தாகவும் உபயோகிக்கத்தக்கது வெள்ளாட்டின் பால். இதை எத்தனை தரம் சொன்னாலும் நண்பர்கள் மறந்து விடுகின்றனர். இதை எடுத்துச் சொல்லும் டாக்டர்கள் இருப்பதாகவும் தெரியவில்லை. என்ன செய்யலாம்?

கடிதம் 625-ல் காட்டுப்புத்தூர் நண்பர் தமது இடது கால் முட்டியிலுள்ள வீக்கத்தைப் பற்றி எழுதியுள்ளார்.

கடிதம் 684-ல் புதுவையைச் சேர்ந்த அரியங்குப்பத்து நண்பர் [ஒரு மாணவர்] தமது இரண்டு முட்டிக் கால்களிலும் நிரந்தரமாக நின்று விட்ட வீக்கம் (நரித்தலைவாய்வு) பற்றி எழுதியுள்ளார். வாத ரோகங்களைப் பற்றி எழுதி வந்தக் கால் இந் நரித்தலை வாயுவைப் பற்றி எழுத வேணுமல்லவா? இவ்விருவருள் ஒருவருக்குப் போதுமான தகவலை எழுதியாயிற்று. இன்னொருவரைச் சிறிது பொறுத்திருந்து பார்க்கும்படி எழுதியுள்ளேன்.

கடிதம் 628-ல் பெங்களூர் நண்பர் தமது ரத்த மூலத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறார். இதற்கு சஸ்திர சிகிச்சை தான் நிரந்தர பலனைத் தரும். உடனே இதைச் செய்து கொள்ளச் சௌகர்யம் இல்லாவிடின் அபயாரிஷ்டம் என்ற மருந்தில் 2 டீஸ்பூன் முதல் அரை அவுன்ஸ் வரையில் ஒரு அவுன்ஸ் ஜலத்தில் கலந்து இரவில் படுக்கப் போகும் போது குடித்து வரவும்.

கடிதம் 637-ல் ராதாபுரத்திலிருந்து (கடிதத்தின் உள்ளே ஊரோ 'பேரோ' விலாஸமோ இல்லை) 'ஸ்ரீஹரி தாத்தா'வுக்குப் பேத்தி நமஸ்காரம் என்று எழுதும் ஸௌபாக்கியவதி ராதை - தன் நரைக்கு என்ன மருந்து என்று கேட்டிருக்கிறாள். பாவம், சின்னஞ் சிறுமி. கவலைப்படுவது மிக மிக சகஜம். ஆம்ராஸ்த்யாதி தைலத்தைத் தடவி முடி சீவி வந்தால் நரை மாறி விடும். இதைச் செய்வது எப்படி? இவ் விஷயமாக வரப்போகும் கட்டுரையில் தான் எழுத முடியும். அதற்குள் முடி முழுவதும் கொக்காகி விட்டாலோ? உடனடியாக உபயோகத்துக்கு இம் மருந்து எங்கு கிடைக்குமென்று தெரிவித்தால் நல்லதுதான். ஆனால் இந்தப் பேத்தியின் முகவரியே தெரியாதே!

கடிதம் 651-ல் ஜாம்ஷெட்பூர் நண்பர் கல்கியில் வரும் நாட்டு வைத்தியக் கட்டுரைகளில் சிலவே தமது கைவசம்

இருப்பதாக எழுதி — முதலிலிருந்து எல்லாக் கட்டுரைகளின் பிரதியும் ஒரு 'ஸெட்' அனுப்பிக் கொடுக்குமாறு எழுதுகிறார். இதற்கு நான் என்ன செய்ய முடியும்?

கடிதம் 652-ல் மலேயா-மலாக்காவிலிருந்து தமிழர்யா ஒருவர் தமது வயிற்றுக் கோளாறு பற்றி விஸ்தாரமாக எழுதியுள்ளார். பொதுவாக, நாட்டு வைத்தியக் கட்டுரைகளை மேற்பார்வையாகப் படித்து வருவோருங்கூட ஒரு சில விஷயங்களைக் கட்டாயம் அறிந்திருப்பார்கள்.

அதாவது இனம் தெரிந்த தெரியாத வலிகளிலும் ஹோர்மால் என்னும் சிமை அழுவான விதையின் சூர்ணம் வெந்நீரில் சாப்பிடத் தக்கது.

மலபந்தம் இருக்குமாயின் தாராளமாகக் கீரை வகைகளை ஆகாரத்தில் சேர்த்துக் கொள்வது. திராக்ஷை கஷாயம் அல்லது திராக்ஷாதி கஷாயத்தைக் குடிப்பது.

வயிற்றுப் போக்கும்-வலியும் இருப்பின்-வெள்ளாட்டின் பால், கருவக்காய் சூர்ணம் — இவற்றை உபயோகித்தல். இவை கவனத்தில் இருக்குமாயின் மலாக்கா, மலேயா நண்பருக்கு வயிற்றுக்கோளாறு ஒரு பெரிய விஷயமாகத் தோன்றவே செய்யாது.

கடிதம் 655-ல் பெரிய பிக்கட்டி நண்பர் தமது 'ஸோரியாஸிஸ்' என்னும் சரும ரோகத்தைப் பற்றி எழுதுகிறார்.

திக்தகம் அல்லது மஹாதிக்தக கிருதம் காலை மாலை 1 டீஸ்பூன் வீதம் 14 நாள் சாப்பிடவும்-அடுத்த 14 நாள் மஞ்ஜிஷ்டாதி கஷாயம் காலை மாலை 2 அவுன்ஸ் வீதம் சாப்பிடவும். இதனிடையில் வாரத்துக்கொரு முறையோ-அல்லது 2 வாரத்தில் மூன்று முறையோ - மாணிபத்ர குடம் என்னும் லேஹியத்தைச் சாப்பிட்டு நன்றாகப் பேதியாக வகை செய்து கொள்ளவும்.

இவையும் - மஹாஸ்நேஹமும் நீரடிமுத்து எண்ணெயுமாய்க் கூட்டிக் காய்ச்சிய நால்பால்மராதி தைலத்தைத் தேய்த்து ஊறின பிறகு, இலுப்பைப் பிண்ணாக்கினால் மெழுக்கைப் போக்கி நால்பால் மரப்பட்டை லேவ்ய சந்தனதி ஆகியவை கூட்டிக் காய்ச்சிய ஜலம் இளஞ் சூடாக உள்ளபோது மேலே விட்டுக் குளிக்கவேண்டும். ஒரு மாசத்துக்குப் பிறகு குணுகுணத்தை எழுதவும்.

இருக்கழுக்குன்றத்தில் ஒரு மாச காலம் வாசஞ் செய்து—காலை மாலை அல்லூர் குளத்தில் முழுகி, உடனே சுவாமியைத் தரிசனம் செய்து வருவது

கணவன் :- உனக்குப் பிறந்த நாள் பரிசாக அருமையான வைர நெக்லேஸ் வாங்கி வந்திருக்கிறேன்.
மனைவி :- ஆமாம், எனக்கு ரேடியோ வாங்கி வருவதாக அல்லவா கூறினீர்கள்!
கணவன் :—ஆமாம்! நானும் பல இடங்களில் அலைந்து பார்த்தேன். இமிடேஷன் ரேடியோ ஒன்றும் கிடைக்கவில்லையே!

மிகவும் நல்லது. மருந்தே இல்லாவிட்டாலும் குணமாகி விடும்.

கடிதம் 670, 671 களில் முறையே பம்பாய் சகோதரியும் பழனி சகோதரியும் குறிப்பிட்ட மருந்துகளை எப்படிச் செய்வது என்பதை விளக்கமாக எழுதும்படி விரும்பியுள்ளார்கள்.

மருந்துகளைத் தயாரிக்கும் வகையை விளக்கி எழுதுவது கட்டுரையாகும். கடிதத்துக்குப் பதிலாகாது. ஏதோ இரண்டொரு வரியில் விவரிக்கக் கூடிய மருந்தாக இருப்பின் எழுதி விடலாம். அப்படியில்லாததைக் கடிதத்தில் எழுதுவது. அதிலும் பம்பாய் சகோதரி விரும்புவது போல் ஒரு சீப்ஸ் கார்டில் எழுதுவது சாத்தியமாகுமா? இவ்வகை மருந்துகளைச் செய்யும் முறைகளைக் குறிப்பிட்ட வியாதிகளைப் பற்றி எழுதும்போது விளக்குவோம்.

கடிதம் 676-ல் பல்லாவரம் நண்பர் நாட்டு வைத்தியத்தின் சிறப்பைப் பற்றி ஒரு அத்தியாயம், அதனால் கிராமாந்தரங்களில் உள்ள மக்களுக்கு ஏற்படக் கூடிய பலன்களை விளக்கி ஒரு அத்தியாயம், இவ்விஷயமாக எழுதி வரும் என்னைப் பற்றி ஒரு அத்தியாயம், அக் கட்டுரைகளைப் பிரசுரிக்கும் கல்கியைப் புகழ்ந்து ஒரு அத்தியாயம், இனி இக்கட்டுரைகள் எவ்விதம் அமைந்தால் இன்னும் நன்றாயிருக்கும் என்று உபதேசபரமாக ஒரு அத்தியாயம்; இன்னும் ஒவ்வொரு கிராமத்துக்கு ஒன்று வீதம், அல்லது குறைந்த பக்ஷம் இரண்டு மூன்று கிராமங்களுக்கு ஒன்று வீதமாகவாவது ஒரு மூலிகைப் பண்ணையை நிறுவுவதுபற்றி ஒரு அத்தியாயம்—இப்படிப் பல உபதேசங்கள்—திட்டங்கள் இவற்றை எழுதியுள்ளார்.

திட்டமிடுவதெல்லாம் நல்லதுதான். அவசியமுந்தான். ஆனால் திட்டமிடுவதோடு, ஆண்டி மடத்துக் கதை போல் நின்று விடுவதைவிட ஏதோ ஓரளவாவது செயலளவுக்குக் கொணர்ந்துள்ளது பெரிதல்லவா? **(தொடரும்)**

பிரிட்டானியா மூலம்

# லண்டன் சென்று




## ரூ.766 மிச்சம் செய்யுங்கள்

விசேஷ ஆப்—ஸீஸன் டூரிஸ்ட் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| மதராஸ் | ஒரு வழி கட்டணம் | ரூ. 1,484/- |
| லண்டன் | போகவர | ரூ. 2,687/- |

**விசேஷ ஆப்-ஸீஸன் டூரிஸ்ட் ஸர்வீஸ்கள்**

ஆம், நீங்கள் இப்பொழுது பம்பாயிலிருந்து லண்டனுக்கு மிகக் குறைந்த கட்டணத்தில் பி.ஓ.ஏ.ஸி. பிரிட்டானியா விமானம் மூலம் பிரயாணம் செய்வதோடு, நீங்கள் விரும்பும் எந்த இடத்திலும் இறங்கிக்கொள்ளலாம்.

முக்கியமான ஐரோப்பிய நகரங்களுக்கும்கூட ஆப்—ஸீஸன் டூரிஸ்ட் ஸர்வீஸ்களை பி.ஓ.ஏ.ஸி. அளிக்கிறது.

இப்பொழுதே பி.ஓ.ஏ.ஸி. விமானத்தில் பறந்து செல்லும் அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள் !

விபரங்களுக்கும், ஸீட் ரிஸெர்வ் செய்வதற்கும், பி. ஓ. ஏ. ஸி. நியமித்துள்ள உள்ளூர் ஏஜெண்டையோ, அல்லது பி. ஓ. ஏ. ஸி. 35/4, மௌண்ட் ரோடு, மதராஸ்-2, போன்: 85394 அவர்களையோ கண்டு விசாரியுங்கள்.



விமானப் பிரயாணத்தில் உலகிலே தலைசிறந்தது

# B·O·A·C

பி.ஓ.ஏ.ஸி. உங்கள் நலனைக் கருதுகிறது

பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பரேஷன்

சாயங்காலம். பொழுது சாயும் வேளை. கூலியாளின் தலையில் சாமான்களை ஏற்றிக் கொண்டு ராதாகிருஷ்ணன் தம் வீட்டுக்கு வந்தபோது அவருடைய கால்களின் நடைவேகத்திலிருந்தும், முக பாவத்திலிருந்தும் குந்தி, 'அங்கும் போன காரியம் நிறைவேறவில்லை' என்று அறிந்து கொண்டாள். கூலியாளின் தலையிலிருந்து சாமான்களை இறக்கி விட்டு அருகிலிருந்த ஸ்பிரிங்குகள் தளர்ந்து விரிந்திருந்த சாய்வு நாற்காலியில் வந்து விழுந்தார். அப்படி அவர் விழுந்த போது, ஸ்பிரிங்குகள் ஒன்றோடொன்று மோதியதனால் ஏற்பட்ட 'சன் சன்' சத்தம் கேட்டு பக்கத்திலே இருந்த நாய் காதை நீட்டி இங்குமங்கும் பார்த்து, 'லொள், லொள்' என்றுகுரைத்தது. இதேசமயம்குந்தி அறையினுள் பிரவேசித்தாள். போன காரியம் காயா, பழமா என்பதைப் பற்றி ஒன்றும் கேட்காமல் வினயத்துடன், "வாருங்கள், கைகால் கழுவிக் கொள்ளுங்கள். தேநீர் தயாராக இருக்கிறது!" என்றாள்.

கௌரி குற்றவாளிபோல, தாய் தந்தையரின் பார்வையிலிருந்து மறைந்து, தந்தைக்கு டீ தயாரித்துக்கொண்டிருந்தாள். தன் தந்தையின் கஷ்டங்களுக்குத் தானே மூலகாரணம் என்பதை நினைக்க அவளுக்குக் கண்ணீர் பெருகியது. 'என் திருமணத்துக்காக இவ்வளவு கவலைப்பட வேண்டுமா?' என்று வாய்திறந்து எப்படி அவள் கூற முடியும்? எப்போது அவளுக்கே தன் திருமணத்தைப் பற்றிச் சிறிதும் சிந்தனை இல்லையோ, அப்போது அவள் தாய் தந்தையர் மட்டும் ஏன் இவ்வளவு சிந்திக்க வேண்டும்? கௌரிக்கு இதுதான் புரியவில்லை.

பெற்றோர்களுக்குப் பெரிய பாரமாகப் பிறந்து விட்ட தன்னைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் கௌரியின் தேகம் நடுங்கும். பூமிபிளந்து தன்னை விழுங்கி விடாதா என்று அவளுக்குத் தோன்றும்.

ராதாகிருஷ்ணன் தம் ஒரே புத்திரியான கௌரியை ஒரு நல்ல இடத்தில் மணம் செய்து கொடுக்க விரும்பினார்.

நல்ல வரனுக்குக் கொடுக்க வேண்டிய அளவு பணம் அவரிடமில்லை. இதனால்தான், கௌரிக்குப் பத்தொன்பதாம் வயது நடந்து கொண்டிருந்த போதிலும், விவாகம் நடக்காமல் இருந்தது.

கௌரி ஒரே பெண்ணானதால் சிறு வயதிலிருந்தே செல்வமாக வளர்க்கப்பட்டாள். அவளுடைய உசித, அநுசிதமான எல்லா ஆசைகளும் அநேகமாக நிறைவேற்றப்பட்டு வந்தன. இதனால் நிர்பயம், திடமனம், பிடிவாத குணம் ஆகியவை யெல்லாம் கௌரியிடம் இயற்கையாகவே இருந்தன. ஒரு விஷயத்தை அவள் நிர ஆலோசித்துச் சொல்லி விட்டாளானால் பிறகு அவளை யாரும் தடுக்க முடியாது. தந்தையின் கஷ்டங்களைக் கண்டு அவள் அநேக தடவைகள் வருந்தியிருக்கிறாள். 'அப்பாவிடம் கேட்டுவிட்டால் என்ன? கடையில் அவர் ஏன் என் திருமணத்துக்காக இவ்வளவு கவலைப்படுகிறார்? நானே என் திருமணம் அவசியம் என்று நினைக்கவில்லையே?' என்று நினைத்தாள். ஆனால் தன்னுடைய இந்தத் தீர்மானத்தை அப்பாவிடம் சொல்ல அவளுக்குத் தைரியமில்லை. அவள் பொருட்டு அப்பா படும் வேதனையை அவளால் தாங்க முடியவில்லை. தனக்கு மணம் வேண்டாம் என்று மனம் விட்டுச் சொல்லவும் முடியவில்லை. அந்தத் தீர்மானத்தைத் தந்தையிடம் சொல்ல வேண்டும் என்று பல தடவைகள் துடித்திருக்கிறாள்.

தந்தை வருவதைப் பார்த்து, கௌரி மெல்ல இன்னொரு அறைக்குச் சென்று விட்



வாத்தியார் :—கிருஷ்ணன்! நீ ஒருத்தன் இந்தக் கணக்குகளிலே இத்தனை தப்பு போட்டிருக்கயே! எனக்கு ஆச்சரியமாயிருக்கு!
பையன் :—ஸார்! நான் ஒருத்தன் மட்டுமில்லை; எங்க அப்பாவும் சேர்ந்து தான்......!



டான். ராதாகிருஷ்ணன் அரை மனத்தோடு முகம், கைகால் கழுவிக் கொண்டு, பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தார். குந்தி ஒரு தட்டில், உப்புப் பூரிகளும், தேநீரும் கொண்டு வந்து ஒரு மேஜையின் மேல் வைத்தாள். பூரிகளை அவர் ஏறிட்டுப் பார்க்கவில்லை. தேநீர்க் கோப்பையை மட்டும் எடுத்துப் பருகலானார்.

குந்தி, "எங்கேயோ போய் வந்தீர்களே, அங்கேயும் ஒன்றும் சரியாக வில்லையா?" என்று கேட்டாள்.

"சரியாக ஆவதற்கு அங்கு என்ன வைத்திருக்கிறது?" தேநீரின் ஒரு விழுங்கைத் தொண்டைக்குள் இறக்கி விட்டு ராதாகிருஷ்ணன் சொன்னார்: "நாம் சம்மதம் தெரிவித்தால் கல்யாணம் முடிந்தமாதிரிதான்."

"பையனைப் பார்த்தீர்களா?"

"உம், பார்த்தேன், நன்றாகப் பார்த்தேன். வயது முப்பதுக்கு மேலிருக்கும். இரண்டு குழந்தைகள் இருக்கின்றன. அந்தக் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளவே அவர் மணம் செய்துகொள்ள விரும்புகிறார். அவருக்கு இரண்டாம் கல்யாணம். அவருடைய ஆசைகள், உற்சாகம் எல்லாம் குளிர்ந்து விட்டன. தம் குழந்தைகளுக்குத் தாயி ஒருத்தி வேண்டுகிறார் அவர். ஆனால் என் பெண்ணுக்கு இது இரண்டாம் கல்யாணமில்லையே!"

"யார் இரண்டாம்தரம் கல்யாணம் செய்து கொள்கிறார்களோ அவர்களெல்லாம் குழந்தைகளைச் சாக்கிட்டுத்தான் செய்து கொள்கிறார்கள். தங்களுக்காகச் செய்து கொள்கிறார்களா, என்ன?" என்றாள் குந்தி.

"அட, அதெல்லாமில்லை. மனிதர் கபடமுடையவர் இல்லை. அவரிடம் உள்ளொன்று புறமொன்று இல்லை. அவர் இதயம் கண்ணாடி போல் நிர்மலமானது. ஆனால் அவரது கதர்ச் சட்டை, காந்திக் குல்லாய், கிழிந்து அறுந்த செருப்புக்களைப் பார்த்தால் மனம் சங்கோசப் படுகிறது. அவர் எங்கேயாவது தலைவராக இருந்து பிரசங்கம் செய்யத்தான் லாயக்கே தவிர, ஒரு வீட்டுக்கு மாப்பிள்ளையாகத் தகுந்தவரில்லை. அதோடு அவருக்குச் சம்பளம் எழுபது ரூபாய்தான். காங்கிரஸ் ஆபீஸில் காரியதரிசி வேலை பார்க்கிறார். மூன்று தடவைகள் அவர் ஜெயிலுக்குப் போயிருக்கிறார். என்றைக்குத் திரும்பவும் போவாரோ, தெரியாது" என்றார் ராதாகிருஷ்ணன்.

"நீங்கள் அவரிடம் என்னசொன்னீர்கள்?"

"என்ன சொல்லுவேன்? அவரை நம் வீட்டுக்கு வரச்சொல்லி யிருக்கிறேன்."

கௌரி, கதவிடுக்கி லிருந்து எல்லாம் கேட்டுக் கொண்டுதா னிருந்தாள். அவள் தந்தையும் தாயாரும் அலட்சியமாகப் பேசிக் கொண்ட அம் மனிதரிடம் அவளை யறியாமலேயே சிரத்தை தோன்றியது. அன்றிரவு ராதாகிருஷ்ணன் தம் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் கௌரிக்கு வேறு நல்ல வரன் தேடும்படியாகக் கடிதங்கள் எழுதினார்.

அடுத்த ஞாயிற்றுக்கிழமை.

குறித்த நேரத்தில் சீதாராம் தம் இரு குழந்தைகளுடன் வந்தார். குழந்தைகளும் கதர்ச் சட்டை, பைஜாமா அணிந்திருந்தனர். செருப்புமில்லை, பூட்ஸுமில்லை. குழந்தைகள் இருவரும் சந்தோஷத்துடன் மலர்ந்த முகத்துடன் இருந்தனர். வந்ததும் வீட்டில் வெகு நாட்கள் பழகியவர்போல் விளையாட ஆரம்பித்து விட்டனர். குந்தி ஒரு பக்கம் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு, குழந்தைகளின் கோலாகலத்தால் நிறைந்த வீடு நந்தவனம்போல் தோன்றியது.

'எவ்வளவு நல்ல குழந்தைகள்! நம்மிடம் ஒரு சம்பந்தமும் வைத்துக் கொள்ளாமலே, சீதாராம் இக் குழந்தைகளைப் பராமரிக்கும் பொறுப்பை நம்மிடம் கொடுத்தால் சந்தோஷமாக ஏற்றுக் கொள்ளலாமே!' என்று நினைத்தாள். குழந்தைகளின் விளையாட்டில் மிகவும் ஈடுபட்டுவிட்டதால் அவளுக்குச் சீதாராம் உட்கார்ந்திருப்பதோ, அவருடன் பேச வேண்டுமென்பதோ மறந்தே போய்விட்டன. இதே சமயம், சிறிய குழந்தை ஏதோ நினைவுக்கு வந்ததுபோல், தந்தையிடம் ஓடி வந்து "அப்பா, நீ சொல்லிக் கொண்டிருந்தாயே, அம்மாவைக் காட்ட அழைச்சிண்டு போகிறேன்னு. அம்மா எங்கே சொல்லு" என்றது.

சீதாராம் சிறிது சிரித்துக் கொண்டே, "இதோ உட்கார்ந்திருக்கிறார்களே, இவர்களிடம் கேள், உனக்குக் காட்டுவார்கள்!" என்றார். குந்தியைப் பார்த்ததும் பாலகன் "ஊஹும், நீயே காட்டு" என்றான். அப்போது ஒரு பெரிய வெள்ளைப் பூனை தாழ்வாரத்தின் வழியாய் உள்ளேஓடியது. குழந்தைகள் எல்லாவற்றையும் மறந்துவிட்டு, பூனையின் பின்னால் ஓடிப்போனார்கள். அங்கு, கௌரி ஏதோ கவனமாக நின்று கொண்டிருந்தாள். சிறியவன், அவள் தலைப்பைப் பிடித்து இழுத்து, "நீதான் எங்கம்மாவா?" என்றான். கௌரி கொழுகொழு வென்றிருந்த அழகான, கபடமில்லாத நிச்சலமான அந்தக் குழந்தையைப் பார்த்தாள். குழந்தையை மடியிலெடுத்து வைத்துக்கொண்டு, "ஆமாம்!" என்று கூறினாள்.

குழந்தை மறுபடியும் கேட்டான்: "எங்க வீட்டுக்கு வருவாயோல்லியோ? அப்பா உன்னை அழைச்சிகிட்டுப் போக வந்திருக்கிறார், நாங்களும் வந்திருக்கிறோம்."

கௌரியால் இதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. அவள் "மிட்டாய் சாப்பிடுகிறாயா?" என்றதும் இருவரும் ஒரே குரலில் "உம், சாப்பிடுகிறோம்" என்றார்கள்.

சிறிது நேரங் கழித்துக் குந்தி உள்ளே வந்தபோது சிறியவன் கௌரியின் மடியிலும், பெரியவன் பக்கத்திலும் அமர்ந்து மிட்டாய் சாப்பிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். ஒரு பெருமூச்சுடன் வெளியே சென்று விட்டாள். சற்று நேரம் சென்று கௌரி தலை

நிமிர்ந்தபோது தாயார், தந்தை இருவரும் எதிரில் நிற்பதைப் பார்த்தாள். தந்தை அன்புடன் பெண்ணிடம் சொன்னார்: ''அம்மா, கொஞ்சம் வருகிறாயா?''

கௌரி பதில் சொல்லவில்லை. அவள் குழந்தைகளின் வாயைக் கழுவித் துடைத்தாள். பின் அம்மாவின் பின்னால் வெளியேசென்றாள். குழந்தைகள் இப்போதும் அவளைச் சுற்றியிருந்தனர். அவர்கள் கௌரியை விட்டுப்போக விரும்பவில்லை. சிறிது நேரம் அவர்களைத் தம் பக்கத்தில் மிகப் பிரயாசைப்பட்டுச் சீதாராம் அழைத்து வைத்துக் கொண்டார். சமயம் பார்த்து அவர்கள் கௌரியிடம் நழுவி வந்து, அவளிடம் அப்பாவைப் பற்றிப்பேச ஆரம்பித்தனர். தந்தையைப்பற்றி அவர் முன்னால் கேட்க முடியாத விஷயங்கள் இருந்தன.

''அப்பா எங்களுக்கு ஒரு நாளும் பொம்மை வாங்கித் தரமாட்டார்'' என்றான் சிறியவன்.

பெரியவன், ''மிட்டாய்கூட வாங்கித் தருவதில்லை'' என்றான்.

''எங்களை விட்டுவிட்டு ஆபீசுக்குப் போய் விடுகிறார். நாள் முழுவதும் வருவதில்லை. அப்பா நல்லவரில்லை'' என்றான் சின்னவன்.

பெரியவன் ''அம்மா, நீயும் வா, இல்லாவிட்டால் நாங்களும் இங்கேயே இருந்து விடுகிறோம்'' என்று நெடுநாள் பழகியவன் மாதிரி அழைத்தான்.

குழந்தைகள் பேச்சு அனைவருக்கும் சிரிப்பை உண்டாக்கியது. சுந்தி ''நீங்கள் இரண்டு பேரும் இங்கேயே இருந்து விடுங்கள், அப்பாவைப் போகச் சொல்லி விடுங்கள். சரிதானே?'' என்றாள்.



சீதாராம், ''நான் போகிறேன். நேரமாகி விட்டது. இல்லாவிட்டால் ரயில் கிடைக்காது'' என்று கூறி எழுந்தார். ''மிஸ்டர் ராதாகிருஷ்ணன்! உங்களைச் சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். பெண் சாட்சாத் லட்சுமிதான். ஆனால் உண்மை இதுதான். குழந்தைகளுக்குத் தாயார் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு எனக்கு மனைவி அவசியமில்லை. இன்றைக்கு வெளியிலிருந்தால் நாளைக்குச் சிறையில் இருப்பவன் நான். எனக்குப்பின் இவர்களைக் கவனித்துக் கொள்வார் யாருமில்லை. அதனால்தான் கல்யாணம் செய்து கொள்ளத் தயாரானேன். இல்லாவிட்டால் இந்த வயதில் எனக்குத் திருமணம் எதற்கு?'' என்று கூறிச் சிரித்தார்.

கௌரி மனத்தாலேயே அந்த மகாபுருஷனை நமஸ்கரித்துக் குழந்தைகளைப் பாசத்துடன் பார்த்தாள். அந்தப் பார்வை 'ஒரு நவநாகரிக, ஆடம்பர யுவனின் மனைவியாவதைவிட இந்தக் கபடமற்ற குழந்தைகளின் தாயாராவதை மிகவும் விரும்புகிறேன்' என்று பறைசாற்றிச் சொல்வது போலிருந்தது.

சீதாராம் போவதையறிந்த குழந்தைகள் கௌரியின் கால்களைக் கட்டிக் கொண்டு விட்டார்கள். ராதாகிருஷ்ணன் ஒரு வேளை வாய் உபசாரமாகவாவது 'குழந்தைகளை விட்டு விட்டுப் போங்கள்' என்று சொல்லி இருந்தால் சீதாராம் குழந்தைகளை விட்டு விட்டு நிச்சிந்தையாய்ப் போயிருப்பார். ஆனால், அந்தப் பக்கத்திலிருந்து அம்மாதிரி ஒன்றும் வராததால் சீதாராம் குழந்தைகளுக்கு, சினிமா, சர்க்கஸ், மிட்டாய் ஆசை காட்டி மிகப் பிரயாசையுடன் அழைத்துச் சென்றார். போகும்போது சீதாராமுக்கு 'நிச்சயம் கல்யாணமாகி விடும், தேதி குறிப்பிடுவதுதான் பாக்கி' என்ற அளவுக்குப் பூர்ண நம்பிக்கை இருந்தது.

★

சீதாராம் கல்யாணத் தேதி குறிப்பிட்டு வரும் கடிதத்தை எதிர்நோக்கியிருந்தார். தேசத்தின் நிலைமை, அரசாங்கத்தின் நோக்கம் மகாத்மாவின் பிரசங்கங்கள் முதலியவற்றைப் படித்ததிலிருந்து அவர் கூடிய சீக்கிரம் சத்தியாக்கிரக இயக்கம் நடைபெறும் என்று அறிந்தார். என்றைக்கு அவர் 'சிறை விருந்தாளி' ஆகவேண்டி வருமோ, தெரியாது. போன தடவை அவர் சிறைக்குப் போனபோது அத்தைக் கிழவி இருந்தாள். இப்போது அவளுமில்லை. வேலைக்காரி எங்கே இவர்களைக் கவனித்துக்கொள்ளப் போகிறாள்?

குழந்தைகளைப் பற்றிய சிந்தனை அவரைப் பெரிதும் ஆட்கொண்டிருந்தது. குழந்தைகளும் சதா 'அம்மா, அம்மா' என்று நச்சரித்தார்கள். அவர், மறுபடியும் ராதாகிருஷ்ணனுக்குச் சீக்கிரம் திருமணத்துக்குத் தேதி குறிப்பிட்டு எழுதும்படி எழுதினார். அங்கு ராதாகிருஷ்ணன் வேறு வரன் நிச்சயிப்பதில் ஈடுபட்டிருந்தார். அவர், ''கௌரியின் அம்மா பழைய நாளையப் பெண்மணி. ஜாதகம் பொருந்தினால் தான் திருமணத்துக்கு ஒப்புக் கொள்ளுவாள். அதனால் உங்கள் ஜாதகம் அனுப்புங்கள்'' என்று பதில் எழுதினார். கடிதத்தைப் படித்தவுடனேயே, திருமணம் செய்யாததற்கு இது ஒரு பாசாங்கே தவிர வேறொன்றுமில்லை என்று அறிந்து கொண்டபோதிலும் தம் ஜாதகத்தை அனுப்பி வைத்தார் சீதாராம். சில நாட்களுக்குப் பின், 'ஜாதகம் பொருந்தவில்லையாதலால் திருமணம் செய்ய இயலாது. மன்னித்துக் கொள்ளவும்' என்று பதில் வந்து விட்டது.

ராதாகிருஷ்ணனுக்கு அவர் நினைத்த அளவில் கௌரிக்கு ஏற்ற வரன் கிடைத்து விட்டான். பையன் அதிகப் பணக்காரனில்லை. ஆனால் டெபுடி தாசில்தார் பதவியில் இருந்தான். மேன்மேலும் முன்னேற வழியிருந்

தது. பி. ஏ. தேறியிருந்தான். பார்ப்பதற்கு அவ்வளவாக அழகு என்று சொல்லமுடியாது. ஆண்பிள்ளைகளுக்கு அழகு பார்ப்பார்களா? பார்க்கிறது வழக்கமுண்டா? வயதும் அதிகமில்லை. இருபத்தைந்து தானிருக்கும். கொடுக்கல், வாங்கல் சச்சரவும் அங்கில்லை. முதல் கல்யாணம். அம்மா, அப்பா, சகோதரன், சகோதரி என்று நிறைந்த குடும்பம். ராதா கிருஷ்ணன் இதற்குமேல் ஆசைப்படவுமில்லை. கடவுளுக்குக் கோடி தரம் இவ்வளவு நல்ல வரன் கிடைத்ததற்காக நன்றி செலுத்தினர்.

திருமணம் ஆனி மாதம் நடப்பதாக நிச்சயிக்கப்பட்டது. கல்யாண ஏற்பாடுகள் நடைபெற்றன. ராதாகிருஷ்ணனுக்குக் கௌரி ஒரு பெண் தானே? அவர் மிக்க ஆசையுடன் நகை, துணிமணிகளைப் பொறுக்கி வாங்குவதில் ஈடுபட்டிருந்தார். நாள் கழித்துத் திருமண மாளுலென்ன, எவ்வளவு நல்ல வரன் தேடிப் பிடித்திருக்கிறார். குந்தியும் சந்தோஷமாக இருந்தாள். அவள் கண் முன்னால், மாப்பிள்ளை பெரிய தாசில்தாராகி, பெண்ணும் மாப்பிள்ளையும் குழந்தைகளுடன் தன்னைப் பார்க்க வந்திருக்கும் காட்சி தோன்ற ஆரம்பித்தது.

ஆனால், கௌரியின் மனத்தில் என்ன போராட்டம் நடந்து கொண்டிருந்தது என்று யார் கேட்கிறார்கள்? இருந்தாற்போலிருந்து அவளுக்கு அந்தக் குழந்தைகளின் கபடமற்ற முகம், இனிமையான பேச்சு, சீதாராமின் வினயம் மிகுந்த எளிமையான தோற்றம் நினைவுக்கு வரும். உடனே கௌரியின் தலை சிரத்தையுடன் தானாகவே வணங்கும். தேச பக்தர்களை, தியாக வீரர்களை அவள் பெரிதும் மதித்தாள். சீதாராமும் தேசத்துக்காகத் தம் வாழ்வைத் தியாகம் செய்திருக்கிறார். இல்லாவிட்டால் பட்டதாரியான அவர் முயன்றிருந்தால் அவருக்கும் டெபுடி தாசில்தார் வேலை கிடைத்திருக்காதா? இல்லை, வேறு பெரிய வேலைதான் கிடைத்திருக்காதா? ஆனால் சீதாராம் சர்க்காரின் அடிமையாக விரும்பினால்தானே!

திருமண நாள் நெருங்க நெருங்கக் கௌரியின் சிந்தனை அதிகரித்தது. திருமணத் தேதிக்குப் பதினைந்து நாட்கள் முன்னதாக ஒரு நாள் திடீரென்று டெபுடி தாசில்தாரின் தந்தை இறந்து விட்டதாகத் தந்தி வந்தது. இந்த மரணத்தினால் திருமணம் ஒரு வருஷத்துக்கு ஒத்தி வைக்கப்பட்டது. கௌரியின் தாய் தந்தையர் மிகவும் வருத்தப்பட்டார்கள். ஆனால் கௌரியின் தலையிலிருந்து பெரிய பாரத்தை இறக்கி வைத்தாற் போலிருந்தது.

*

இதனிடையே சத்தியாக்கிரக இயக்கம் தேசம் முழுவதும் தீவிரமாகப் பரவிவிட்டது. ஒவ்வொரு நகரத்திலும் சத்தியாக்கிரகிகளின் எண்ணிக்கை பெருகியது. அக் குழந்தைகளைப் பற்றிக் கௌரிக்கு அதிகக் கவலை உண்டாயிற்று. சத்தியாக்கிரகப் போர் ஆரம்பித்ததிலிருந்தே, சீதாராம் என்றைக்குக் கைதாகிவிடுவாரோ என்று கவலை ஏற்பட்டது. சட்டமறுப்பு இயக்கம் காரணமாக, சீதாராம் ஒரு வருடம் கடுங்காவல் தண்டனை அடைந்த விவரத்தைப் பத்திரிகையில் கௌரி படித்தாள். கணநேரம் ஸ்தம்பித்து நின்று விட்டாள். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டு உலாவினுள். சிறிது நேரத்தில் கௌரி தன் கடமையை நிச்சயித்துக் கொண்டு விட்டாள். அம்மாவிடம் வந்தாள். "அம்மா, நான் கான்பூர் போகிறேன்."

"கான்பூரில் என்ன?" குந்தி ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"அங்கு குழந்தைகள் இருக்கின்றன" என்றாள் கௌரி. அம்மா அதே குரலில் "என்ன, குழந்தைகளா? பைத்தியம் மாதிரி என்ன பேசுகிறாய்?" என்றாள்.

"இல்லை, அம்மா. நான் பைத்தியமில்லை! நீயும் குழந்தைகளை அறிவாய். அவர்கள் அப்பா அரசியல் போராட்டம் காரணமாக, ஒரு வருடத் தண்டனை அடைந்திருக்கிறார். குழந்தைகள் சிறியவர்கள். நான் கான்பூர் போகிறேன். நான் போகத்தான் வேண்டும்!"

கௌரியின் சுபாவத்தைக் குந்தி நன்றாக அறிந்திருந்தாள். கௌரி பிடித்தால் விடமாட்டாள் என்று தெரியும். அதனால் அவள் கௌரியை எதிர்க்க முடியவில்லை. "உன் அப்பா வெளியேபோயிருக்கிறார். வரட்டுமே" என்றாள். கௌரி திடமாகச் சொன்னாள். "அப்பா வரும் வரையில் நான் தங்க முடியாது, அம்மா. என்னைப் போக விடு. வழியில் எனக்கு ஒரு கஷ்டமும் இருக்காது."

அன்று மாலையே ஒரு வேலைக்காரனுடன் கௌரி கான்பூர் சென்று விட்டாள்.

ஒரு வருடத்துக்குப் பின்.

தன் தண்டனை முடிந்து சீதாராம் வீடு திரும்பினார். இந்த ஒரு வருடத்தில் ஒருமுறை கூட அவர் தம் குழந்தைகளைப் பார்க்கவில்லை. நியமப்படி மாதமொரு முறை அவர்கள் சௌக்கிய சமாசாரம் கிடைத்து விடும். ஆனால், குழந்தைகளைப் பற்றிய சிந்தனை தொடர்ந்து இருந்து வந்தது. வேலைக்காரியை நம்பிக் குழந்தைகளை விட்டு வந்திருந்தார். வேலைக்காரிக்கும் குழந்தைகள் இருந்தன. அவள் எந்த அளவில் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ள முடியும் என்று அவருக்குத் தெரியும். இருந்தாலும் அவர் ஒன்றும் செய்ய முடியவில்லை.

விடியற்காலை ஐந்து மணிக்கே அவர் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார். ஒரு குதிரை வண்டியில் வீட்டுக்கு வந்தார். வழியில் சூடாக ஜிலேபிகள் வாங்கிக் கொண்டார். வீட்டு வாசலுக்கு வந்து விட்டார். கதவு திறந்திருந்தது. ஆனால், வீட்டுக்குள் கால் வைக்கும்போது, குழந்தைகள் என்ன ஆனார்களோ என்று இதயம் துடிதுடித்தது. தயங்கியவாறே வீட்டினுள் நுழைந்தார்.

ஆனால், என்ன இது! தாழ்வாரத்தில் நுழைந்தவுடனேயே ஸ்தம்பித்து நின்றார். கொஞ்சம் முன்னால் சென்று "நீங்களா!" என்றார். கௌரி குனிந்து வணங்கி அவர் பாதத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

**[ஸ்ரீமதி சுபத்ரா குமாரி சௌஹானின் ஹிந்திக் கதை]**



உலகப்
பிரசித்திபெற்ற
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக் குணமளிக்கும்

**பெப்ஸ்** வில்லைகளை உட்கொண்டதால், பிராங்கைடிஸ் விரைவில் அகன்றது

தொண்டைப்புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் முதலியவை பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு உபாதைகளுக்குக் குணமளிக்கும் வில்லைகளை உட்கொண்ட உடனேயே அகலுகின்றன. பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கொல்லவும், வலியைக் குறைக்கவும் செய்யும். அதன் குணமளிக்கும் ஆவியை அனுபவியுங்கள்.




## பெப்ஸ்

தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணம் அளிக்கும்
வில்லைகள்

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.

FPY-56-TAM

சோல் ஏஜண்டுகள்: **தாதா அண்டு கம்பெனி**
86, நைனியப்ப நாயக் தெரு, சென்னை-3

## புளோரோஸோன் கருமையான சரீரத்தை வெண்மையாக்குகிறது



புளோரோஸோன் உங்கள் சருமத்தை இதேபோல் வெண்மையாக்கி, முகப் பருக்கள் முதலிய சருமக் கோளாறுகளை அறவே போக்கி, மேனிக்கு மலர்போன்ற மென்மையையும், நீடித்த அழகையும் அளிக்கும்.

**புளோரோஸோன் லோஷன் ஒரு பாட்டில் விலை ரூ. 4.25. சக்தி மிகுந்த புளோரோஸோன் கிரீம் ஒரு ஜாடி விலை ரூ. 5.60. வி. பி. சார்ஜ் தனி**

கெமிஸ்டுகளிடமும் ஹைஜீனிக் ரிசர்ச் இன்ஸ்டிடியூட், த. பெ. 1192 பம்பாய்-1 விலாசத்திலும் பெறலாம்

*Florozone*
MIRACLE BEAUTY BLEACH

***Distributors for Madras:***
**R. L. GOWDER & Co., 59, Bunder St., Madras**




பலவித ரகங்களிலும் கவர்ச்சியான
தோற்றத்திலும் எங்கும் கிடைக்கும்

Sole Distributors:
**PENMEN'S INDUSTRIAL SERVICES**
Kandivli, Bombay (S. D.)

# இதோ ஓர் நல்ல ஆரோக்கியமான குடும்பம்!




உங்கள் குடும்பத்தினருக்கு நல்ல ஆரோக்கியமிருந்தால், அவர்கள் இயற்கையின் மிக அருமையானதொரு வரப்பிரசாதம் பெற்றவர்களாவார்கள். இந்த நல்ல ஆரோக்கியத்தைக் காப்பாற்ற உங்கள் குடும்பத்தினரின் பானமாக 'ஓவல்டின்'னை தவறாமல் வழங்கிவரவும். இது சுத்தமான, ஊட்டமளிக்கும் உணவுப் பொருள்களினால் தயாரிக்கப் பெற்று, அதிகப்படி வைட்டமின்களும் சேர்த்த ஓர் இனிமையான பானம்.

சாப்பாட்டு வேளைகளில் 'ஓவல்டின்' சாப்பிடுவதால் இதர ஆகாரங்களை ஜீரணிக்க உதவுகிறது. இரவு படுக்குமுன் சாப்பிடுவதால் அயர்ந்த, புத்துணர்ச்சியளிக்கும் நித்திரைக்குத் தேவையான சூழ்நிலையை விருத்தி செய்கிறது. உங்கள் குடும்பத்திற்கு 'ஓவல்டின்'னையே தேருங்கள்.

பிரதியொரு டின்னும் ஆரோக்கிய மயமான

## ஓவல்டின்

விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.



IV.498



# கான்ஸ்டபிள் கந்தசாமி

## பதினேழாம் அத்தியாயம்

## புலவரின் யோசனை

'போலீஸ்' என்றதும் முத்துப் புலவருக்குப் பகீரென்றது.

'' நல்லாத் தேடிப் பார் கண்ணம்மா! எல்லாம் அங்கேதான் இருக்கும். ஒரு கட்டுக்கூடவா இல்லாமற் போகும்?'' என்று மீண்டும் சந்தேகத்தோடு கேட்டார் அவர்.

''எல்லாம் வெறும் காகிதக் கட்டாக அல்லவா இருக்குது!'' என்று பிரலாபித்தாள் அவள்.

அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது!

'' காகிதக்கட்டா! நோட்டுக் கட்டு இல்லையா?'' என்று அதிர்ச்சியோடு வினவினார் புலவர். சாதாரண சமயமானால் கண்ணம்மாள் தன் புருஷனிடம் கெஞ்சவே மாட்டாள். ஆனால் நிலைமை அவளைச் சதி செய்து விட்டது.

'' கேள்வி கேட்டுக்கிட்டுச் சும்மா நிற்காதிங்க, ஓடுங்க.''

''ஒருகால் உன்னிடம் பணத்தைக் கொடுத்தவர்கள் முதலிலேயே காகிதக் கட்டைத்தான் கொடுத்து ஏமாற்றி விட்டார்களோ என்னவோ! ஆண் பிள்ளைத் துணையில்லாமல் செய்யும் காரியமெல்லாம் இப்படித்தான்! இவ்வளவு பணம் ஏது என்று இதுவரையில் என்னிடம் ஒரு வார்த்தை சொன்னாயா?'' என்று சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவளைக் குத்திக் காட்டினார் முத்துப் புலவர்.

'' ஐயோ! உங்களுக்குப்புண்ணியமாப் போகுது. சீக்கிரம் போலீஸைக் கூட்டி வாங்க. நேத்துக் கூட எடுத்துப் பார்த்தேன். நோட்டுக் கட்டெல்லாம் சரியாக இருந்தது...!''

'போலீஸைக் கூப்பிட்டு வந்தால் அனர்த்தம் நேர்ந்து விடும். தமது அறையைச்



சோதனை போடுவார்கள். நம்மைப் பின்னிப் பின்னிக் கேள்விகள் கேட்பார்கள். என்ன தொல்லையில் முடியுமோ!..' என்று விழித்தார் புலவர்.

''போலீஸ் எதுக்குக் கண்ணம்மா! நாமே யோசனை பண்ணி நடந்ததைக் கண்டுபிடிக்கலாம்.''

கண்ணம்மாளுக்கு எரிச்சல் தாங்கவில்லை. ''சுத்தத் தொடை நடுங்கி ஆசாமி!'' என்று அவள் சீறியதும் புலவருடைய பயம் அதிகரித்தது. இதே சமயம் அவரது மூளையில் ஒரு அற்புதமான யோசனை உதித்தது!

''யாரைப் பயங்காளி என்று சொல்லுகிறாய்! சட்டையை மாட்டிக்கிட்டு இதோ போய்க் கூட்டி வருகிறேன் பார்! பெண் பிள்ளைகளா போலீஸுக்குப் போவாங்க!'' என்று கூறிவிட்டு அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு மெதுவாக ராத்திரி வைத்த இரண்டு கட்டுகளையும் எடுத்துப் பார்த்தார். அவரது உள்ளம் துணுக்குற்றது! இரண்டும் வெறும் காகிதக் கட்டுகள். ரூபாய் நோட்டு அளவுக்கு ஒழுங்காக வெட்டிக் கட்டப்பட்டிருந்தன.

''உள்ளே கதவைச் சாத்திப் போட்டுக்கிட்டு என்ன பண்ணறீங்க!'' என்று துரிதப்படுத்தினாள் கண்ணம்மாள்.

''துணி மாத்திக் கட்டிக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறிவிட்டு இரண்டு கட்டுகளையும் மடியில் வைத்து இறுக்கிக் கட்டிக் கொண்டு மேலே சட்டையை மாட்டிக் கொண்டார். கையில் பிரம்புத் தடியுடன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்.

''சும்மா கூச்சல் போடாமே உட்கார்ந்திரு. நான் போய்ப் போலீஸைக் கூட்டிக் கொண்டு வருகிறேன். ஏதோ செலவுக்கு ஒரு இரண்டு ரூபாய் கொடு'' என்று சிறிது அதிகாரத்துடன் கேட்டார் அவர். கண்ணம்மாள் துளிக் கூட ஆட்சேபிக்காமல் இரண்டு ரூபாயை





எடுத்துக்கொடுத்தாள். அவர் புறப்பட்டு விட்டார்.

வீட்டை விட்டுக் கிளம்பியவர் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகாமல் நேராக டைமண்ட் பூங்காவை நோக்கித்தான் நடந்து சென்றார்.

* * *

இரவு அம் மர்ம மனிதனால் தாக்கப்பட்ட கந்தசாமி அப்போது புலவரைப் போய்ப் பார்ப்பது உசிதமல்ல என்று எண்ணினான். அங்கு ஏதோ தவறு நேர்ந்திருக்க வேண்டும் என்று அநுமானித்தான் அவன். கண்ணின் மீது விழுந்த அடி வேறு 'ஜிவ் ஜிவ்' என்று வலித்துக் கண்ணிலிருந்து நீர் பெருகிக் கொண்டிருந்தது. 'நடுநிசியில் அங்கு வந்த மனிதன் யார்? தோட்டத்தில் எதற்காகப் பதுங்கிக் கொண்டிருந்தான்?' என்று பற்பல கேள்விகள் மனத்தைக் குழப்பின. பேசாமல் அவன் வீடு திரும்பி விட்டான்.

மறு தினம் கந்தசாமிக்கு இரவு ''டியூட்டி'' தான். ஆகவே காலையில் குறிப்பிட்ட நேரத்துக்குப் பூங்காவில் காத்துக்கொண்டிருந்தான். கையில் தடியுடன் வேகமாக வந்த முத்துப் புலவர் ''என்ன கந்தசாமி ராத்திரி வரவே இல்லையே?'' என்றுகேட்டார்.

''வந்தேன்! ஆனால்....''

''வந்தாயா?....''

''ஆமாம்! உங்கள் வீட்டண்டை வந்தவுடன் ஒரு பெரிய விஷயம் நடந்து போச்சு!'' என்றான்.

புலவர் ஆச்சரியமடைந்தார். ''பெரிய விஷயமா?.. அதே மாதிரி, வீட்டுக்குள்ளேயும் ஏதோ பிரமாதமாக நடந்து விட்டதாகத் தோன்றுகிறது!'' என்று, இரவு தான் செய்த துணிகரச் செயல்களையும் காலையில்ஏற்பட்ட அனர்த்தத்தையும் விவரமாகக் கூறினார். இரண்டு காகிதக் கட்டுகளையும் வாங்கி ஆராய்ந்து பார்த்து விட்டுச் சுக்கல் சுக்கலாக அவற்றைக் கிழித்துப் போட்டான் கந்தசாமி.

''அந்த அம்மா பீரோவுக்குள்ளே வைச்சிருந்தது உண்மையிலே நோட்டுக் கட்டுதானா அல்லது....''

''சந்தேகமின்றி நோட்டுக் கட்டுகள்தான்! நான் கூட இதே கேள்வியை அவளிடம் கேட்டேன்!''

கந்தசாமி தீவிரமாக யோசித்தான். இரவு அவ் வீட்டருகில் தான் கண்ட மனிதனுக்கும் இந்தக் காகிதக்கட்டுக்கும் முடிச்சுப்போட முயன்றது அவன்மனம்.

விஷயத்தைப் போலீஸில் புகார் செய்தால் வீட்டிலுள்ள ஒவ்வொருவரையும் விசாரிப்பார்கள். அவர்களது மிரட்டலுக்குப் பயந்து புலவர் எதையாவது உளறிக் கொட்டி விடுவார். அவர் எடுத்தது கந்தல் காகிதமானாலும் அவர் தப்பித் தவறி எதையாவது உளறினாரென்றால் அவனையும் சேர்த்துச் சரியாகப் பிடித்து விடும்.

'' இதைப் போலீஸில் 'ரிப்போர்ட்டு' பண்ணினால் உங்களுக்கே ஆபத்தாக முடிந்து விடுமே!''

''அதனால்தான் உன்னிடம் வந்தேன், கந்தசாமி! எனக்கு ஒரு யோசனை தோணுது. நான் வீட்டுக்குப் போய், போலீஸிலே சொல்லி விட்டதாகவும், போலீஸ்காரர்கள் விசாரணைக்கு வருவார்கள் என்றும் சொல்லிவைக்கிறேன். அதற்குள்ளாக நீ உன் உடுப்பை மாட்டிக் கொண்டு வந்து புலன் விசாரணை செய்வது போல் போக்குக் காட்டு. ஒருகால் அதிருஷ்டவசமாக உன்னால் ஏதேனும் கண்டுபிடிக்க முடிந்துவிட்டதென்றால் கண்ணம்மாளுக்கும் உன்மீது அளவற்ற மதிப்பு ஏற்பட்டுவிடும். பிறகு சிங்காரியைப் பற்றிய பிரச்சினையும் தீர்ந்து விடலாம். எது எப்படியானாலும், இப்போது பணம் பறி போய்விட்ட நிலையில் கண்ணம்மாள் சிங்காரியின் கல்யாண விஷயத்தைப் பற்றி மேற்கொண்டு எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவே மாட்டாள் என்பது மட்டும் நிச்சயம்!'' என்றார் முத்துப் புலவர்.

''சபாஷ்! அருமையான யோசனை! நீங்க வீட்டுக்குப் போங்க! இதோ நான் அஞ்சே நிமிஷத்திலே அங்கே வருகிறேன். ஆனால் என்னை முன்பின் தெரிஞ்சதாகவே நீங்க காண்பிச்சுக்கக் கூடாது'' என்றான் கந்தசாமி.

புலவர் தலையை ஆட்டிக் கொண்டே தம் வீட்டை நோக்கி நடக்கலானார்.

## பதினெட்டாம் அத்தியாயம்

# கந்தசாமி தர்பார்

சுமார் ஒன்பது மணிக்குப் புலவரின் வீட்டுக் கூடம் போலீஸ் வீரன் கந்தசாமியின் தர்பார் மண்டபமாகக் காட்சி அளிக்கத் தொடங்கியது.

அட்டகாசமாக வந்த கந்தசாமி முதலில் தோட்டம், வீடு, அறைகள், கூடம் இவற்றின் நீள அகலங்களை நுட்பமாக தோட்டம் பார்த்துத் தனது குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொண்டான். அவன் தோட்டத்துக்கும் உள்ளுக்குமாக நடக்கும்போதெல்லாம் கண்ணம்மாள் அவன் பின்னாலேயே ஓடினாள். அவளது கண்களுக்கு அவன் கலி தீர்க்க வந்த கண்கண்ட தெய்வமாகத் தோன்றினான். சிங்காரியைச் சீக்கிரமாகக் காப்பி போடும்படி ரகசிய உத்தரவு போட்டாள் கண்ணம்மாள்.

சிங்காரியும் மனத்துக்குள் சிரித்துக் கொண்டே அடுக்களைக்கு ஓடினாள்.

வீட்டின் ஒவ்வொரு பாகத்தையும், பீரோ உள்பட அங்குள்ள ஒவ்வொரு பொருளையும் ஆராய்ந்தபிறகு கூடத்திலுள்ள நாற்காலியில் 'உஸ்'ஸென்று ஒரு நீண்ட பெருமூச்சுடன் உட்கார்ந்து கொண்டான் கந்தசாமி.

சிங்காரி கொண்டு வந்த காப்பிப் பாத்திரத்தைக் கண்ணம்மாள் பிடுங்கி அவனிடம் பணிவாக நீட்டிய வண்ணம், ''இந்தாங்க, பாவம் உங்களுக்கு எவ்வளவோ சிரமம்! இதைக் குடிச்சுட்டு மேலே ஆகவேண்டியதைப் பார்க்கலாம்'' என்றாள்.

''சூச் சூச் சூச்சு! இதுக்கு என்ன அவசரம்! இது போல் கேஸிலே இறங்கிவிட்டால் அதைக் கண்டு பிடிக்கிற வரைக்கும் எனக்குச் சாப்பாடு, தூக்கம் ஒன்றிலுமே மனசு செல்லாது! கெடக்கட்டும்...கொண்டாங்க!'' என்று காப்பியை வாங்கிக் குடித்து விட்டுக் கண்ணம்மாளை மடக்கி மடக்கி ஆயிரம் கேள்விகள் கேட்டான் அவன். அவள் பொறுமையோடு சொல்லி வந்த பதில்களை அவன் தனது குறிப்புப் புத்தகத்தில் விடாமல் கிறுக்கிக் கொண்டேயிருந்தான்.

''பீரோவில் எவ்வளவு பணம் இருந்தது?''

''ஏழாயிரத்து ஐந்நூறு.''

''யாருடைய பணம்?''

''என்னுடையதுதானுங்க!''

''உங்களுக்கு எப்படிக் கிடைச்சது?''


Alembic

ஸீலிட்ட டின் சுத்தத்திற்கு உத்தரவாதம்
நியாய விலை அதை
மேலானதாகச் செய்கிறது.




# துஷார்

வனஸ்பதி

விடமின்கள் சேர்க்கப்பட்டது

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ்
லிட்., கர்நூல்

T1-4/57

---

# மக்ளீன்ஸ் பற்களை முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது!

MTY 44 TAM



''அதெல்லாம் எதுக்குங்க!....''

''என் ஏதுன்னு குறுக்கே பேசினால் எனக்குக் கோபம் வரும்! பேசாமல் சொல்லிக்கிட்டே வாங்க!''

''அது வந்து அவருடைய முதல் தாரத்து நகைகளை வித்து....''

''யார் வித்தது?''

''நான்தான்!''

''வித்ததுக்கு யார் சாட்சி?''

''கூட மருதம்மா வந்தாங்க!''

''அது யாரு மருதம்மா?''

''என் சிநேகிதிங்க!''

''வித்தது உங்களுடைய புருஷனுக்குத் தெரியுமா?''

''தெரியும்!''

புலவர் குறுக்கே பாய்ந்தார்:

''எனக்குத் தெரியவே தெரியாது. என்னைக் கேட்காமலேயே வித்து விட்டிருக்கிறாள், ஐயா இவள்!''

மேலும் சில கேள்விகளைக் கேட்ட பிறகு திடீரென்று அவன், ''காலையில் எழுந்திருக்கையில் வீட்டுக் கதவு ஏதேனும் திறந்திருந்ததா?'' என்றான்.

''கொல்லைப் பக்கத்துக் கதவு திறந்து கிடந்தது!'' என்றாள் கண்ணம்மாள்.

''உங்கள் வீட்டுக்கு அன்னிய ஆண் பிள்ளைகள் யாராவது வருவதுண்டா?''

''இல்லைங்க!''

புலவர் சும்மா இருக்கவில்லை. மீண்டும் குறுக்கிட்டார்:

''கண்ணம்மா, அன்றைக்கு அந்த மருதம்மாளுக்குச் சொந்தக்காரன் தங்கவேலு வந்தானே!''

''தங்கவேலுவா! ஓஹோ.........'' என்றான் கந்தசாமி.

அவனது மூளை கிறு கிறு வென்று வேலை செய்யத் தொடங்கியது.

''இல்லைங்க, இரண்டே இரண்டு தடவைதான் வந்தது துங்க அந்தப் புள்ளை!'' என்றாள் கண்ணம்மாள்.

கந்தசாமி அவளை அளவுகடந்த கோபத்துடன் பார்த்தான்.

''இதுக்கு இருபது தடவை வரணுமா? அவன், வீட்டையெல்லாம் நல்லா பார்த்தானல்லவா?''

''அது பார்க்கலேங்க. நானேதான் அழைச்சுக்கிட்டுப் போய்ச் சுத்திக் காண்பிச்சேன்!''

''பீரோவில் பணம் இருப்பது அவனுக்குத் தெரியுமா?''

''அது நல்ல புள்ளைங்க.''

''சரி, நேத்து சாயந்திரம் அவன் இங்கே வந்திருந்தானா?''

''இல்லே!''

முத்துப் பிள்ளைக்குச் சடக்கென்று ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது.

''போலீஸ்கார ஐயா! நேற்று இருட்டுகிற சமயத்தில் அந்த அவரைப் பந்தல் பக்கமாக யாரோ நின்றது போல் எனக்குந் தெரிந்தது.''

கந்தசாமி அதே சமயத்தில், முன் இரவு காம்பவுண்டுச் சுவர் ஓரமாகப் பதுங்கியிருந்து அவன் கண்ணைப் பதம் பார்த்த உருவத்தையும் தங்கவேலுவின் தோற்றத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டான்.

''உங்க பணம் திரும்பி வரணும் என்ற ஆசை இருந்தால் நான் சொல்றபடி செய்யணும்! அப்படி உண்டானால்தான் இந்தக் கேஸிலே நான் முழு மூச்சாக இறங்குவேன்'' என்றான்.

''ஐயோ, நீ என்ன சொன்னாலும் கேட்கிறேன் தம்பி!''

''நான் இங்கே வந்து விசாரணை பண்ணினதாக யாருக்கும் தெரியக் கூடாது. வேறே போலீஸ்காரங்க திரும்பவும் வந்து விசாரித்தால் அவங்ககிட்டகூட மூச்சுவிடக் கூடாது. ஏனென்றால் உங்களுக்காக நான் தனிப்பட்ட முறையிலே வேலை செய்யப் போகிறேன்!''

''சரிதான், தம்பி!''

''ரெண்டாவதாக இந்தத் தங்கவேலு என்கிறவன், பனை மரம் மாதிரி உயரமா, கறுப்பா ரத்தக் கண்ணும் கிருதாக் கிராப்புமா இருப்பானே அவன்தானே?''

''அவனேதான் தம்பி!''

''ஹூம்! அந்தப் பயல் ஒண்ணும் நம்பர் கேடி! அவனை நான் ரொம்ப நாளாகக் குறி வைச்சுக்கிட்டே வரேன், அவனும் தப்பிச்சுக்கிட்டே வரான்!''

''அப்படியா?'' என்று மூக்கின் மேல் விரலை வைத்தாள் கண்ணம்மாள்.

''ஆமாம். போலீஸ் வந்து விசாரித்தால் அவன் மேலேதான் சந்தேகம் என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லணும்! சிறிதும் தயங்கக்கூடாது!''

கண்ணம்மாள் ஆட்சேபிக்க வில்லை. பிறகு தகுந்த எச்சரிக்கைகள் செய்து விட்டு விடை பெற்றுக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான் கந்தசாமி.

போகும்போது ''நீங்க மாத்திரம் என் கூட வாங்க!'' என்று புலவரைக் கூடவே அழைத்துக் கொண்டுபோனான்.

கந்தசாமிக்குத் தங்கவேலுவின்மீது பலத்த சந்தேகம் ஏற்பட்டது. ஒரு ஆசாமியை அனுப்பி ஜாடையாக விசாரிக்கச் செய்ததில் தங்கவேலு வீட்டில் இல்லை யென்றும் எங்கேயோ வெளியூருக்குப் போய் விட்டதாகவும், எந்த ஊருக்குப் போனான், எப்போது திரும்புவான் என்ற விவரங்கள் தெரியாதென்றும் தகவல்கள் கிடைத்தன. அவனது சந்தேகம் ஊர்ஜிதமாகியது. அவனுக்குச் சந்தோஷம் தாங்கக்கூடவில்லை.

'அந்தப் பயல்தான் இதைச் செய்தான் என்பதில் சந்தேகமில்லை. கண்ணம்மாளிடம் பணம் இருக்கும் விஷயத்தைத் தன் அத்தை மருதம்மாள் மூலமாகத் தெரிந்து கொண்டிருப்பான். சிங்காரியை விவாகம் செய்து கொண்டு கண்ணம்மாளை ஏமாற்றிப் பணத்தைப் பிடுங்கி விடலாமென்று முதலில் எண்ணியிருப்பான். புலவரும் சிங்காரியும் காரியத்தைக் கெடுத்து ஆட்சேபணைகளைக் கிளப்பவே விவாகம் நடப்பது சந்தேகமாகி விட்டது. ஆனால் அவனுக்குப் பணத்தை விட்டு வைக்க மனமில்லை. திருடத் துணிந்து விட்டான்!

'வீட்டின் அமைப்பையும் பீரோ வைக்கப்பட்டிருக்கும் இடத்தையும் தெரிந்து கொண்டான். அவ் வீட்டில் அதிக ஜன சந்தடி இல்லாமற் போகவே அவனை யாரும் சரியாகக் கவனிக்கவில்லை. இருட்டின உடனேயே வீட்டுக்குள் நுழைந்து யார் கண்ணிலும் படாமல் ஒளிந்து கொண்டிருப்பான். பாதி ராத்திரியில் எல்லோரும் உறங்கிய பிறகு மெதுவாகப் பீரோவைத் திறந்து பணத்தை எடுத்துக் கொண்டு காகிதக் கட்டுகளை வைத்து விட்டான். பின் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து தோட்டத்துச் சுவரைத் தாண்டிக் குதித்தான்' என்று முடிவு கட்டியது கந்தசாமியின் மூளை.

சந்தேகத்துக்கிடமின்றி முந்திய இரவு தன்னைத் தாக்கியது தங்கவேலுதான் என்று ஊகித்துக் கொண்டான் அவன். ஓடுகிற சமயத்தில் அவன் கவனித்து விடவேதான் தங்கவேலு ஊரைவிட்டே கிளம்பி விட்டான். இல்லாவிடில் இன்னும் கொஞ்சம் சாவகாசமாகத்தான் புறப்பட்டிருப்பான்.

மளமள வென்று வழக்கைத் தங்கவேலுவுக்கு எதிராக மேற்கண்டவாறு ஜோடித்துப் புலவரிடம் கூறிக் கொண்டே போனான் அவன்.

''இதோ பாருங்க, அவன் கொள்ளையடிச்சுக்கிட்டுப் போன பிறகு வெத்துக் காகிதங்களை எடுத்து வந்துட்டீங்க!'' என்று கூறிச் சிரித்தான் கந்தசாமி.

''ஆமாம் தம்பி, ஒரே ஒரு சந்தேகம்; காகிதக் கட்டுகளை எதற்காகப் பீரோவில் வைத்தான் அவன்?''

கந்தசாமி இதற்கு விளக்கம் கூறினான். ''நல்லா ஞாபகப் படுத்திப் பாருங்க. அடிக்கடி பீரோவைத் திறந்தால் யாராவது பணம் இருக்கிறதைப் பார்த்து விடப் போறாங்களேன்னு கண்ணம்மா எப்போதாவது ஒரு கண்ணோட்டம் பார்த்துவிட்டுச் சடக்குன்னு மூடிவிடுவாங்கன்னு நீங்களே சொல்லியிருக்கீங்க. இந்த ரகசியத்தை மருதம்மா மூலமாகத் தங்கவேலுவும் தெரிஞ்சுக்கிட்டிருப்பான். ஆகையால் பதிலுக்குக் காகிதக் கட்டுகளை வைச்சுவிட்டால் அதை நோட்டுக் கட்டுகள் என்று நினைச்சுக் கொஞ்சநாள் வரையில் சரியாகக் கவனிக்காமல் அசட்டையாக இருப்பாங்க. இவனும் உங்கள் வீட்டுக்கு வருகிறதை நிறுத்திக் கொள்ளுவான். சில நாட்கள் கடந்து விட்டால் பிறகு திருட்டு என்றைக்கு நடந்தது, எப்படி நடந்தது என்று தெரிந்து கொள்ள முடியாமலே போய் விடும். காகிதக் கட்டுகளை வைக்கவில்லேன்னு காலி பீரோவை உடனே பார்த்து விடுவாங்க. சமீபத்திலே வந்து போன இவன்மேலே சந்தேகம் ஏற்பட்டு விடலாம். அதனால்தான் இதைப் போலச் செய்திருக்கிறான்.... ஆனால் ஒண்ணு! இவ்வளவு முன்ஜாக்கிரதையாக வேலை செய்தவன், பீரோவை அசட்டையாகத் தொறந்து போட்டுட்டுப் போனதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்குது!''

புலவர் ரகசியமாகக் கூறினார்:

''அது என் தப்பு!.... நான் போன போது பீரோ பூட்டித்தான் இருந்தது. நான்தான்....''

கந்தசாமி சிரித்தான். 'அதை மட்டும் நீங்க ஞாபகமா பூட்டி விட்டு வந்திருந்தீங்க என்றால் கண்ணம்மாவுக்கு இப்போதைக்குச் சந்தேகமே ஏற்பட்டிருக்காது! விஷயமும் இப்போது வெளியாகி யிருக்காது!''

முடிவாகக் கந்தசாமி முத்துப் புலவரிடம் மேலே நடக்க வேண்டியவற்றையெல்லாம் கூறினான்.

''எல்லாம் நன்மைக்குத்தான் நடந்ததுங்க. இனிமேல் நம்ப எதிரிங்க தங்கவேலுவும் மருதம்மாவும் தொலைஞ்ச மாதிரிதான். கண்ணம்மாளும் வழிக்கு வந்துடுவாங்க! மற்றதெல்லாம் அப்புறம் சுலபமுங்க! முதலிலே நீங்க போய் உண்மையாகவே போலீஸிலே 'ரிப்போர்ட்' கொடுங்க!''

''புகாரா? புகார் எழுதி வைத்தால் ஆபத்தாக முடியும் என்று சொன்னாயே தம்பி!''

''அப்போது இருந்த நிலையில் சொன்னேன்! ரிப்போர்ட் கொடுத்தால்தான் ஆசாமியைப் பிடிச்சதும் சொத்து உங்க கைக்கு வந்து சேரும். தங்கவேலுமேல் தான் சந்தேகம் என்று மறக்காமல் சொல்லுங்க! மேல்கொண்டு நான் கவனிக்கக்கிறேன்!'' என்று புகார் செய்யவேண்டிய முறை, போலீஸாரின் கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டிய வழிகள் ஆகியவற்றை விவரமாகச் சொல்லிக் கொடுத்து அவரை அனுப்பி வைத்தான் கந்தசாமி. (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor : T. Sadasivam



# உங்களுக்கு நிவாரணம் அளிக்க

## நான்கு
## மருந்துகள் சேர்ந்த
# 'அனஸின்'




தலைவலி, ஜலதோஷம், ஜுரம், தசைவலி இவைகளின் முதல் அறிகுறிகள் தென்பட்டவுடனேயே 2 'அனஸின்' வில்லைகளை உட்கொள்ளுங்கள். வலியிலிருந்து துரிதமாயும் அபாயமின்றியும் நிவாரணம் அளிக்க, விஞ்ஞான முறையில் சேர்ந்துள்ள நான்கு மருந்துகளின் கலவை இதோ உள்ளது. எப்பொழுதும் தயாராக வைத்திருங்கள். வீட்டில் 'அனஸின்' வில்லைகளை கைவசம் வைத்திருங்கள்.

**லட்சோபலட்சம் ஜனங்களுக்கு நிவாரணம்**







Registered User:
GEOFFREY MANNERS & COMPANY PRIVATE LTD.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon